# இவனுடைய கைப் பணத்திலே ஒரு பகுதி சேமிப்பாகிறது!



மாதாமாதம் இவன் கைச் செலவுக்குப் பணம் பெறுகிறன். அது செலவாகி விடாது, சேமிப்பாகவும் தங்கும் என்பதை அறிந்தவன் இவன். அதனுல்தான் ஒவ்வொரு மாதமும் முதல்வேலையாக ஸ்டேட் பாங்கிலே சேமித்துவருகிறன். அவன் சேமிப்பு வளரும் விதமே இதுதான்.

## சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்

S, 230 TM

# கல்கி



## பொருளடக்கம்

பிலவங்க மார்கழி 16உ டிசம்பர் 31உ





"அன்பே! நான் உன் முகம் சந்திரன்மாதிரி இருக்குதுன்னு சொன்னது எவ்வளவு கரெக்ட்! உன் முகத்தைப் பார்த்து நாய் குலைக்குது பார்!"

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


மொழிவாரி ராஜ்யங்கள்
அமைக்கப்படும்
அதிகார வெறியர்கள்


ஹிந்தி அகில இந்திய
ஆட்சி மொழியாகும்
மொழி வெறியர்கள்


பெரும்பான்மை
PK


மொழி மசோதா
சிறுபான்மை



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 22



# வாழிய செந்தமிழ்!

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்தெட்டாம் ஆண்டு தமிழகத்தில் அமோக வைபவமாகப் பிறக்கப் போகிறது.

ஆம், தமிழன்னைக்குப் பட்டாபிஷேகம் செய்வது போல் சென்னை மாநகரத்தில் உலகத் தமிழ் மகாநாடு நடைபெறவிருக்கிறது. சென்ற வாரம் தமிழகத்தில் மொழி விஷயமாக நடந்த மனக் கசப்பளிக்கும் நிகழ்ச்சிகளுக்கு மாற்றாக அமுதத் தமிழுக்கு அன்பு விழா நடத்தப் போகிறோம்.

'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்று பாடிய பாரதியின் ஆன்மா குளிரும் வண்ணம், உலகின் பற்பல நாடுகளிலிருந்தும் தமிழன்பர்களும் அறிஞர்களும் சென்னையில் வந்து குழுமப் போகிறார்கள்.

பாரத ராஷ்டிரபதி, பாரத மாதா செப்பும் பதினெட்டு மொழிகளில் ரத்தினமாக விளங்கும் தமிழுக்கான மகோற்சவத்தைத் தொடங்கி வைக்கிறார்.

நல்ல தமிழறிஞர்களின் கருத்தரங்கு நமது அறிவுக்கு விருந்தளிக்குமெனில், நம் கண்ணுக்குக் களிப்பூட்டி, அதன் வழியே நம் இதயத்தில் பூரிப்பு ஊட்டும் அற்புதக் கலைப் பொருட்காட்சியும் நடைபெறுகிறது. பண்டைத் தமிழ்ப் பண்புகளே உருவெடுத்து வந்தாற் போன்ற ராஜாஜி இக்கண்காட்சியைத் திறந்து வைக்கிறார்.

சென்னையில் தமிழிலக்கியச் செம்மல்களுக்குச் சிலைகள் எழுப்பி, நம் மொழியின் பெருமையைப் பாரறியச் சாற்றப் போகிறோம்.

நகரையே கந்தர்வ லோகமாக்கப் போகும் அற்புத ஊர்வலமும் நடக்கப் போகிறது.

இவ்விழாவில் பங்கு கொள்ளும் பாக்கியசாலிகள் அனைவரையும் வாழ்த்துகிறோம். நம் நாட்டெல்லைக்கு அப்பாலிருந்தும் தமிழன்னையின் அடி சாரும் அன்பர்களையெல்லாம் இதயம் நிரம்பி வரவேற்கிறோம்.

விழாவுக்கான அருமையான ஏற்பாடுகளைச் செய்பவர்களுக்கு நம் உளமார்ந்த வாழ்த்துக்களை அளிக்கிறோம். விழாவின் வெற்றியில் அபரிமிதமான ஈடுபாடு காட்டியுள்ள தமிழக அரசாங்கத்துக்குக் குறிப்பாக நமது பாராட்டுதல்களை அளிக்கிறோம்.

இந்த விழா ஜனவரி இரண்டாந் தேதியிலிருந்து பதினோராம் தேதிவரை நடக்கவிருப்பதாக நிர்வாகிகள் அறிவிக்கிறார்கள். ஆயினும், இது பதினோராம் தேதியோடு முடிந்து விடும் விழாவல்ல. இவ்விழாவின் பயனாக நமக்குத் தமிழ் மொழியிலும் தமிழ்ப் பண்பிலும் உண்மையான நாட்டம் ஏற்படுமாயின் நம் ஆயுள் உள்ளளவும் இவ்விழா நம்முன் மணந்து கொண்டேயிருக்கும். 'தமிழ் தமிழ்' என்ற பேச்சு கடந்த பல காலமாக முழங்கி வந்த போதிலும் நம் மக்கள் தமிழ் இலக்கியத்தில் எந்த அளவுக்குப் பரிசயம் கொண்டிருக்கிறார்கள், தமிழகம் வளர்த்த அற்புதக் கலைகளில் எந்த அளவு தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள், பண்டைத் தமிழர் உருவாக்கிய நாகரிகத்தை எந்த அளவுக்குப் பேணுகிறார்கள் என்று பார்த்தால் பூரண திருப்தி இராது. இந்தப் பூரணத்துவத்தை உலகத் தமிழ் மகாநாடு நமக்கு ஏற்படுத்துமாக!

இப்புனித விழாவை ஒட்டித் தமிழன்னை நம் அட்டைப் படத்தில் தோன்றி ஆசி கூறுகிறாள். அன்னைக்குரிய பணியை ஆற்றும் பெருமிதமிக்க மக்களாக அவளது திருவடியைப் பணிகிறோம். தமிழ் வளர்ச்சிக்கும், தமிழர் மேம்பாட்டுக்கும் உண்மையாக உழைக்கும் பாங்கை அருளுமாறு அவளைப் பிரார்த்திக்கிறோம். அதே போதில் நாம் குறுகிய மொழிப் பித்தர்களாகி விடாமல், மனத்தில் எவ்வித களங்கமும் இன்றி, எங்கெங்கு உயர்வு தென்பட்டாலும் அதனைப் போற்றும் பக்குவத்தைப் பெறவும் வேண்டுகிறோம்.

**சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத் துலங்குக வையகமே!**

# உணர்ச்சியில் நியாயம் இருக்கையில் கிளர்ச்சி எதற்காக?

'ஹிந்தியை என்றே ஒருநாள் பாரதத்தின் தனி ஆட்சிமொழியாக்க வேண்டும்; அதற்கான பூர்வாங்கத்தை உடனே தொடங்க வேண்டும்; பப்ளிக் ஸர்விஸ் கமிஷன் முதலியனவற்றில் மற்றப் பிரதேச மொழிகளுக்கு இல்லாத அந்தஸ்தை உடனே ஹிந்திக்குத் தந்தாக வேண்டும்' என்பதெல்லாம் ஆட்சி மொழிச் சட்டத்தின் உட்கிடை. இவற்றுக்குத் தமிழகம் ஒருகாலும் சம்மதம் தர முடியாது. நமது பேரதிர்ஷ்டமாக, மொழி விஷயத்தில் தமிழ் மக்களின் ஏகோபித்த உணர்ச்சியை நூற்றுக்கு நூறு அப்படியே பிரதிபலிக்கும் தி. மு. க. அரசாங்கம் இப்போது நம் மாநிலத்தில் ஆட்சி புரிகிறது. நாடாளு மன்றத்தில் ஆட்சி மொழி மசோதாவை அது ஆதரிக்கவில்லை. இவ்விஷயமாகத் தமிழ் நாட்டு மக்களிடம் வாக்கெடுப்பு நடத்தி, தில்லிக்கு அதனை உறுதியாக உணர்த்தவும் முற்பட்டிருக்கிறார் முதல் அமைச்சர் திரு அண்ணாதுரை அவர்கள். ஹிந்தித் திணிப்புக்குத் தமிழக அரசு அணுவளவும் இடம் தராது என்பது சர்வ நிச்சயம். எனவே, நமது தமிழ் மக்கள், குறிப்பாக மாணவர் சமுதாயமாகிய இளைஞர் சமூகம்—இப்போது கிளர்ச்சிகளிலும் கலவரங்களிலும் இறங்கித் தமது உணர்ச்சிகளுக்கு உருக் கொடுக்க வேண்டிய தேவையில்லை. அமைதியான முறையில் நம் கருத்தை அழுத்தமாகத் தெரியப்படுத்தியே ஆகவேண்டும். ஏனெனில் நாம் ஈடுபட்டிருப்பது ஒரு தரும யுத்தம். நாம் நமக்கு மட்டும் எந்த விசேஷ அநுகூலத்தையும் கோரவில்லை. நாட்டின் எல்லாப் பகுதிக்குமிடையே ஒருவித ஏற்றத் தாழ்வும் உண்டாக்காமல் பல்லாண்டுகளாகப் பயனாகி வந்த நடைமுறையை நீடிக்க வேண்டும் என்பதே தருமம். ஒரு பகுதியினருக்கு மட்டும் விசேஷ அநுகூலம் தரும் மொழிச் சட்டம் சமதருமத்துக்கே முரணானது. தரும விஷயத்தில் விட்டுக் கொடுப்பதற்கும் ராஜி செய்து கொள்வதற்கும் இடமில்லையாதலால், போராட்டத்தை நாம் தொடர்ந்தேயாக வேண்டும். ஆனால் இந்தப் போராட்டம் தரும வழியில்தான் இருக்க வேண்டுமேயன்றி, பலாத்கார வழியிலல்ல.

பௌதிக சக்தியை விடச் சத்தியத்துக்கு அதிக சக்தி உண்டு என்பதை மறக்காமலிருப்போம். நம்முடைய தரப்பில்தான் தருமமும் நியாயமும் உள்ளன. அவை நிச்சயம் வென்றே தீரும். தரும யுத்தத்துக்குரிய நடவடிக்கைகளை மீறித் தமிழ் மக்கள் ரயிலை நிறுத்தினால் நமது பண்பாட்டின் முற்போக்கை நிறுத்துவதாகவே ஆகும். தமிழ் மக்கள் பெயர்ப் பலகைகள் மீது தார் பூசினால் அது நமது நற்பெயரின் மீது கரி பூசிக் கொண்டதாகவே ஆகும். தமிழ் மக்கள் கல்லெறிந்தால் நமது நன்னோக்கத்தையே அந்தக் கல் தாக்கி விரிசல் விடச் செய்யும்.

எனவே, தமிழக அரசாங்கத்தை நம்பி வன்முறைக் கிளர்ச்சிகளைக் கைவிடுவோம். இவ்விஷயத்தில் தமிழக அரசாங்கம் ராஜாஜியையே பூரணமாக நம்பியுள்ளது நமக்கு மேலும் தெம்பூட்டும் விஷயம். 'நாட்டின் காலில் முள் தைத்தாற்போல் ஆட்சி மொழிச் சட்டம் வந்துள்ளது. அந்த முள்ளைப் பக்குவமாக எடுக்க எனக்குத் திறமை போதாது. திரு ஈ. வெ. ரா. பெரியாரிடம் விஷயத்தை விட்டால் அவர் முள்ளை எடுப்பதற்குப் பதில் காலையே வெட்ட முற்படுவார். ராஜாஜியால் தான் முள்ளை நாசூக்காக எடுக்க முடியும்' என்று சமீபத்தில் தமிழக முதலமைச்சர் கூறியுள்ளார் அல்லவா? தொண்ணூறு வயது கண்ட ராஜாஜியும் பதினாறு வயதுப் பாலனின் உத்வேகத்தோடு இப்போரில் முழு மூச்சுடன் குதித்திருக்கிறார். நமது தரப்பில் தருமம் இருப்பதால் தனியொருவனாக நின்றேனும் போராடி வெற்றி காண முடியும் என இதய பூர்வமாக நம்பி, அதையே நமக்கு வாக்குறுதியாக அளித்துள்ளார். சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டபோது கூடத் தமக்குச் சுதந்திர ஆட்சி நல்லாட்சி தருமா என்ற ஐயம் எழுந்ததாகவும், ஆனால் தற்போது தம் இலட்சியத்தில் எவ்வித ஐயப்பாடும் இல்லாமல் பூரணமாக அதில் ஈடுபட்டிருப்பதாகவும் கூறியுள்ளார். அதனால் தான், ''மற்றவர்கள் யாவரும் இந்தப் போராட்டத்தை விட்டாலும் கூட நான் விடப் போவதில்லை'' என்று பிரதிக்ஞை பூண்டிருக்கிறார். ''உங்கள் அனைவரின் பிரார்த்தனைப் பயனால் நான் இன்னும் சில ஆண்டுகள் வாழ்வேன். தனி மனிதனாகப் போராடிய பழைய அநுபவம் எனக்கு உண்டு. மொழிப் பிரச்னையிலும் மன உறுதியுடன் தொடர்ந்து போராடுவேன்'' என்று அவர் நமக்கெல்லாம் வாக்குத்தத்தம் செய்திருக்கிறார்.

ஆட்சிமொழி மசோதா சட்டமாகி விட்டதால் இனி நாம் எதுவும் செய்வதற்கில்லை என்று பொருளாகாது. மசோதா சட்டமான போதிலும் அடிப்படையாக ஒரு பிரச்னை உள்ளது. அரசியல் சாஸனத்தின் ஆட்சி மொழிப் பகுதியைத் திருத்தாமலே, இம்மசோதா சில நடைமுறை மாற்றங்களைச் செய்துள்ளது. இது செல்லுபடியாகுமா என்பதே கேள்வி. இன்றைய மொழி வெறிச் சூழ்நிலையில் சாஸனத்தைத் திருத்துவதும் முடியாது. எனவேதான் குறிப்பிட்ட சாஸனப் பகுதியையே தாற்காலிகமாக ரத்து செய்து விட்டு, நாட்டின் சூழ்நிலை மாறிய பின் அறிஞர் மாநாடு நடத்திப் புது முடிவுகள் எடுக்க வேண்டும் என்று ராஜாஜி கருதுகிறார்.

நமக்குப் பின்பலமாக மாநில அரசாங்கம் உள்ளது; அதற்குப் பின்பலமாக ராஜாஜி இருக்கிறார்; அவருக்குப் பின்பலமாக தர்ம தேவதையே இருக்கிறது. அப்படியிருக்க நாம் ஏன் முறை தவறிய கிளர்ச்சியில் இறங்க வேண்டும்?

# இசை விழா உரைகள்

இவ்வருடம் சென்னையில் நடக்கும் சங்கீத உற்சவத் தொடக்க விழாக்களில் சில அருமையான கருத்துக்கள் வெளியிடப்பட்டுள்ளன.

தமிழிசையின் வெள்ளி விழாவைத் தொடங்கி வைத்த ராஜாஜி, தியாகையரின் பாடல்களும் கூடத் தமிழிசைதான் என்று கூறியதில் ஆழ்ந்த கருத்து பொதிந்துள்ளது. பக்திதான் இசைக்கு ஆதாரம் என்பதை அவர் அழுத்தமாக வலியுறுத்தியிருக்கிறார். சாஹித்யத்தின் பொருளுணர்ந்து வித்வான்கள் பாடவேண்டிய அவசியத்தை எடுத்தியம்பியிருக்கிறார்.

விழாவில் பேசிய முதல் அமைச்சர் இயற்கை வருணனை, வீரம் போன்ற உணர்ச்சிகளைக் கொண்ட பாடல்களும் இசை மேடைகளில் இடம் பெற வேண்டும் எனக் கூறியுள்ளார். உண்மையில் இவை இன்று நம் சங்கீதத்தில் இல்லாமல் இல்லை. ஆனால் தெய்வானுபவத்தில் இவை இழைத்துத் தரப்படுகின்றன. காவிரி பாயும் அழகை வருணிக்கும் தியாகையர் அவளை ராஜராஜேசுவரியாகப் பாவித்து வணங்குவார். வீரம் என்றால் அதுவும் ராமபிரான் தனது முன்னுச்சிக் கேசங்கள் ஆடக் கோதண்டத்தை இழுத்து நிற்பதாகவே, பக்தியுடன் கலந்து காட்சி தரும். இப்படியே நவரசங்களையும் இறையுணர்வுடன் குழைத்துத் தருகின்றனர் நமது வாக்கேயகாரர்கள்.

மியூஸிக் அகாடெமியில் தியாகையரின் இருநூற்றுண்டு விழாவைத் தொடங்கி வைத்த ஸ்ரீ பி. கோபால ரெட்டி அவர்கள், தியாகையருக்குத் திருவையாற்றில் இப்போதிருப்பதைக் காட்டிலும் மகோன்னதமான ஆலயம் அமைக்க வேண்டும் என்று கூறியுள்ளார். நல்ல யோசனைதான். அதைவிட முக்கியமாக, இன்று அதிருஷ்டவசமாக நம்மிடை எஞ்சியுள்ள ஓரிரு பழம்பெரும் வித்வான்களைக் கொண்டு தியாகையரின் பாடல்கள் அனைத்தையும் சுத்தமான பாடக் கிரமத்தில் ஒலிப் பதிவு செய்து வைத்தால், வருங் காலத்துக்கு அதுவே தியாகையருக்குப் பெரும் நினைவாலயமாக விளங்கும்.

இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸின் கச்சேரித் தொடரை ஆரம்பித்து வைத்த கவர்னர் உஜ்ஜல் சிங் அவர்கள், சங்கீதத்தின் தரத்தைத் தாழ்ந்துபோக விடக் கூடாது என்று கூறி, தரம் குறைந்த திரைப் பட இசையால் சாஸ்திரிய சங்கீதத்துக்கு ஏற்பட்டுள்ள தீமையை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

ஆக, அப்போதைக்குக் கேட்டு ரசிப்பதோடு மட்டுமின்றி, காரியாம்சத்தில் பின்பற்ற வேண்டிய கருத்துக்கள் இவ்வாண்டு இசை விழாவில் வெளியாகியுள்ளன.

## காமகோடியின் கருணைமொழி

பொருள்கள்மீது மனிதனுக்குப் பிரியம் ஏற்படுகிறது. மனிதனுக்கு எத்தனை பொருள்களின் மீது பற்று ஏற்படுகிறதோ அத்தனை அழுகைக்கு முளையடித்தாகி விட்டது என்று அர்த்தம். எந்தப் பொருளாயினும் என்றோ ஒரு நாள் ஒன்று, அது நம்மை விடவேண்டும்; அல்லது நாம் அதை விட வேண்டியிருக்கும். பிரிவின்போது துக்கம் ஏற்படத்தான் செய்யும். ஒரு பொருளின்மீது பிரியம் உண்டு என்றால் அதைத் தொக்கி அப்பொருளின் பிரிவும் இருக்கவே செய்கிறது. பிரிவின்போது துயரம் ஏற்படாமல் செய்துகொள்ள ஒரு வழியுண்டு. அதாவது மனம் ஒப்பிப் பொருளின் ஆசையிலிருந்து பிரிந்துவிட வேண்டும். இதற்குத்தான் வைராக்கியம் என்று பெயர்.



மாமரத்தில் மாங்காய் இருக்கிறது. காயாக இருக்கும்போது பறித்தால் காம்பில் தண்ணீர் சொட்டுகிறது. ஆனால் அதே மாங்காய் நன்றாகப் பழுத்து விட்டால் பழம் தானாகவே உதிர்ந்து விடுகிறது. காம்பில் கண்ணீர் வருவதில்லை. காயாக இருக்கும்போது அதில் கசப்பும் புளிப்பும் இருக்கின்றன. கசப்பு மாறித் தித்திப்பு வந்தவுடன் பழம் தானாக உதிர்ந்துவிடுகிறது. அதுபோல் மனப் பக்குவம் ஏற்பட்டு விட்டால் பிரிவில் வருத்தம் உண்டாகாது.





# பதினைந்தாவது மகாநாடு

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பதினைந்தாவது மகாநாடு சென்னை ராஜேசுவரி கலியாண மண்டபத்தில் டிசம்பர் 16, 17 தேதிகளில் வெகு சிறப்பாக நடைபெற்றது. திரு நா. மகாலிங்கம் வரவேற்புரை நிகழ்த்த, திரு சி. சுப்பிரமணியம் தொடக்கவுரை புரிய, இவ்வாண்டின் சங்கத் தலைவர் திரு அகிலன் தலைமையுரையாற்றத் தொடங்கிய விழா மறு நாள் மாலை வரை கலைகட்டி அறிவுக்கு விருந்தாகவும் தோழமைக்கு ஓர் இனிய வாய்ப்பாகவும் அமைந்தது!

திரு அகிலன் தமது தலைமையுரையில், பின்வருமாறு குறிப்பிட்டார்:

''இரண்டாவது உலகத் தமிழ் மகாநாட்டின் போது சென்னை நகரில் பல தமிழறிஞர்களுக்குச் சிறப்பாகச் சிலை வைக்கப் போகிறார்கள். தமிழ் எழுத்தாளர்களுக்குப் பல வகையிலும் வழிகாட்டியாக இருந்த கல்கி அவர்களுக்கும் ஒரு சிலை வைக்குமாறு தமிழக அரசை இந்தச் சமயத்தில் எழுத்தாளர்கள் சார்பில் நான் வேண்டுகிறேன்.''

இந்த ஆண்டு விழாவில் தமிழுக்கு அருந்தொண்டாற்றிய நால்வரில் இருவருக்குக் கேடயம் வழங்கியும் இருவருக்குப் பதக்கங்கள் வழங்கியும் பாராட்டியிருக்கிறார்கள். கேடயம் பெற்றவர்களில் ஒருவர், ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள், மற்றவர் பி. கோதண்டராமன் அவர்கள்.

ஔவை துரைசாமிப்பிள்ளை அவர்கள் பல சங்க இலக்கியங்களுக்கு உரை கண்டவர். பி. கோதண்டராமன் அவர்கள் பல அரும் மேனாட்டு இலக்கியங்களைத் தமிழுக்குத் தந்தவர். நல்ல விமரிசனக் கலை தமிழில் வளர வேண்டும் என்பதற்காகச் சிறப்பாகப் பாடுபட்டவர்.

பதக்கம் பெற்ற திரு ரா. தேசிகப்பிள்ளை அவர்களின் முதன்மையான இலக்கியத் தொண்டு தமிழ் இலக்கியங்களை ஃபிரஞ்சு மொழிக்குக் கொண்டு போனதுதான். ஆண்டாளின் திருப்பாவை, கம்பனின் சரசுவதி அந்தாதி, குமரகுருபரரின் சகலகலாவல்லி மாலை முதலிய கவிதை நூல்களை ஃபிரஞ்சு மொழியில் கவிதை நூலாகவே யாத்து ஃபிரஞ்சு மக்களின் பாராட்டையும் அரசாங்கத்தின் மதிப்பையும் பெற்றார். அப்படிப் பட்டவரைப் பாராட்டி, தமிழ் எழுத்தாளர் சங்கமும் நல்ல பெயரை எடுத்து விட்டது.

பதக்கம் பெற்ற மற்றவர் டாக்டர் மாலிக் முகம்மது எம். ஏ., எல். எல். பி.; பி. எச்டி. குமரி மாவட்டத்தில் தோன்றி வடநாட்டில் அலிகார் சர்வகலாசாலையில் ஹிந்தியில் பட்டம் பெற்று, அங்கு ஆராய்ச்சி மாணவராகவும் விரிவுரையாளராகவும் பணியாற்றி, தமிழை அங்கு பரப்பப் பலப் பல பணிகளாற்றியிருக்கிறார். தமிழ் இலக்கிய வரலாறு என்னும் விரிவான நூலை உத்தரப் பிரதேச ஹிந்தி சமிதி வெளியிட இருக்கிறது. 'தமிழ் வைணவ பக்தி இயக்கம்' பற்றிய ஒரு நூல் ஹிந்தியில் அண்மையில் வெளிவரவிருக்கிறது. தற்போது கேரள பல்கலைக் கழகத்தில் ஹிந்தி ஆராய்ச்சித் துறையில் பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார். அகநானூற்றை மலையாளத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். இப்படித் தமிழ், மலையாளம், ஆங்கிலம், ஹிந்தி இத்தனை மொழிகள் அறிந்து தமிழன்னைக்கு அரும் தொண்டாற்றிவருபவரைப் பாராட்டித் தமிழ் எழுத்தாளர் சங்கம் தனது கடமையைச் செவ்வனே செய்துவிட்டது!

மறு நாள் காலையில் சிறுகதை அமைப்பைப் பற்றிய ஒரு கருத்தரங்கம் நிகழ்ந்தது. பிற்பகல் நடந்த 'வெளிநாடுகளில் எழுத்துலகம் எப்படி இன்று இயங்குகிறது' என்பது பற்றிய கருத்தரங்கம் கடும் கோடை நாட்களில் வீசும் தென்றலைப்போல் சிலிர்க்க வைத்தது.

'தமிழ் இலக்கியத்தில் வளர்ச்சியா தேக்கமா' என்ற பொருள் பற்றி நடந்த பட்டி மண்டபம், நடக்காமல் இருந்திருந்தாலே சிறப்பாக இருந்திருக்கும். விதண்டா வாதம் வளர்ப்பதே பட்டிமண்டபத்தின் நோக்கமாகி விடுகிறது சில சமயங்களில். எழுத்தைக் கலையாக மதிப்பவர்கள் இதை மதிக்கமாட்டார்கள். இது சம்பந்தமாக திரு கு. அழகிரிசாமி அவர்கள் குறிப்பிட்ட கருத்துக்கள் மிகச் சிறப்பானவை!

'' 'விபீஷணன் துரோகியா ?' என்று ஒரு பட்டி மண்டபம் கம்பர் விழாக்களில் நடக்கும். அதைக் கம்பரோ, வால்மீகியோ கேட்டால் தூக்குப் போட்டுக் கொண்டு சாவார்கள்'' என்றார் கு. அழகிரிசாமி.

அரசியல் விஷயங்களில் வாதங்களும், விதண்டாவாதங்களும் சரியாக இருக்கலாம். இலக்கிய விழாக்களில் அன்பும் அனுதாபமும் ஸஹ்ருதயமும் வளர்க்கத் தூண்டுவதே நோக்கமாக இருக்க வேண்டும்!

# ராஜாஜியின் கருத்துக்கள்

காச்மீரம் என்பது ஒரு ராஜ்யம். அதை ஏதோ ஒரு சொத்துப் போல் நினைத்து, அது யாரைச் சேரவேண்டும் என்று பார்ப்பதில் பொருள் இல்லை. காச்மீரம் யாரைச் சேர்ந்தது என்பதல்ல பிரச்னை. அங்குள்ள மக்களுக்கு நல்லாட்சி கிடைக்க என்ன செய்ய வேண்டும் என்பதே பிரச்னை. ஷேக் அப்துல்லாவை எவ்வளவு காலம் காவலில் வைத்தாலும் சரி, கோடைக்கானலிலோ அல்லது இலட்சத் தீவிலோ வைத்தாலும் சரி, அவர் காச்மீரத்தின் அங்கீகரிக்கப்பட்ட தலைவர் என்பது உண்மை. அவர் எவ்வளவுக்கெவ்வளவு அதிக நாள் காவலில் வைக்கப்பட்டிருக்கிறாரோ அவ்வளவுக்கவ்வளவு அவரது செல்வாக்குப் பெருகி, காச்மீர சிங்கம் என்ற அவரது விருதும் பிரகாசம் பெறுகிறது. சிறிய மனிதர்களால் காச்மீரத்தில் அமைதி உண்டாக்க முடியாது. காச்மீரத்தில் அமைதியும் ஒழுங்கும் திருப்தியும் நிலவ வேண்டுமென இந்திய அரசாங்கம் விரும்பினால் இத்தனை நீண்ட ஆண்டுகளாக ஷேக் அப்துல்லாவுக்கு இழைத்த கொடுமைகளுக்குப் பரிகாரம் காண வேண்டும். காச்மீர மக்களுக்கு வழி காட்டுபவரும், அவர்களது ஆசானும் அவரே என்ற அந்தஸ்தை ஒளிவு மறைவின்றி ஒப்புக்கொள்வதொன்றே பரிகாரமாகும். ராஷ்டிரபதி ஆட்சியின் கீழ் அவர் காச்மீரத்தில் சுதந்திரமான புதிய தேர்தல் நடத்தி அந்த ராஜ்ய நடவடிக்கைகளை மேற்கொள்வதற்குத் தக்க சர்க்காரை அமர்த்தலாம். ஷேக் அப்துல்லாவுக்கு உரிய ஸ்தானத்தைக் கொடுப்பது இரண்டு பூனைகளுக்கிடையே உள்ள மாமிசத் துண்டு போல் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்குமிடையே காச்மீரத்தைக் காண்கிற பொருத்தமற்ற நிலையை அகற்ற உதவும்.

ஃ ஃ ஃ

வட இந்தியாவிலுள்ள ஹிந்தி அபிமானிகளின் நெரிசலுக்கு ஆட்பட்ட தில்லி அரசாங்கம் முன் யோசனையின்றி ஆட்சிமொழி மசோதாவை நிறைவேற்றியிருக்கிறது. இதைக் காங்கிரஸ் அக்கிராசனர் திரு காமராஜ் அவர்களே வெளிப்படையாக ஆட்சேபித்துள்ளார். பிரதமரவர்களும், அவருக்கு ஆலோசனை சொல்வோரும் என்னுடைய எச்சரிக்கையையும் புத்திமதியையும் கேட்காவிடினும், காங்கிரஸ் அக்கிராசனரின் ஆட்சேபணையைக் கவனிக்க வேண்டும்.

மிகவும் மரியாதைக்குகந்தவரும், நல்லெண்ணம் கொண்டவருமான பிரதமரவர்கள் தவறான வழியில் அழைத்துச் செல்லப்படுகிறார் — அச்சுறுத்தப்படுகிறார் என்றும் சொல்லலாம். இதன் விளைவாக இன்றைய இந்தியாவும் எதிர்கால இந்தியாவும் நாசமாக்கப்படுகின்றன.

ஹிந்திக் கூட்டத்தினர் தங்களது பலாத்காரத் திட்டத்தினால் வெற்றிபெற முடியாது. இதனால் எதிர்ப்பு உணர்ச்சி ஓங்கி, உணர்ச்சியின் அடிப்படையில் நாட்டு ஐக்கியம் குலையும். அதிலிருந்து, அரசியல் ரீதியில் ஒரு பயங்கரமான பிளவு உண்டாகும். இன்று அநுபவம் முதிர்ந்த அரசியல்வாதிகளும், ராஜநீதி நிபுணர்களும் சரியான மார்க்கத்தைக் காட்டிக் கொடுப்பதில் தீவிரமாக முயற்சி எடுக்க வேண்டும். அரசியலில் மட்டுமின்றி, கல்வி, நாகரிகம், எதிர்கால முன்னேற்றம் இவற்றையும் பாதிக்கக்கூடிய பயங்கரத்தைத் தடுப்பதில் அறிஞருலகம் பிரதமரின் கரங்களை வலுப்படுத்த வேண்டும். ஸ்ரீ சாக்லா, ஸெடல்வாட் போன்ற அறிஞர்களின் எச்சரிக்கையைப் பண்புமிக்க நம் பிரதமர் புறக்கணிக்க இயலாது. ஆனால் இவர்களைப் போல் மற்ற அறிஞர்கள் முன்வராமல், ஹிந்தியர்களின் பலாத்காரச் செயல்களுக்கு நடுங்கிக் கொண்டும், எழுத்தறிவில்லாத ஏராளமான மக்களிடம் தங்கள் கவர்ச்சியை இழக்கப் பயந்து கொண்டும் பேசாதிருக்கிறார்கள். பலாத்காரத்துக்கு அடிபணிவதால் பெறும் லாபங்களைவிடத் தேச நலன் என்பது பெரிதாகும்.

ஃஃஃ

அணு ஆயுதச் சோதனைகளை எல்லாச் சூழலிலுமே தடை செய்ய வேண்டும் என்று ஐ. நா. பொதுச் சபை கேட்டுக் கொண்டிருக்கிறது. இது போதாது. அணு ஆயுதங்களை அடியோடு தடை செய்ய வேண்டியதே இன்று உலக மக்கள் உரிமையோடு எதிர்பார்க்கும் நடவடிக்கை. காந்தியடிகளின் நூற்றாண்டு விழாவை அணு ஆயுதத் தடை மூலம் கொண்டாட வேண்டும். அணு ஆயுதங்களைப் பிரயோகிப்பதால், போரிடும் இருநாடுகளை அது பாதிப்பதோடு நிற்பதில்லை. உலக மக்கள் அனைவருமே பாதிக்கப்படுவர்.

இதற்கு ஸயன்ஸ் நிபுணர்கள் சான்று கூறுவர். எனவே, அவர்கள் அணு ஆயுதத்தைப் பூரணமாகத் தடுக்க வேண்டும் என்று கோருவதற்கு உரிமை பெற்றவர்கள். இவ்வாறு சட்டம் செய்தபின்னும் சில நாடுகள் அதனை மீறக்கூடும். என்றாலும், அதற்காக உலகம் முழுவதையும் பாதிக்கும் நடவடிக்கைகளை எந்த நாடும் பகிரங்கமாகச் செயலாக்குவதற்கு அநுமதிப்பதற்கில்லை. அணு ஆயுதத்தைத் தடுக்கும் வகையில் உலகச் சட்டம் ஒன்று இயற்றப்பட்டபின் அச்சட்டத்தை மீறுபவர்களும் கடைசியில் உலகக் கருத்துக்கு அடிபணியவே நேரும். உலகம் ஒப்பாத அணு ஆயுத உற்பத்திக்காக ஏராளமான பொருளைச் செலவிடுவதை எந்தத் தேசத்து மக்களும் அநுமதிக்கமாட்டார்கள்.

ஃஃஃ

ஸ்ரீ ரகுபதி ஸஹாய் அவர்களுக்கு இந்திய இலக்கியகர்த்தர்களிடையே தனி முக்கியத்துவம் உண்டு. அலகாபாத்தில் வாழ்ந்து வரும் அவர் உருது மொழியில் அருமையான பன்னிரண்டு நூல்கள் எழுதியுள்ளார். கவிதைக்காக 1961ல் சாகித்திய அகாதெமிப் பரிசும் பெற்றிருக்கிறார். சமீபத்தில் இவரை அகில இந்தியத் தொடர்பு மொழி சம்பந்தமாக 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' நிருபர் பேட்டி கண்டார். அப்போது ஸ்ரீ ரகுபதி ஸஹாய் சொன்னார்: ''அகில இந்தியத் தொடர்பு மொழியாகப் பணியாற்றுமளவுக்கு வளர்ச்சியோ நூல்வளமோ எந்த இந்திய மொழிக்குமே இல்லை. அகில இந்திய

நிர்வாகத்துக்கும், நவீன உயர் கல்விக்கும் ஆங்கிலத்தை விட்டால் வேறு வழியில்லை.''

ஃஃஃ

'நியூயார்க் டைம்ஸி'ன் தில்லி நிருபருடைய கருத்துக்கள் நமது கவனத்துக்கு உரியனவாயின், இதோ சிலரென்று சில வாசகங்கள் :

''ஸ்ரீமதி இந்திராகாந்தி பிரதமராக இரண்டாண்டு பணியாற்றியபின் தம்மைத் தாமே காத்துக் கொள்ள முடியும் என்பதைக் காட்டி விட்டார். தேசத்தை எப்படிக் காப்பது என்பதை அவர் அறிந்து கொண்டாரா என்பது வேறு விஷயம். இதைப் பற்றி ஆழ்ந்த கருத்துமாறுபாடுகள் உள்ளன.''

ஃஃஃ

தில்லியிலுள்ள 'சோஷலிஸ்ட்' சர்க்காரின் ஆதரவில் நடைபெறும் சர்க்கார் தொழிலகங்களின் தோல்விகளை நிறையக் கண்டுவிட்டோம். இப்போது இந்தத் தோல்விக் கதையில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்குவதாகப் பயம் காட்டியுள்ளனர். அதாவது, எல்லாப் பாங்குகளின் மீதும் 'சமூகக் கட்டுப்பாடு' என்ற ஒன்றைப் பிரயோகிக்கப் போகிறார்கள்.

அடிப்படையில் நான் ஒரு கிராமாந்தர மனிதன். அதனால் ஒரு கிராமப்புற உதாரணம் சொல்கிறேன். கிராமங்களில் மழைத் தண்ணீரைத் தேக்கி வைத்து விவசாயிகளின் பாசனத்துக்கு உதவுவதற்காக ஏரிகள் உண்டு. பெரிய நீர்ப்பாசன வசதிகள் இல்லாதவருக்கு இந்த ஏரிகளே உதவி புரிந்தன. விலைமதிக்கவொண்ணா இந்த ஏரிகள் மண்ணினால் தூர்க்கப்பட்டு அடைந்து போயிருப்பதைப் பார்த்திருக்கிறேன். முன்பு இரண்டு போகப் பாசனத்துக்கு நீர் தந்த ஏரிகளிலிருந்து இப்போது ஒரு போகத்துக்குக்கூட நீர் பெற முடியவில்லை. நீர்க்கால்களின் வழியாக இந்த ஏரிகளுக்கு மழை ஜலம் வரும் போது, அந்த மழை ஜலத்தோடு வரும் நுண்மணலின் வண்டலே ஏரிக்கு மண்ணடித்து அதைத் தூர்த்துவிடுவதுதான் இதற்குக் காரணம். இதே போல் நம் பாங்குகளிலும் மண்மேடடிக்கச் செய்து அவற்றைக் கொல்வதுதான் 'சமூகக் கட்டுப்பாட்டு'த் திட்டம். இதை எதிர்பார்த்தேதான், சிந்தனாசக்தி மிகுந்த நமது நிதிமந்திரியவர்கள் தொழிலதிபர்களிடம் பேசுகையில் கிராமப் புறங்களில் இருப்பதாகச் சொல்லப்படும் சேமிப்புகளைத் திரட்டி, அவற்றை அவர்களது முதலீட்டில் பயன்படுத்திக் கொள்ளச் சொல்கிறார். இது ஒரு நாசகரத் திட்டம் என்பது விரைவிலேயே வெளிப்படும்.

பாங்கு நடத்துபவர்களும், தொழிலதிபர்களும் பாங்குத் துறை, தொழில்துறை ஆகியவற்றில் தாங்கள் கொண்டுள்ள அநுபவ அறிவின்மீதமைந்த கருத்தைத் தெரிவிப்பார்கள் என்று நம்புகிறேன். பாங்குகளின் மீது சமூகக் கட்டுப்பாடு ஏற்படுத்துவதற்காக ஸ்ரீ மொரார்ஜி தேசாய் வகுத்துள்ள திட்டத்தைப் பார்க்கும் போது, மத்திய சர்க்கார் பொறுப்பை எடுத்துக் கொள்ளாமல் அதிகாரத்தை மட்டும் எடுத்துக் கொள்வதற்கு இது இன்னோர் உதாரணமாகத் தெரிகிறது. விவசாயத்துக்கோ, மற்ற கிராம வாழ்வுக்கோ எவ்விதத்திலும் பயன் இல்லாமல், தொழில் துறைக்கு இடைஞ்சல் உண்டாக்குவதில் மட்டுமே இத்திட்டம் முடியும்.

ஃஃஃ

சட்டசபை அங்கத்தினர்கள் கட்சி மாறுவதைச் சட்டப்படி தடுக்க வேண்டும் என்று சிலர் இலேசாகப் பேசுகிறார்கள். இவர்கள் நமது அரசியல் சாஸனமும் சட்டங்களும் அரசியல் கட்சிகளைப் பற்றிக் குறிப்பிடவே இல்லை என்பதை நினைவில் கொள்ளவேண்டும். சட்டசபைகளில் கட்சிகளை அங்கீகரித்திருப்பதும், அவற்றுக்கு இடம் ஒதுக்குவதும் விவாதம் ஒழுங்காக நடைபெற வேண்டிய சௌகரியத்தை யொட்டி சபாநாயகரின் பொறுப்புக்கு விடப்பட்ட அம்சங்கள். இதனால் கட்சி அரசியல் முறையைச் சட்டபூர்வமாக்கிவிட முடியாது. அங்கத்தினர்கள் ஒரு கட்சியிலேயே இருப்பதென்பது, அந்தந்தக் கட்சித் தலைவர்களின் விவேகம், அறிவுக் கூர்மை, நன்னடத்தை இவற்றைப் பொறுத்த விஷயமே யன்றி, மெஜாரிட்டியினர் செய்கிற சட்டத்தைப் பொறுத்ததல்ல.

அரசியல் கருத்து என்பது தனிப்பட்டவரின் தடுக்கவொண்ணா சுதந்திர உரிமை. இதை எந்த அரசியல் கட்சியும் தொழிற் சங்கமும் கட்டுப்படுத்த முடியாது.

ஃஃஃ

தனிப்பட்டவர்களுக்குச் சொத்துரிமை இல்லாமல் எல்லாம் சமூக உடைமையாக இருக்கும் முறை ஆதிவாசியின் வாழ்முறையாகும். மக்கட் தொகை சிறு சிறு கூட்டங்களாக வாழ்ந்தபோது இம்முறை நல்லதாக இருந்தது. ஆனால் ஏராளமான மக்கள் வாழும் விஸ்தாரமான ஒரு நாட்டில் மத்திய திட்டத்தின் மூலமும், வளர்ந்து கொண்டே யிருக்கும் அதிகார வர்க்கத்தின் மூலமும் அனைத்தையும் சர்க்கார் உடைமையாக்கி மக்களின் சொத்துரிமையை இழக்கச் செய்தால் அது நிர்வாகச் சீரழிவிலும் தோல்வியிலும்தான் முடியும். சில கருத்துக்களில் இருக்கும் பற்றுக் காரணமாக, சாத்தியமற்றவற்றைச் செய்ய முற்படும் தப்பிதத்துக்கு ஆளாகிவிடக் கூடாது. தனிமனிதர்களுக்குச் சுய ஈடுபாடு இருந்தாலே பொருளாதார வளர்ச்சியும், சுபிட்சமும் ஏற்படும். எனவே, சுய ஈடுபாட்டுக்குப் போதிய ஊக்கம் அளிக்க வேண்டியது அவசியம். இன்று இந்தியாவில் மத்தியத் திட்ட முறையையும், அதிகார வர்க்க நிருவாகத்தையும் தலையீட்டையும் முன்யோசனையின்றி இறுகப் பிடித்துக் கொண்டிருப்பதால் முதலீடு செய்பவர்கள் சட்ட விரோதமான முறையில்தான் தங்களுக்கெனப் பணம் பண்ணிக் கொள்ள முடிகிறது. நேரடியாகவும், மறைமுகமாகவும் சர்க்கார் விதிக்கும் வரிகளைச் செலுத்திய பின் முதலீட்டை வளர்ப்பதற்கோ, அதில் சிரத்தை செலுத்துவதற்கோ உற்சாகமில்லாமல் போகிறது. இதனால் முதலீட்டாளர்கள் தவறான நடவடிக்கைகளில் இறங்குவதற்கே அதிக இடம் ஏற்படுகிறது.



1. தமிழிசையின் வெள்ளி விழாவை ராஜாஜி அவர்கள் தொடங்கி வைத்து இனிய உரையாற்றினார். *தமிழகத்தின் முதன் மந்திரி அண்ணாதுரை இன்னிசை விழாவுக்குத் தலைமை தாங்கினார். இவ்வருட இசைப் பேரறிஞராகிய திருமுருக கிருபானந்த வாரியாரையும் சங்கத் தலைவர் திரு நாராயணசுவாமிப் பிள்ளையையும் உடன் காண்கிறோம்.





2. இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் ஆதரவில் வாணிமஹாலில் நடக்கும் சங்கீத விழாவைச் சென்னை கவர்னர் உஜ்ஜல் சிங் தொடங்கி வைத்தார். முதல் நாளன்று பரத நாட்டியமாடிய வேலூர் ராஜலக்ஷ்மிக்கு கவர்னர் பரிசளித்துக் கௌரவிக்கிறார்.





3. மியூசிக் அகாடமியின் 41வது சங்கீத விழா மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜரின் இருநூற்றாண்டு சங்கீத விழாவாக அமைந்து விட்டது. உத்தரப்பிரதேச கவர்னர் கோபால் ரெட்டி அவர்கள் தியாகராஜ சங்கீத மகோத்சவத்தைத் தொடங்கி வைத்தார். அகாடமித் தலைவர் திரு டி. எல். வெங்கடராமய்யர் அருகமர்ந்திருக்கிறார்.


குளுமைக்கும், புத்துணர்ச்சிக்கும்
டி. எஸ். ஆர்.
சந்தனாதித் தைலம்
TSR
T.S.R.
டி. எஸ். ஆர். & கோ.
கும்பகோணம் & மதராஸ்
Criterion-TSR-1528

# பாரீஸ் நாட்டு ஏகலைவன்

மகாதானபுரம் ராஜா

[உலகத் தமிழ் மகாநாட்டுக்கு ஒரு யோசனை தருகிறார் கட்டுரை ஆசிரியர் ]

**1891**ம்—வருடம் ஏப்ரல் மாதம் தமிழ்த் தாத்தா உயர்திரு உ. வே. சாமிநாதய்யர் அவர்களுக்குப் பாரீஸிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தத் தபால் உறையின்மேல் விலாஸம் ஆங்கிலத்திலும், தமிழிலும் எழுதப் பட்டிருந்தது. உறையைக் கிழித்த அவர், உள்ளே முத்து முத்தான எழுத்துக்களில் ஒரு தமிழ்க் கடிதம் இருப்பதைக் கண்டார். கடிதம் எழுதியவரின் பெயரைப் பார்த்ததும் திரு சாமிநாதய்யருக்கு வியப்பு அதிகமாகி விட்டது. பேராசிரியர் வின்ஸோன் என்பது அக்கடிதம் எழுதியவரின் பெயர். பாரீஸ் மாநகரத்திலிருந்து வின்ஸோன் என்ற பிரெஞ்சுக்காரர் தமிழிலேயே கடிதம் எழுதி யிருப்பது மட்டுமின்றி அதன் தலைப்பில் ஒரு புதிய தமிழ்ச் செய்யுளும் தந்திருந்தார். அந்தக் கடிதம் வருமாறு:

''மாஸ்ரீ சாமிநாதையரென்னும் பெரும் புகழ் பொருந்திய தமிழாசிரியராம் மகா சிறப்பிற் புலவர் தமக்கு நாம் பாரிசு மா நகரத்தில் தமிழாசிரியர் எழுதுபவையாவன:

சிந்தா மணியாஞ் சிறப்புடைய காப்பியமே
பொன்றுதின் மாலை பொருந்தி வரக்—
கண்டேன்
சிலப்பதி கார முதற் சீர்நூல்கள் நான்கு
மளித்தலா மென்ம ரறைந்து

''நீர் 1887-ஆம் ஆண்டில் அச்சிற்பதிப்பித்த சிந்தாமணியைக் கண்டு மிகவு மதிசயமா யிருந்தோமென்றும் நீர் செய்த வுலகோர்க் குப் பெரிய வுபகார மறிந்தோமென்றும் இன் னும் பழைய புத்தகங்களச்சிற் பதிப்பித்தற் குரிய வாயுண்டென்றும் உமக்கு நாமெழுத வேண்டுமென் றெண்ணிக் கொண்டு வரு கிறோமாதலால் மிகவும் களிகூர்ந்து வாழ்வோ மெப்போ தென்றால் சிலப்பதிகாரம், மணி மேகலை, குண்டலகேசி, வளையாபதி யென்னும் வேறு நாற்பெருங் காப்பியங்கள் பரிசோதித் துக் கொடுத்த வப்போதே சொல்லுவோம்.

''சிலப்பதிகாரமோ வென்றால் சென்னப்பட் டணத்திலே முன் 1885-ஆம் வருஷத்தில் அதன் முதற் காண்டம் உரையின்றிக் கொடுத் தார்களென் றறிகின்றோ மாஞலிரண்டாம் மூன்றும் தருக வென்று பல விசேடமா யறவிய மனத்த ரெல்லோருங் கேட்போர்.

''மணிமேகலையோ வென்றால் நங்கட் கண் ஒரு கையெழுத்துப் பிரதியுண்டு. ஆனாலந்தப் பிரதியெழுதியவன் பழைய வெழுத்துக்க ளறி யாத படியினாலே சில கவிகளும் வார்த்தை களும் எழுதாமல் விட்டான். ஆதலினாலந்தப் பிரதி படித்தற்குரிய தல்லது.

''சிறப்புப் பொருந்திய நாலவைக ளச்சிற் பதிப்பித்தாலன்றி விட்டால் கையெழுத்துப் பிரதிகளடைக்கலாமோவென்று கேட்கிறோம். இங்குதான் பாரிசுமா நகரத்தில் **printing type** உண்டு. இதுவுமல்லாமல் **French** பாடைக் குத் திருப்பி யாவர்க்கும் பயன் செய்ய அளிக்கக் கூடுமென்று மூமக்கு நாமெழுது கின்றோம்.

''எம்முடைய புன்றமிழை உம்முடைய தயையினாலேயே வாசித்துக் கொண்டால் ஒரு காகித மெமக்கு மறுபடி யனுப்பினால் மிகவும் சந்தோடமாயிருப்போம்.

சுவாமியுடைய கிருபையெல்லாம் உம்மேல் வருகவென்று உங்கள் **colleague and servant** ஆகியிருக்கிறோம்.

**— Prof J. Vinson''**

தமிழிலுள்ள கவிதைகளையும் மற்ற கலைச் செல்வங்களையும் தேடிப் புதிப்பிக்க வேண் டும் என்று விரகதாபம் கொண்ட தமிழ்த் தாத்தாவுக்குத் துளி சந்து கிடைத்தால் போதாதா? பாரீஸிலும் தமிழ்ச் சுவடிகள்



இருக்கின்றன என்று அறிந்த பிறகும் சும்மா இருக்க மனம் வருமா? சீவக சிந்தாமணியைப் படித்து மிக்க இன்பத்தை அடைந்தவரும், அதனோடு ஒருங்கு வைத்து எண்ணப்படும் சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி இவைகளும் வெளிவர வேண்டும் என்று விரும்புகிறவருமாகிய பாரிசு நகரத்துத் தமிழாசிரியர் ஜூலியன் வின்ஸோனுக்கு உயர் திரு சாமிநாதய்யர் உடனே கடிதமெழுதினார்.

அக்கடிதத்தில் பாரிசு நகரத்தில் என்ன என்ன ஏட்டுச் சுவடிகள் உண்டென்று விசாரித்தார். அவர் எவ்வாறு தமிழ் படித்தார் என்பதையும் எழுதும்படி கோரியிருந்தார். அப்போது திரு சாமிநாதய்யர் சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் அச்சிடும் பொருட்டு ஆராய்ச்சி செய்து வந்தார். அந்த நூலின் உரைச் சுவடிகள் பாரிசில் கிடைக்குமா வென்று கேட்டு வின்ஸோனுக்கு எழுதினார். உடனேயே தமிழார்வம் கொண்ட அந்தப் பிரஞ்சுக்காரர் பதிலிட்டு விட்டார்.

''எனதன்பிற்குரிய மகா சாஸ்திரிகளே,

''நாம் போன மாசமுமக் கெழுதின காகிதம் உங்கிட்ட வந்ததுக்கு முன்னே நீர் எமக் கனுப்பிய காகிதமடைந்தது. அதில் நீர் சிலப்பதிகார மச்சிற் பதிப்பித்தற் குரிய தென்றும், அதைப் பரிசோதித்துக் கொண்டு வருகிறேனென்றும், கண்ட பிரதிகளில் உரை தப்பியிருக்கிற தென்றும், இங்கு பெரிய புத்தக சாலையிற் சிலப்பதிகாரத் தொரு கையெழுத்துப் பிரதி யுண்டோ வென்றும் கேட்கிறீர்.

''அதுக்கு உத்தரங் கொடுக்க வருகிறோம். **Bibliothique Nationale** என்கிற பெரிய புத்தக சாலையிலிருக்கின்ற ஓராயிரந் தமிழ்க் கையெழுத்துப் புத்தகங்களெமக்கு நன்றாய்த் தெரியும். அவைகளின் **list or catalogue** பண்ணினோமானால் அவற்றுள் சிலப்பதிகார மில்லை.

''பழைய புத்தகங்களோ வென்றால் அந்தச் சாலையிலே மணிமேகலை ஒரு கையெழுத்துப் பிரதியுண்டு. ஆனால் நாம் போன மாசம் எழுதிய காகிதத்திற் சொன்னபடி அந்தப் பிரதியில் பற்பல கவியும் வார்த்தையும் எழுதாமல் விட்டிருக்கின்றது. அந்தப் பிரதியிலும் மூல மாத்திர முறையின்றி வருகிறது. அது ஓலைப் பிரதியாகும். நாம் அதைக் கடுதாசியில் எழுதினோம், நங்கட் சிறு புத்தக சாலையிலே வைக்க. ஆதலால், நீர் அதைப் பார்க்க வேண்டுமேல் அந்தக் கடுதாசி பிரதி யனுப்புவோம். நீரதைக் கண்டுமில்லாத கவிகளும் வார்த்தைகளும் போட்டுத் திருப்பி அனுப்பலாம்.

''நாமிங்கு தமிழைப் படித்தோமல்ல. நாம் பிள்ளையாயிருக்கும் போது எங்கட் தகப்பனார் காரைக்காலிலே **French Judge** ஆயிருந்தாரப்போதே தமிழைப் பேசவு மெழுதவும் படித்தோம். இங்கு நாம் செய்த சில கவிகளுமக்கு அனுப்புகின்றோம்.

இங்ஙனம்,
அன்புடையவன்
— **Julien Vinson**''

பிறகு சாமிநாதய்யர் மணிமேகலையிலிருந்து சில பகுதிகளை எழுதி அனுப்ப வேண்டுமென்று வின்ஸோனுக்கு எழுதினார். அவர் மிகுந்த ஊக்கத்துடன் அந்நூலிலுள்ள பதிகத்தை மாத்திரம் எழுதியனுப்பினார். முழுதும் எழுதியனுப்ப வின்ஸோன் சித்தமாக இருந்தும் அவை தம்முடைய ஆராய்ச்சிக்கு உதவியாக இராதென்று திரு சாமிநாதய்யர் அவருக்குத் தொந்தரவு கொடுக்கவில்லை.

வின்ஸோன் தம்முடைய ஒவ்வொரு கடிதத்திலும் பழைய தமிழ் நூல்கள் வெளிவர வேண்டுமென்பதில் அவருக்கிருந்த ஆவலை வெளியிட்டார். பிரஞ்சு மொழியில் அவைகளை மொழிபெயர்க்க அவர் விரும்பினார். சிந்தாமணியின் சுருக்கமொன்றைப் பிரஞ்சு மொழியில் எழுதியிருந்தார். அதில் அவர் திரு சாமிநாதய்யரை மிகவும் பாராட்டி எழுதியுள்ளார்.

வின்ஸோனைப் பற்றித் திரு சாமிநாதய்யர் ''தமிழ் நாட்டிலே பிறந்து தமிழ்க் கல்வியுடையாரோடு பழகித் தமிழாராய்ச்சி செய்து வருவதில் எனக்கு ஆச்சரியம் ஒன்றும் புலப்படவில்லை. அயல் நாட்டில் ஒரு துணையுமின்றித் தமிழ் ஆராய்ச்சி செய்து வரும் ஜூலியன் வின்ஸோனுடைய தமிழன்பு தான் எனக்கு மிகவும் சிறந்ததாகத் தோன்றுகிறது'' என்று எழுதியுள்ளார்.

தமிழிலே பதிப்பிக்கப்படுகின்ற நூல் பதிப்புகளை மிக அன்போடு வின்ஸோன் எதிர் பார்த்துக் கொண்டேயிருந்தார். திரு சாமிநாதய்யர் அனுப்பும் புதிய புத்தகங்களை உடனே ஆழ்ந்து படித்துப் பாராட்டி எழுதுவார். இன்னின்ன விஷயங்களை நூதனமாக அறிந்து கொண்டேன் என்று விவரிப்பார்.

''உரை குறையதாயினுஞ் சிலப்பதிகார மச்சிற்பதிக்க வேண்டும்'' என்று விரும்பிய வின்ஸோன் சாமிநாதய்யரால் சிலப்பதிகாரப் புத்தகம் வெளியிடப்பட்டவுடன் அடைந்த இன்பத்துக்கு எல்லையே இல்லை.

உடனே திரு சாமிநாதய்யரைப் பாராட்டி அகவலாக ஒரு கடிதம் எழுதினார். அந்தக் கடிதத்தின் தலைப்பில் பிள்ளையார் சுழி இட்டிருந்தார். 'குருவே துணை' என்று எழுதி ஆசிரியப்பா என்று தலைப்பிட்டு எழுதியிருந்தார்.

எட்டுத் தொகை நூல்களில் ஒன்றாகிய பரிபாடலைப் பதிப்பிக்கும் செலவைத் தாமே ஏற்றுக் கொள்வதாகத் திரு வின்ஸோன் அய்யர் அவர்களுக்கு எழுதினார். வில்லைப் புராணம் என்ற நூலை திரு சாமிநாதய்யருக்கு அனுப்பி வைத்தார். அது 494 செய்யுட்களை உடையது. அதைப் பற்றித் திரு சாமிநாதய்யர் எழுதுகையில் :

''அந்தப் புத்தகத்தைப் பற்றி நான் கேட்டு எழுதியிருந்த வாக்கியங்களால் எனக்கிருந்த ஆர்வத்தை அறிந்து தம் கைப்பட அந்நூல் முழுவதையுமே எழுதி அனுப்பிவிட்டார். ஏட்டுச் சுவடியைப் பார்த்து எழுதுவது எவ்வளவு சிரமமென்பது எனக்கு நன்றாய்த் தெரியும். தமிழ் நாட்டில் அங்ஙனம் எழுதக்கூடியவர்கள் மிகச் சிலரே. தமிழ்நூல்களைச் சிரத்தையோடு படிப்பவர்களே அதிகமாக இல்லாத போது ஏட்டுச்சுவடியைப்

படிப்பதாவது எழுதுவதாவது'' என்று குறிப்பிட்டார்.

அப் புராணத்தின் தலைப்பில் சிவலிங்கத்தின் உருவத்தையும் நந்தி யுருவத்தையும் திரு வின்ஸோன் வரைந்திருந்தார். அந்தப் புராணம் வீரராகவரென்னும் பெயருடைய ஒரு புலவரால் இயற்றப்பட்டது. புதுச்சேரிக்கு அருகில் உள்ள வில்லநல்லூர் தான் அந்நூல் குறிப்பிடும் வில்வேச்சர மென்னும் வைப்புஸ்தலம்.

அவர் தமிழ் இலக்கணமொன்று எழுதியுள்ளார். அவருடைய மாணாக்கர்கள் கூடத் தமிழாராய்ச்சியில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்களில் ஒரு மாணாக்கரின் பெயர் ஃபொன்டெனூ என்பதாகும். அவர் திருக்குறளில் காமத்துப் பாலை பிரெஞ்சு மொழியில்பெயர்த்தார்.

அப்போதைய அரசாங்கத்தார் திரு சாமிநாதய்யர் அவர்களுக்குப் பழைய ஏட்டுச் சுவடிகளை ஆராய்ந்து வருவதை நன்கு மதித்து ஒரு நன்மதிப்புப் பத்திரம் அளித்தார்கள். அதற்குக் காரணகர்த்தாவாக இருந்தவர் பொன்டெனூதான். அவர்தான் அப்போது கும்பகோணம் சப்-கலெக்டர் வைபர்ட் துரையிடம் (பிரஞ்சு அறிந்தவர்) சாமிநாதய்யரைப் பற்றிச் சிறப்பித்துக் கூறினார்.

வின்ஸோன் தற்போது இல்லை. ஆனால் இந்தப் பிரஞ்சு தமிழறிஞரைப் போலப் பலர் உலகத்தின் பல பாகங்களிலும் இருக்கின்றனர். குடத்துக்குள் இட்ட விளக்காக இருக்கும் அவர்களைக் குன்றின் மேல் இட்ட விளக்காக மாற்ற உலகத் தமிழ் மாநாடு வகை செய்ய வேண்டும்.

திரு வின்ஸோனின் கடிதத்திலிருந்து பாரிஸிலுள்ள **Bibliothique Nationale** என்ற பெரிய புத்தகசாலையில் ஓராயிரம் தமிழ் கையெழுத்துப் புத்தகங்கள் இருப்பதாக அறிய முடிகிறது. உலகத் தமிழ் மாநாடு அக்கையெழுத்துப் பிரதிகளையும் இதுபோல் உலகில் வேறிடங்களில் இருக்கக்கூடிய நூல்களையும் ஆராய்ந்து இதுவரை வெளிவராத தமிழ்க் கவிதைகளை உலகறியச் செய்ய வேண்டும். தமிழ் தமிழ்நாட்டானுக்கு மட்டுமல்ல உலகத்துக்கே சொந்தம் என்பதை உலகத் தமிழ் மாநாடு நன்கு விளங்க வைக்குமாக !

## கலை உலகிலே
## ஒரு
## புதுமையான
## முயற்சி
## இது

# சாகுந்தலம்

படம்: துஷ்யந்தனாக ஜனார்த்தனனும் சகுந்தலையாக சாந்தா தனஞ்சயனும்

இவ்வாண்டு ஸீஸன் கலை நிகழ்ச்சிகளில் ஸ்ரீமதி ருக்மிணி தேவி தயாரித்துக் கலாக்ஷேத்திரத்தின் சொந்த அரங்கிலேயே அரங்கேற்றிய காளிதாஸனது அபிக்ஞான சாகுந்தலத்துக்கு உயரிய இடம் அளிக்க வேண்டும்.

கலை உலகத்திலே இதை ஒரு புதுமையாகக் கருதலாம். முதல் முயற்சி. அதற்கான கௌரவத்தை ஸ்ரீமதி ருக்மிணி தேவிக்குக் கொடுக்க வேண்டும்.

இந்நிகழ்ச்சி முழு நாட்டியமும் அல்ல; முழு நாட்டிய நாடகமும் அல்ல; இரண்டும் கலந்தது. நிருத்தமும் அபிநயமும் நிகழ்ச்சி முழுவதும் நிரம்பியிருந்தன. பாத்திரங்கள் எல்லாரும் நடனத்தில் தேர்ந்தவர்கள். நாட்டியமும் எங்கெங்கு தேவையோ அங்கெல்லாம் பொருத்தமாக அமைந்திருந்தது. நடிப்பும் கலந்திருந்தது நடனங்களின் நடுவே. நாடக பாத்திரங்கள் மௌனமாக அபிநயக்காமல், ஸம்ஸ்கிருத ஸ்லோகங்களையும் வசனங்களையும் பழக்கமில்லாவிட்டாலும் சொந்தக் குரலிலேயே பேசினார்கள். உச்சரிப்புக்களும் தெளிவாகவே நிதானமாகவே இருந்தன. கேட்பவர்கள் ரசிக்கும் வண்ணம் அமைந்திருந்தன. கதா பாத்திரங்கள் பேசிய ஸ்லோகங்களே பெரும்பாலும் பின்னணி இசையில் அமைந்திருந்ததால் பேச்சையும் கானத்தையும் இணைத்து ரசிக்க முடிந்தது. காட்சிகளும் மூலத்தைப் பின்பற்றியே இருந்தன.

கலாக்ஷேத்திரத்தின் சூழ்நிலையும், அரங்கின் அமைப்பும், மென்மையான மிருதுவான விளக்கொளியும், மிகக் குறைவான எளிமை மிகுந்த ஸீன் அமைப்புகளும் ரம்மியமாயிருந்தன. இந் நாடகத்தை இந்த அரங்கில் தவிர வேறு நகர அரங்கங்களில் நடத்தியிருந்தால் கண்வர் ஆச்ரமச் சூழ்நிலை உணர்ச்சியையும் அமைதியையும் வேத ஒலியையும் இவ்வளவு வெற்றிகரமாக உண்டாக்கியிருக்க முடியாது.

மூன்று மணி காலத்துக்குள்ளே நாடகத்தைச் சுருக்க வேண்டிய நிர்ப்பந்தமிருந்தும், காளிதாச கவியின் கருத்தைச் சிதைக்காமலும் காவிய ரசத்தைக் குறைக்காமலும் சம்பவங்களைச் சுருக்காமலும் நாடகத்தை அமைத்திருந்ததைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பார்ப்பவர்களின் கற்பனைக்கும் இடமளிப்பதாக மேடைக் காட்சிகள் அமைய வேண்டும். அதுவே உயர்கலைக்கு லட்சணம் என்பதைக் கவனப்படுத்திக் கொண்டால், இந்நாடகம் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது.

துஷ்யந்தனாக ஜனார்த்தனனும், சகுந்தலையாக சாந்தா தனஞ்சயனும் நாடகத்தின் நடுநாயகமாக விளங்கினர். இருவரின் நடனங்களிலுமே கட்டுப்பாடு இருந்தது. துடிப்பும் சுறுசுறுப்பும் ஆச்ரமக் கன்னிகைகளாகத் தோன்றியவர்களிடம் மிகுதியாகக் காணப்பட்டன. துஷ்யந்தனுடைய தர்பாரில் சகுந்தலை அவமானப் படுத்தப்படும் கட்டம் உணர்ச்சியுடனேயே நடிக்கப்பட்டது எனினும் சற்றுத் தணிந்தே இருந்ததாகத் தோன்றியது.

வடமொழியும் பிராகிருத மொழியும் மிகுந்த மூலத்தை இக்காலத்து நடிகர்களும் ரசிகர்களும் புரிந்து கொள்வது சுலபமல்ல. எனவே, அபிநயத்தையே மிகுதியாகக் கையாண்டு சம்பவங்கள் ஓடுகின்றன. பெண் பாத்திரம் பேசும் ஸ்லோகங்களுக்குக் கூட ஆண் பாத்திரங்கள் அபிநயிக்க வேண்டிய உத்தி இந்நாடகத்தில் கையாளப்பட்டிருக்கிறது. இது புதுமை, ஆனால் ரசிக்கும்படியாக இருந்தது. வடமொழி ஸ்லோகங்களுக்குப் பாபநாசம் சிவனும், துறையூர் ராஜகோபால் சர்மாவும் அமைத்துத் தந்த மெட்டுக்களைக் கமலா ராணியும், சீதாராமசர்மாவும் பாவப் பொழிவுடனே பாடினர்.

# ஆங்கில நாடகங்கள் இரண்டு



இரு ஆங்கில நாடகங்களை அரங்கேற்றியவர்கள் அண்மையில் சென்னைக்கு விஜயம் செய்த 'பிராஸ்பெக்ட் புரொடக்ஷன்ஸ்' என்ற பிரிட்டிஷ் நாடகக் குழுவினர். நாடகங்கள் ஜார்ஜ் பெர்னார்ட் ஷாவும், ஹெரால்டு பிண்டரும் எழுதியவை. பிரிட்டிஷ் கௌன்ஸிலின் ஆதரவில் நாடகங்கள் நடைபெற்றன.

இந்த இரண்டு நாடகங்களுக்குமிடையே சுமார் ஐம்பதாண்டு இடைவெளி உண்டு. உத்தி முறைகளிலும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. பெர்னார்ட் ஷாவின் நாடக பாத்திரங்கள் நீண்ட பேச்சாளர்கள். பிண்டருடைய பாத்திரங்களோ சுருக்கமாகப் பேசுகிறவர்கள். ஷாவின் பாத்திரங்கள் மகிழ்ச்சியூட்டும் விதத்திலும் பிண்டரின் நாடகத்தில் வரும் பாத்திரங்கள் உணர்ச்சிகளை வெளிப்படுத்தியும் பேசுகிறார்கள். ஷா எழுதிய மிஸ்அலையன்ஸ் (பொருந்தாத திருமணம்) என்ற நாடகத்தில் வரும் உரையாடல்கள் அனைத்தும், பெற்றோர்-குழந்தைகள் உறவு, திருமணம், பொருந்தாத் திருமணம், செல்வந்தர் வீடுகளிலுள்ள மணமாகாத பெண்களுடைய ஏமாற்றம் முதலியவைபற்றியே இருந்தன. பிரச்னைகளில்பெரும்பாலானவை இன்றையத் தலைமுறையில் மேனாட்டில் மறைந்துவிட்டவை என்றே கூறலாம். ஆனால் நாடகம் பார்க்கும் ஒருசில மணி நேரங்களும் ரசிகர்கள் ஐம்பதாண்டுகளுக்கு முன்னர் அங்கு நிலவிய சூழ்நிலையில்தான் வாழ்ந்தார்கள்.

பிண்டர் படைத்துள்ள நாடகம் (பிறந்த நாள் விருந்து) இதற்கு முற்றும் மாறானது. சமுதாயத்தின் கீழ் மட்டத்தில் உள்ள வாழ்வை அவர் படம் பிடித்துக் காட்டுகிறார். பிறந்தநாள் விருந்தில் களியாட்டங்கள், இரகசியம், திகில், திகைப்பு முதலியவற்றில் நாடகம் களைகட்டுகிறது.

மேடையமைப்பு, பாத்திரப் படைப்பு, ஒளி, ஒலி இவைகளைப் பிரிட்டிஷ் நாடகக் குழுவினர் கையாண்டுள்ள முறைகளை நம் நாடகக் குழுவினர் பின்பற்ற வேண்டும். நாடகத்தில் உரையாடலில் சடுபட்டுள்ள பாத்திரங்களும், உரையாடல் இல்லாத பாத்திரங்களும் காட்சிகளுக்கு உயிரூட்டும்படி எப்படி வினாடிப் போதும் சும்மா நிற்காமல் செயல்படுகிறார்கள் என்பதை நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். நடிகர்கள் நாடகத்தில் நடிக்கிறார்கள் என்ற உணர்வு நமக்கு ஏற்படாதபடி இயற்கையாகத் தோன்றி நாடகாசிரியர் சிருஷ்டித்த காட்சிகளாக வாழ்ந்து காட்டும் அற்புதத்தை இந்த இரு நாடகங்களிலும் காண முடிந்தது. இரண்டு நாடகங்களிலுமே ஒரே ஒரு காட்சி (சீன்)தான். அடிக்கடி மாறும் 'செட்டு'கள் இல்லை. அடுத்த வீட்டில் நிகழும் ஒரு சம்பவத்தைக் காணுவது போன்று அத்தனை இயல்பாக அமைந்திருந்தன நாடகங்கள்.

## கடை நடத்தாமலே லாபம்!



—ஆ. சிவகாமி முருகன்

மேலக்கரையில் முஸ்லிம்களின் புனிதமான ரம்ஜான் மாதத்தில் ஊரிலுள்ள எல்லா டீக்கடைகளும் மூடப்படும். பிரதான கடை வீதியில் மட்டும் பிரயாணிகளுக்காக ஹோட்டல்கள் முன்னால் திரை போட்டுக்கொண்டு வியாபாரம் செய்வார்கள். மேலத் தெருவில் உள்ள டீக்கடைகள் மூடப்பட்டாலும் இந்த மாதத்தில் ஏற்படுகின்ற நஷ்டத்தைக் கடைக்காரர்கள் கணக்கிட்டுச் சொன்னால் முஸ்லிம் சங்கம் அதைக் கொடுத்து விடுகிறது. இதற்குக் காரணம் இந்த மாதம் முஸ்லிம்கள் உண்ணா நோன்பு மேற்கொள்வதே ஆகும். சிறுவர்களும், சபலத்துக்குள்ளானவர்களும் டீக்கடைகளைக் கண்டால் நோன்பை முறித்துக்கொள்ளக் கூடாதே என்பதற்காக இந்த ஏற்பாட்டை முஸ்லிம் சங்கம் செய்கிறது. அவ்வளவு புனிதமானது இவர்களின் நோன்பு!





# நடமாடும் ஜேம்ஸ் பாண்ட்!

லாவிட்ஸ் பாங்கி கொள்ளை, ஆரே பால் பண்ணை மோட்டார் 'வானை' நிறுத்தி அடிக்கப்பட்ட கொள்ளை, ஜெய்ப்பூர் ஸ்டேட் பாங்க் கொள்ளை, காம்தேவி கொலை வழக்கு, பொய்க் கையெழுத்து வழக்கு இன்னும் பலவித மோசடிகளில் ஒரு நபருக்குத் தொடர்பு உண்டு என்றால் உடனே 'அவனைக் கண்டு பிடித்தாகி விட்டதா? எந்தச் சிறைச்சாலையில் இருக்கிறான்?' என்று நடுக்கத்துடன் கேட்கத் தோன்றும்.

பயப்பட வேண்டாம், இந்தப் பயங்கர வழக்குகளில் தொடர்பு கொண்டவர் என்று பம்பாய் நகரின் உதவி போலீஸ் கமிஷனராகச் சிறப்புப் பணியாற்றி அண்மையில் ஓய்வு பெறவிருக்கும் இரு சாமி அவர்களையே குறிப்பிடுகிறோம்.

சாமியே சரணம் என்று இவரிடம் சரணாகதி அடைந்து விடுகிற கொள்ளைக்காரர்கள் பலர். ஏனெனில், இவர் இத்தகைய சமூக விரோதிகளுக்குச் சிம்மசொப்பனமாய் விளங்குகிற நடமாடும் ஜேம்ஸ் பாண்டு!

மகாராஷ்டிரத்தில் அண்மையில் ஏற்பட்ட நில நடுக்கம் ஒருபுறமிருக்கட்டும், அதன் தலைநகரான பம்பாய் பலப் பல ஆண்டுகளாகவே தொடர்ந்து நடுங்கிக் கொண்டுதான் இருக்கிறது. கொள்ளைக்காரர்கள் - கொலைகாரர்கள் போன்ற சமூக விரோதிகளின் அட்டூழியங்களால். நகர நாகரிகம் அதிகரிக்க அதிகரிக்க, செல்வச் செழிப்புவளர வளர, இருட்டுப் புரட்டுகளும் கூடவே அபிவிருத்தி அடைவது பம்பாயில் மட்டுமல்ல, உலகிலுள்ள பல்வேறு நகரங்களுக்கும் பொதுவான உண்மைதானே!

ஆயினும் புயலெனச் சீறி மின்னல் வேகத்தில் செயலாற்றிக் குற்றவாளிகளைக் கண்டு பிடித்து உரிய தண்டனையை வாங்கிக் கொடுத்து விடுவார் சாமி. அதனால் தானே சப் — இன்ஸ்பெக்டராக வாழ்க்கையைத்தொடங்கியவர் உதவி கமிஷனராக உயர்ந்திருக்கிறார்! அது மட்டுமா? 1946ல் ஒரு போலீஸ் பதக்கம், 1956ல் மறுபடியும் ஒரு போலீஸ் பதக்கம், பிறகு ராஷ்டிரபதியின் பதக்கம் என்று ஒன்றன் பின் ஒன்றாய்ப் பதக்கங்களையும் தட்டிக் கொண்டு போயிருக்கிறார்.

காம்தேவி கொலை வழக்கில் கொலைகாரர்களை 48 மணி நேரத்தில் கண்டுபிடித்து விட்டார் இந்த நவீன ஷெர்லாக் ஹோம்ஸ்!

சிறந்த போலீஸ்காரராவதற்குத் தகுதி என்ன என்று கேட்டால், 'கண்களையும் காதுகளையும் திறந்து வைத்துக் கொள். வாயை மூடிக் கொண்டிரு' என்று ஆலோசனை கூறுகிறார் சாமி.

இவரது பொழுது போக்கு? சங்கீதத்தை அநுபவிப்பது. அது கர்நாடக சங்கீதமோ மேனாட்டு சங்கீதமோ அல்லது வடஇந்திய சங்கீதமோ எதுவானாலும் சரி அநுபவித்துத் தலையாட்டத் தயார்!

அதனால் தானே தம் பெண்கள் இருவரையும் மேனாட்டு நவீன சங்கீதத்தைப் பாண்டு முழக்கத்துடன் பம்பாயின் பல இடங்களிலும் பாடிப் பிரபலமடைய அநுமதித்திருக்கிறார்!

# பண்டித சுதர்சன்

இந்திய மொழிகளனைத்திலும் இளைய மொழி இந்தி மொழி. இந்த மொழியின் வளர்ச்சியிலே பங்கு கொண்டவர்கள், இதனைத் தாய் மொழியாகக் கொள்ளாத பலர். அவர்களில் பஞ்சாபியைத் தாய் மொழியாகக் கொண்ட சுதர்சன் ஒருவர். ஆரம்பத்திலே பிரேம்சந்தைப் போல உருதுவில் எழுதி வந்தவர், பின்னர் ஹிந்தி இலக்கியத்திலும் அக்கறை கொண்டு பணியாற்றினார்.

உயிருள்ள உரை நடையைக் கையாண்டு, சிறந்த நவீனங்களும் கதைகளும் நாடகங்களும் இயற்றியுள்ளார். திரையுலகத்திலும் சிறந்த வசன கர்த்தாவாக விளங்கியவர்.

'பிறநாட்டு நல்லறிஞர்கள் சாத்திரங்கள் தமிழில் பெயர்த்திட வேண்டும்' என்னும் பாரதியின் வாக்கைப் பின்பற்றி நமது 'கல்கி' செய்து வந்துள்ள பணியில் இவருக்கும் சிறப்பான இடம் உண்டு. 'இரு நண்பர்கள்', 'பாதுஷாவின் காதல்', 'அருவிக் கரை ஆசிரமம்' 'வானத் தாமரை' போன்ற இவரது குறு நவீனங்கள் 'கல்கி' வாசகர்களின் மனத்தில் நிலைத்திருப்பவை.

'கல்கி' நேயர்களின் இதயத்தில் இப்படி ஓர் இடம் பிடித்துக் கொண்ட ஸ்ரீ சுதர்சன் இம்மாதம் காலமாகிவிட்டார். மண்ணுடல் மறைந்தாலும் இலக்கியப் பிரியர்களின் இதயத்திலே என்றென்றும் வாழக் கூடிய அளவுக்கு இடம் பிடித்துக் கொண்டு விட்ட பண்டித சுதர்சனின் ஆத்மா சாந்தி பெறப் பிரார்த்திப்போம்.

# படியப்படிய வாரிய கேசம், பளபளப்பான கேசம் !

## டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் !

*நாள்முழுதும் கேசம் கலையாமலிருக்கச் செய்கிறது*

கேசப் பராமரிப்பு ஓர் அரிய கலை. அழகாய் அமைந்த கேசம் அலாதி தன்னம்பிக்கையை அளிக்கிறது. நாள் முழுதும் கலையாமல் இன் மணத்துடனும் ஆரோக்கியமுடனும் உங்கள் கேசம் மிளிர டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்... எழில்மிகு தோற்றம் பெற

*டாடா கேஸ்டர் ஹேர் ஆயில்...*

கண் கவரும்
புதிய புட்டி
3 சைஸ்களிலே
கிடைக்கிறது



ஆரோக்கியமான படிந்த கேசத்துக்காக.

2-31-12




கொத்தமங்கலம் சுப்பு எழுதும்

# பொன்னிவனத்துப் பூங்குயில்



## தி ஸ்குவெயர் பெக் (ஆங்கிலப் படம்)

மனசுக்கு வேதனையளிக்காத தூய்மையான ஹாஸ்ய ரஸத்தைப் பருக வேண்டுமென்றால் நார்மன் விஸ்டம் நடிக்கும் படத்தைப் பார்க்கத் தவறக்கூடாது.

சமீபத்தில் சென்னைக்கு வந்துள்ள 'தி ஸ்குவெயர் பெக்' என்ற திரைப்படத்தில் உன்னதமான ஹாஸ்ய விருந்தைப் படைக்கிறார் நார்மன் விஸ்டம்.

இது யுத்தகாலச் சூழ்நிலையில் உருவாக்கப்பட்ட கதை. சாதாரண மண்வெட்டி எடுத்து உள்ளூர் நகரசபைக்காகச் சாலை போடும் வேலை செய்யும் தொழிலாளியாக வருகிறார் நார்மன் விஸ்டம். ஆனால் அவர் வேலை படைகள் முகாமிட்டிருந்த இடத்துக்கு எதிரில் அமைந்து விடுவதால், படைகளின் டிரக்குகள், அதிகாரிகளின் வண்டிகள் ஆகியவற்றின் போக்குவரத்துக்குப் பேர் இடையூறாக அமைந்து விடுகிறது நார்மன் விஸ்டத்தின் வேலைகள். இந்த ஆளை மட்டம் தட்ட

## கற்பூரம்

அவன் பெயர் மட்டும் மாணிக்கமல்ல; குணமும்தான். குணத்தின் சிறப்புத்தான் அவன் தங்கை ராஜாத்திக்குப் பெரிய இடத்துச் சம்பந்தத்தைத் தேடித் தந்தது. ஆனால் திருமணம் நடந்ததா? மணமாகும் முன்பே தாய்மையை அடைந்துவிட்ட பெண்ணுக்கு மணம் முடிப்பது எப்படி?

இந்தக் கசப்பான அடிப்படையில்தான் படம் ஓடுகிறது.

ஏ. வி. எம். ராஜன் மாணிக்கமாகவே மாறி விடுகிறார். மனசுக்கு நிறைவைத் தரும் நல்ல நடிப்பு. நகை வியாபாரி சோமசுந்தரத்தின் வீட்டில் அவர் காட்டும் அடக்கமும் மரியாதை கலந்த பேச்சும் மிக இயல்பானவை. தங்கையின் வாழ்வு பாழானதை அறிந்து துடித்த துடிப்பில் அவர் நடிப்பு—அப்பப்பா! பிரமாதம்!



புஷ்பலதா நல்ல இல்லத்தரசி. அழகாக நடிக்கிறார்.

பாலையா, அசோகன் நடிப்பில் குறை கூற முடியாது.

சோ, மாலி, மனோரமா ஆகியவர்கள் திரைக்கதையின் அவலச் சுவையை மறக்க வைத்து எல்லோரையும் சிரிக்க வைக்கிறார்கள். அதற்காக அவர்களுக்கு நாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ராஜாத்தியாக வருபவர் மணிமாலா. அவர் நடிப்பில் கவனம் செலுத்த வேண்டும்.

இடைவேளைக்குப் பிறகு படத்தை அநாவசியமாக நீட்டி எல்லோரையும் பழி வாங்கியிருக்க வேண்டாம்.

நம் படங்களில் பாடல்கள் வரவரப் பாடாய்ப் படுத்துகின்றன. இதற்கு ஒரு விமோசனமே கிடையாதா?

மாணிக்கத்தின் மைத்துனன் முத்துவாக வரும் ஸ்ரீகாந்த் சரியாக உருவாகவில்லை. ஒன்றும் அறியாத அப்பாவியாகத் தோன்றும் முத்து, ஒரு பெண்ணைக் களங்கப்படுத்தும் அளவுக்குத் துணிந்தது சரியாகத் தோன்றவில்லை. ஸ்ரீகாந்த் இன்னும் முக பாவங்களை நன்கு வெளிப்படுத்த முயல வேண்டும்.

வசனம் நன்றாக இருக்கிறது.

''கற்பூரம்'' — நல்ல நடிகர்களின் சிறப்பான நடிப்பினால் கரையாமல் ஒளிவிடுகிறது.

ஒரே வழி, இவரைப் படையில் சேர்த்துக் கொண்டு தம் கீழ் வைத்துக் கொள்வது தான் என்று அந்தப் படையைச் சேர்ந்த அதிகாரி தீர்மானித்து விடுகிறார். அதிலிருந்து வயிறு வெடிக்கச் சிரிக்க வைக்கும் பலப் பல சந்தர்ப்பங்களைத் திரைப்படத்தில் காண்கிறோம்.

ஹாஸ்ய ரஸத்தை வழங்குபவர்களுக்கு, எல்லாமே தெரிந்திருக்க வேண்டியிருக்கிறது. அதற்கிணங்க, சாதாரணத் தொழிலாளியைப் போல் நடக்கும் நார்மன் விஸ்டம், வேறொரு கட்டத்தில் பெண் வேஷம் தரித்து அசல் பெண்ணைப் போல் நடித்துச் சொக்க வைக்கிறார். ஜெர்மன் அதிகாரியாக நடித்து அந்தக் கடுமையையும் கண்டிப்பையும் புலப்படுத்துகிறார். அதனிடையே எப்படியோ ஹாஸ்யத்தைத் திணித்துச் சிரிக்கவும் வைக்கிறார்.

மொத்தத்தில் வயிறு குலுங்கச் சிரிக்கச் சென்னைவாசிகளுக்கு ஒரு சந்தர்ப்பம்.



தமிழ்நாட்டு ஜேம்ஸ்பாண்ட் ஜெய்சங்கர் சென்னையிலிருந்து பம்பாய்க்குப் போகிறார்! பம்பாயிலிருக்கும் ஒரு சதிக் கூட்டத்தின் சாகஸத்தை அடக்கி விடத்தான்; பிறகு 'டுமீல்! டுமீல்!' 'கும் கும்' குத்துச் சண்டை, டப்பாங்குத்து டான்ஸ்கள் இவையெல்லாம் திரைப்பட ரஸிகர்களுக்கு வழங்கவும்கூடத் தான்! கூட்ஸ் வண்டி போல் கதை பல 'லூப்' லயன்களில் நின்று நிதானித்து முன் சொன்ன கூத்துக்களுக்கெல்லாம் இடம் விட்டுச் செல்கிறது. சோ கோமாளியாக வந்து ஹாஸ்யங்களை அள்ளி வீசுவதோடு, பெண் வேஷத்தில் வந்து வில்லன் அசகாய சூரனை அலற அடிக்கிறார்! 'கைபடாத ரோஜாப்பூ நானேதான்! காத்திருக்கும் கருவண்டு நீயேதான்!' என்று காதல் டூயட்டே பாடி ஆடித் தீர்த்து விடுகிறார்! பாரதி—ராதிகா அயல்நாட்டுப் பாணி உடையில் ஆண் பெண் வித்தியாசமின்றிக் குதித்துக் கும்மாளி போடுகிறார்கள். நடிக்க நிறைய வாய்ப்பில்லை படத்தில். வழக்கம்போல் ஒரே மாதிரி பாதையில் செல்லும் கதாநாயகன்—கதாநாயகி கதைதான்! அடி உதை, குத்துச் சண்டைப் பிரியர்களுக்கும்கூட அலுத்துப் போகும் முறையில் படம் செல்கிறது. ''நான் யார் தெரியுமா?''—பத்தோடு பதினொன்று.

## நான் யார் தெரியுமா?





# ஒலிம்பிக் திருவிளையாடல்கள்

அ. இராமதுரை

நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் ஒலிம்பிக் பந்தயங்கள் சர்வதேசப் புகழ் பெற்றவை. பல நாடுகளிலிருந்து வந்துள்ள ஆயிரக்கணக்கான விளையாட்டு வீரர்களின் சாகஸங்களைக் கண்டு ரசிக்கக் கோடிக் கணக்கான மக்கள் நிறைந்துள்ள ஒலிம்பிக் பந்தய பூமியில் பந்தயங்களின்போது கோபம், எரிச்சல், பொறாமை, அருவருப்பு, தேசிய நோக்கு போன்ற இன்னோரன்ன பலவித உணர்ச்சிகள் நிரம்பி யிருக்கும். விளையாட்டுக்கள் நிகழும்போது அந்தப் பந்தய பூமியில் மேற்கூறிய உணர்ச்சிகள் ஒன்றோடொன்று மோதும்போது அவற்றின் முடிவு என்னவாக இருக்கும் என்று யாராலும் கூற இயலாது.

1928ம் ஆண்டில் ஆம்ஸ்டர்டாம் நகரில் நிகழ்ந்த ஒலிம்பிக் போட்டிகளின் போது பந்தய பூமியில் ஒரு 'குட்டி' யுத்தமே நடைபெற்றது. ஓட்டப் பந்தயத்தில் பயிற்சி பெறுவதற்காகச் சில பிரெஞ்சு விளையாட்டு வீரர்கள் பந்தய பூமியில் நுழையும் தறுவாயில் வாயிற்காப்போன் அவர்களை உள்ளேவிட மறுத்து விட்டான். காரணம்? அவர்களிடம் உள்ளே செல்வதற்கான அனுமதிச் சீட்டு இல்லை. பிரெஞ்சு வீரர்கள் எவ்வளவோ கெஞ்சியும் வாயிற்காப்போன்







உள்ளேவிட மறுத்ததால் போர் ஆரம்பமாயிற்று.

பந்தய பூமியில் அப்போது யாருடனோ அளவளாவிக் கொண்டிருந்த பிரெஞ்சு வீரர் குழுவின் தலைவரான பால் மெரிகேம்ப் வாசலில் நடக்கும் யுத்தத்தைக் கண்டவுடன் உடனே அங்கே விரைந்தார். சண்டையை ஓரளவு சமாதானப்படுத்திவிட்டு அவர் காவலனிடம் பிரெஞ்சு வீரர்களுக்குக் கதவைத் திறந்து விடும்படி வேண்டுகோள் விடுத்தார். ஆனால் அவனோ பிரெஞ்சு வீரர்களிடம் 'பெர்மிட்' இல்லாத ஒரே காரணத்தால் அனுமதிக்க முடியாது என உறுதியாகக் கூறினான்.

மெரிகேம்புக்குக் கோபம் எல்லையைக் கடந்துவிட்டது. ''நீ என்ன வாசலைத் திறப்பது? நானே திறக்கிறேன்'' என்றவாறே வாசற் கதவின் மீது பாய்ந்தார். ஆனால் பலம் மிக்க அந்த வாயிற் காவலன் மெரிகேம்பை ஓர் உதைவிட அவர் பூமியில் விழுந்தார். ஆம்ஸ்டர்டாம் நகர அதிகாரிகள் இந்த 'மோதலை'க் கேள்விப்பட்டதும் உடனே மெரிகேம்பிடம் சென்று வாயிற் காவலனின் நடத்தைக்கு மன்னிப்புக் கேட்டார்கள். மேலும் இங்கிதம் தெரியாத அவனை வேலையை விட்டே விலக்கி விடுவதாகவும் உறுதி கூறவே, அவமானத்தாலும், கோபத்தாலும் கொதித்துக் கொண்டிருந்த பிரெஞ்சு வீரர்கள் ஓரளவு சாந்தமாயினர்.

மறுநாள் காலை ஒலிம்பிக்கின் ஊர்வலம் எண்பதாயிரம் ரசிகர்களின் முன்னிலையில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. எல்லா நாடுகளின் வீரர்களும் ஒருவர்பின் ஒருவராக அணிவகுத்துச் செல்லும் வேளையில் பிரெஞ்சு வீரர்கள் தங்களை அவமானப்படுத்திய வாயிற் காவலன் பந்தய பூமியில் இருப்பதைக் கண்டு விட்டனர். உடனே அவர்கள் அணிவகுப்பை அப்படியே விட்டுவிட்டு வாயிற்காவலனை அங்கேயே உதைக்கத் தொடங்கினர். ஒலிம்பிக் பந்தயங்களின் சிகரமான 'அணிவகுப்பு' அழகிழந்து சின்னாபின்னமாகி விட்டதைக் கண்ட ஆம்ஸ்டர்டாம் நகர் அதிகாரிகள் மீண்டும் பிரெஞ்சு வீரர்களிடம் பல முறை மன்றாடி மன்னிப்புக் கேட்டனர். அதன் பின்னர்தான் பந்தய பூமியில் அமைதி நிலவியது.

ஹெல்ஸிங்கி நகரில் 1952-ம் ஆண்டில் நடைபெற்ற ஒலிம்பிக் பந்தயங்களில் மற்றுமொரு வேடிக்கையான சம்பவம் நிகழ்ந்தது.

சம்பிரதாயப்படி ஒலிம்பிக் ஜோதி ஏதென்ஸ் நகரிலிருந்து புறப்பட்டுப் பல நாடுகளைக் கடந்து ஹெல்ஸிங்கி நகருக்கு விழாத் தொடங்கும் பொழுதன்று வர வேண்டும். ஆனால் அன்றைய தினத்தன்று ஒலிம்பிக் ஜோதியே வரவில்லை. பந்தயத்தைக் கண்டுகளிக்க வந்த லட்சக்கணக்கான மக்கள் முணுமுணுக்கத் தொடங்கினர். பின்லாந்து நாட்டின் தலைசிறந்த ஓட்டப் பந்தய வீரரான பாவோ நூர்மி என்பவர் தான் அன்று ஒலிம்பிக் ஜோதியைக் கொண்டு வருவதாக இருந்தது. ஆனால் பல மணி நேரங்களாகிவிட்ட போதிலும் நூர்மியைக் காணவில்லை.

ஒலிம்பிக் விழா அமைப்பாளர்கள் பெரிதும் சஞ்சலத்தில் ஆழ்ந்திருந்த வேளையில் பந்தய பூமியின் வெளியே ஒரு பெரிய சண்டையே நிகழ்ந்து கொண்டிருந்தது. அமைப்பாளர்கள் உடனே அங்கு விரைந்து



# 40, 140

இந்த எண்ணிக்கை எதைக் குறிக்கிறது? கிரிக்கெட்டில் ஒருவர் எடுத்துள்ள 'ரன்'களை! அப்படியா! எடுத்தவர் யார்?

**79ம் பக்கம் பார்த்தால் தெரிந்து போகிறது.**

சென்றனர். அங்கே வாயிற் கதவின் முன்பு பாவோ நூர்மி ஒலிம்பிக் ஜோதியை வைத்துக் கொண்டு உள்ளே விடும்படி வாயிற் காவலர்களிடம் மன்றாடிக் கொண்டிருந்தார். நூர்மியைக் கண்ட அமைப்பாளர்கள் வாயிற் காவலர்களிடம், ''முட்டாள்களே! உடனே அவரை உள்ளே செல்ல அனுமதியுங்கள்!'' என்று இரைந்தார்கள். ஆனால் உள்ளே செல்வதற்கான அனுமதிச் சீட்டு நூர்மியிடம் இல்லை. அதனால் வாயிற் காவலர்கள் உறுதியாக அவரை அனுமதிக்க மறுத்து விட்டனர்.

இறுதியில் பல மணி நேர விவாதங்களுக்குப் பின்னர் பின்லாந்து நாட்டின் ஒலிம்பிக் குழுத் தலைவரின் பெருமுயற்சியினால் நூர்மி அனுமதிக்கப்பட்டார். அதன் பிறகுதான் ஒலிம்பிக் ஜோதி மைதானத்தில் அவரால் மீண்டும் ஏற்றப்பட்டு விழாத் தொடங்கப்பட்டது.

**லண்டன்** மாநகரில் 1908-ம் ஆண்டில் நடந்த ஒலிம்பிக் பந்தயங்களில் ஒரு விசித்திரம் நிகழ்ந்தது. ஒலிம்பிக் விளையாட்டுக்களில் சிகரமான மராத்தான் ஓட்டப் பந்தயம் அப்போது நடைபெற்றுக் கொண்டிருந்தது. பந்தய பூமியிலிருந்து இருபத்தாறு மைல்கள் தொலைவில் உள்ள வின்ட்ஸர் மாளிகையிலிருந்து பல நாட்டு மராத்தான் வீரர்கள் பந்தய பூமியை நோக்கி ஓடிக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் இத்தாலிய நாட்டு வீரரான டோரான் டோ பெட்ரி என்பவர் தமது பாதையை விட்டுவிட்டு வேறு பாதையில் ஓட ஆரம்பித்துச் சிறிது நேரத்தில் மயங்கி விழுந்தார். அப்பந்தயத்தைக் கண்டு களித்துக் கொண்டிருந்த ஆயிரக்கணக்கான மக்கள், ''பெட்ரிக்கு உதவி செய்யுங்கள்'' என முழங்க ஆரம்பித்தனர். ஆனால் ஆங்கிலேயர்களோ பெட்ரிக்கு உதவி செய்யக் கூடாது; அது ஒலிம்பிக் விதிகளுக்கு முரணானது என்று கூறவே நடுவர்கள் செய்வதறியாது திகைத்தனர். ஆனால் அங்கு குழுமியிருந்த அமெரிக்கர்களோ, பெட்ரிக்கு உதவி செய்துதான் தீர வேண்டும் என வற்புறுத்தினர். காரணம் இங்கிலாந்து மராத்தான் பந்தயத்தில் வெற்றி பெறுவதை அவர்கள் விரும்பவில்லை. அதனால் அவர்கள் அச்சமயத்தில் யாருக்கு வேண்டுமானாலும் உதவி செய்யத் தயாராக இருந்தனர்.

அமெரிக்கர்களின் கோரிக்கைக்கு நடுவர்கள் சம்மதிக்கும் தறுவாயில் ஒரு பெரிய ஆரவாரம் எழுந்தது. ஆம்! அமெரிக்க வீரர் ஜானி ஹேஸ் பந்தய பூமியை நோக்கி வந்து கொண்டிருக்கிறார் என்பதைத் தெரிவிப்பதற்காகவே அந்த ஆரவாரம். உடனே அமெரிக்கர்கள் தங்கள் கருத்தை மாற்றிக் கொண்டனர். ''பெட்ரிக்கு உதவாதீர்; அது சட்ட விரோதம்'' எனக் கூக்குரலிட்டனர்.

ஆனால் ஆங்கிலேயர்கள் பெட்ரிக்கு உதவி செய்யவே இறுதியில் இத்தாலிய நாட்டு பெட்ரியே மராத்தான் பந்தயத்தில் முதலாவதாக வென்றார். அமெரிக்கருக்கு இரண்டாவது இடம்தான் கிடைத்தது.

**அ**மெரிக்காவில் லாஸ்ஏஞ்செல்ஸ் நகரில் நடைபெற்ற ஒலிம்பிக் பந்தயத்தில் ஒரு கலகமே நடைபெற்றது. 5000 மீட்டர் பந்தயத்தில் பிரதான போட்டியாளர்களான ரால்ப் ஹில் என்ற அமெரிக்கரும், லாரி லெஹினென் என்ற பின்லாந்து நாட்டுக்காரரும் வெகு வேகமாகத் தங்களது வெற்றிக் கோட்டை நோக்கி ஓடும் சமயம் ஹில் திடீரென லெஹினெனின் முன் சென்று அவரது பாதையில் வழிமறிக்க ஆரம்பித்தார். இவர்கள் இரண்டு பேரும் ஒருவருக்கொருவர் இடைமறித்துக் கொண்டே வெற்றிக் கோட்டைத் தொட்டனர். அரங்கத்தில் குழுமியிருந்த லட்சக்கணக்கான அமெரிக்கர்களுக்கு யார் முதலில் வெற்றிக் கோட்டைத் தொட்டது என்பதே புரியவில்லை. நீதிபதிகளும் வெற்றி பெற்றவர் யார் என்பது தெரியாமல் விழித்தனர். இறுதியில் ஒரு மணி நேர விவாதத்துக்குப் பின்னர் பின்லாந்து நாட்டு லெஹினென் 5000 மீட்டர் பந்தயத்தில் வெற்றி பெற்றதாக அவர்கள் அறிவித்தனர். உடனே பந்தய பூமியில் குழுமியிருந்தவர்கள் ரகளை செய்ய ஆரம்பித்தனர். ஒரு சாரார் ஹில்தான் முதலில் வந்தவர் என்றும் மற்றவர்கள் லெஹினென்தான் வெற்றியாளர் என்றும் உரக்கக் கத்தவே கலகம் உண்டாக ஆரம்பித்தது.

நிலைமை கட்டுக்கடங்காமல் போவதைக் கண்ட பந்தய அறிவிப்பாளர் பில் ஹென்றி சாதுர்யமாக 'மைக்'கின் முன் நின்று, ''நமது மதிப்புக்குரிய விருந்தினர்களை ஒன்றும் செய்யாதீர்கள். செய்தால் அது அமெரிக்காவுக்குக் கெட்ட பெயரை உண்டாக்கும்'' என்று கூறினார்.

உடனே கலகம் அடங்கியது.

அடுத்த ஆண்டு டிசம்பரில் மெக்ஸிகோவில் ஒலிம்பிக் விளையாட்டுகள் நடைபெறவிருக்கிறது. அங்கும் இவற்றைப் போல் சம்பவங்கள் நடைபெறாமல் இருக்காது....

காரணம்?

பலவித மொழிகளைப் பேசும் பல நாட்டு விளையாட்டு வீரர்கள், தேசிய உணர்ச்சி மிகுந்த லட்சக்கணக்கான ரசிகர்கள், இவர்களைக் கட்டுப்படுத்துவது என்றால் சாமானியமான காரியமா?

அத்தியாயம் 22

ராஜரத்தினமும், முத்துவும் வீட்டுக்குள் வருவதை எதிராஜ் கவனித்தான். ராஜரத்தினம் வீட்டினுள் நுழைந்தவுடன் தனது மகள் கிரிஜாவைக் கூப்பிட்டார்.

''கிரிஜா! கிரிஜா!'' என்று உரக்கக் கூவினார் ராஜரத்தினம். சினிமாவுக்குப் புறப்படத் தன்னை அலங்காரம் செய்துகொண்டிருந்தாள் கிரிஜா. வெளியே புறப்படும்போதுதான் பெண்கள் தங்களது அழகில் அதிகக் கவனம் செலுத்துகிறார்கள். தங்கள் வீட்டில் இருக்கும்போது அழுது வடியும் முகத்தோடு, எதையோ பறிகொடுத்தாற்போல் உட்கார்ந்திருக்கும் பெண்மணிகளுக்கு வெளியே புறப்படும்போது ஓர் உற்சாகம் பிறக்கிறது. வீட்டில் இருப்பவர்களுக்கு லட்சணமாகக் காட்சியளித்து வீடு லட்சுமீகரமாக விளங்க வேண்டும் என்று எண்ணமே இல்லாமல் லக்ஷ்மியின் அக்காளின் அவதாரங்களாகப் பவனி வரும் பெண்கள் வெளியில் மட்டும் அழகாகக் காட்சியளிப்பதில் அக்கறை செலுத்துகிறார்கள். வீட்டில் இருப்பவர்களைவிட வெளியே இருப்பவர்களுக்குத்தான் அவர்கள் கண்களில் மதிப்பு அதிகம் போலும்!

தந்தையின் குரல் கேட்டபோது கிரிஜா மாடியில் தன் கூந்தலைக் கலைத்து விட்டுக் கொண்டிருந்தாள். எதிலுமே ஒழுங்காக இருப்பதைக் கலைத்து விடுவதுதான் தற்கால நாகரிகம். கூந்தலைக் கலைப்பது நாரீமணிகளின் நாகரிகம், வகுப்புக்களைக் கலைப்பது மாணவர்கள் நாகரிகம், தொழிலாளர்களைக் கலைப்பது தொழில் நாகரிகம், பக்தர் கூட்டத்தைக் கலைப்பது கோவில் நாகரிகம், கட்சிகளைக் கலைப்பது அரசியல் நாகரிகம், மொழியைக் கலைப்பது அரசியல் நாகரிகம், அசெம்பிளியைக் கலைப்பது — அதிருஷ்டவசமாக அதுவும் ஒரு நாகரிகமே!

தந்தையின் குரல் கேட்ட கிரிஜா, ''வந்துவிட்டேன், அப்பா!'' என்றாள் இருந்த இடத்தை விட்டு நகராமலே.

கீழே எதிராஜிடமும், முத்துவிடமும் ராஜரத்தினம் பேசிக் கொண்டிருந்தார்.

''சினிமாவுக்கு 'லேட்' ஆகிறது. கிரிஜா இன்னும் 'டிரஸ்' பண்ணிக்கிட்டிருக்குது'' என்று அவர் அலுத்துக் கொண்டார்.

''எனக்கும் ஒரு டிக்கட் வாங்கியிருக்கக்கூடாதா ஸார்?'' என்று கேட்டான் முத்து.

''நீங்க வருவீங்கன்னு எனக்கு எப்படி முதலிலேயே தெரியும் டாக்டர்? அதனாலே என்ன இப்போ? கல்யா

பயிர்ப்பு ஆகிய பெண்மைக்கே உரித்தான குணங்களை வீட்டிலேயே விட்டு விட்டுத்தானே பெண்கள் வெளியே புறப்படுகிறார்கள்? ஏதோ வீட்டிலாவது அந்தக் குணங்கள் இருந்தால் சரி!



ணத்துக்கு அப்புறம் நீங்களும் கிரிஜாவும் சேர்ந்து சினிமாவுக்குப் போங்க!'' என்று அசடு வழிந்தார் ராஜரத்தினம்.

இதைக் கேட்டுக் கொண்டே இறங்கி வந்தாள் கிரிஜா.

''அப்பா! எங்க கல்யாணத்தை நிச்சயம் செய்துவிட்டீங்களா? ரொம்ப தாங்க்ஸ் அப்பா!'' என்று சந்தோஷத்தோடு கூறினாள் கிரிஜா.

'என்ன இது? ஒரு பெண் இப்படி வெட்கத்தை விட்டுப் பேசுவாளா?' என்ற சந்தேகத்துக்கு இடமே கிடையாது. வீட்டை விட்டு வெளியே புறப்படத் தயாராக இருந்த கிரிஜா வந்து கொண்டிருந்தாள் என்பதுதான் தெரியுமே? அச்சம், மடம், நாணம்,

''ஆமாம், அம்மா! நம்ம டாக்டரை. உங்க கல்யாணத்துக்கு அவரும் சம்மதிச்சுட்டார்'' என்றார் ராஜரத்தினம்.

''அய்யோ! எனக்கு வெட்கமா இருக்குப்பா!'' என்றாள் கிரிஜா. இக்காலத்துப் பெண்கள் வெட்கப்படுகிறார்கள் என்று அவர்கள் சொல்லித்தான் மற்றவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். ''வெட்கமாக இருக்கிறது!'' என்று சொல்வதற்கு முன்னால் ''அய்யோ!'' என்று பேச்சுக்குச் சேர்த்

துச் சொல்வதையும் பார்க்கிறோம். ''ஐயோ!'' என்ற சொல் சாதாரண மாகப் பயத்தைக் குறிப்பது. ஒரு வேளை பெண்கள் தாங்கள் வெட்கப் படுவதை நினைத்துத் தாங்களே பயப் படுகிறார்களோ என்னவோ, புரியவில்லை!

''சரி சரி! சினிமாவுக்குப் போக 'டைம்' ஆயிடுச்சு. வா போகலாம்'' என்றார் ராஜரத்தினம்.

'' உங்களுக்கு டிக்கட் வாங்க வில்லே, கோவிச் சுக்காதீங்க'' என்று முத்து விடம் கூறினாள் கிரிஜா.

ஏதோ சொல்லப் போகிறாள் என்று தெரிந்து கொண்டான் முத்து. கிரிஜா தொடர்ந்தாள். ''நாங்க வருகிற வரைக்கும் அசோக்குக்கு விளையாட்டுக் காட்டிக்கிட்டிருங்க.''

இத்தனை நேரம் மூலையில் முடங்கிக் கொண்டிருந்த அசோக்குக்குத் தன் பெயரைக் கேட்டவுடன் ஓர் உற்சாகம் பிறந்தது. ஒரே தாவா கத் தாவிற்று. முத்து அலறிப் புடைத்துக் கொண்டு மாடிக்கு ஓடினான். புறப்படத் தயாராக இருந்த ராஜரத்தினம் இந்த



''அதனாலென்ன? அவர் அஸிஸ்டன் டோட பேசிக்கிட்டிருப்பார்'' என்றார் ராஜரத்தினம் தம் கைக் கடிகாரத் தைப் பார்த்தவாறே. இரவு மணி ஒன் பது ஆகியிருந்தது. ராஜரத்தினமும் கிரிஜாவும் வெளியே போகும்போது கிரிஜா வாயிலருகில் சற்று நின்று அன் பொழுக முத்துவைப் பார்த்தாள். ''ஒரு விஷயம்'' என்றாள் கிரிஜா. அன்பை வார்த்தைகளில் குழைத்து

அமர்க்களத்தைப் பார்த்து நின்றார். கிரிஜா எதிரா ஜைப் பார்த்து, ''போய் அசோக்கைப் பிடியுங்க!'' என்று கூவினாள். எதி ராஜூம் அசோக்கைப் பின்தொடர்ந்து மாடிப் படிகளில் தாவி ஏறினான். இதற்குள் ராஜரத்தினம் அசையாமல் நிற்பதைப் பார்த்த கிரிஜா, ''அப்பா! இப்படி நிக்கிறீங்களே! அசோக் டாக்ட

ரைக் கடிச்சுடப் போறது!'' என்று கத்தினாள்.

''ஏன்? நீ போய்த் தடுக்கிறது தானே?'' என்றார் ராஜரத்தினம்.

''நான் எப்படி ஓட முடியும்? ஹை ஹீல் ஷூ போட்டுக்கிட்டிருக்கிறேனே?'' என்றாள். தற்கால நாகரிகத்தை ஒட்டி, உயர்ந்த குதிகால் கொண்ட காலணி போட்டுக் கொண்டிருந்தாள் கிரிஜா. பெண்கள் தற்போது அணியும் காலணிக்குக் குதிரைக் குளம்பு போல் குதிகால் அமைக்கப் பட்டிருப்பதைப் பார்க்கிறோம். காலில் குளம்பில்லாக் குறையை நீக்க, ஹை ஹீல் ஷூ; வாலில்லாக் குறையை நீக்கக் கூந்தலில் குதிரை வால் கொண்டை; சுதந்திரமாகப் பிறந்த மேனியில் திரிய முடியாத குறையை நீக்க ஆடைக் குறைப்பு; இப்படியாக மனித சமுதாயம் மிருகங்களுக்கும் தங்களுக்கும் இருக்கும் வித்தியாசங்களை நீக்கிக் கொண்டே வருகின்றது. நாகரிகம் நன்றாக முற்றும்போது இந்த வித்தியாசங்கள் அடியோடு நீங்கி, மனிதர்களும், மிருகங்களும் சரிநிகர் சமானமாக நின்று 'ஆண்டவன் படைப்பில் அனைவரும் ஒன்றே' என்ற தத்துவத்துக்கு விளக்கமாக அமைவார்கள் என நிச்சயமாக நம்பலாம்.

ராஜரத்தினத்துக்கும் கிரிஜாவுக்கும் ஏற்பட்ட பிரச்னை தீர்ந்து, இருவருமாகச் சேர்ந்தே மாடிக்குப் போவது என்று தீர்மானித்தார்கள். இதற்குள் முத்து ஒவ்வோர் அறையாகப் புகுந்து புறப்பட்டுக் கொண்டிருக்க, அசோக்கும் அவனை விடாமல் துரத்திக்கொண்டிருந்தது. எதிராஜூம் அசோக் பின்னால் ஓடிக் கொண்டேயிருந்தான்... பிடித்து நிறுத்தத்தான் முடியவில்லை. கடைசியாக முத்து குளிக்கும் அறைக்குள் நுழைந்தான். அசோக்கும் நுழைந்தது. எதிராஜ் வந்து வாசலருகில் நின்று ''அசோக்! அசோக்!'' என்று கூப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அசோக் ''ளொள்'' என்று குரைத்தது. முத்து பயந்து எகிறி விழுந்தான். சலவைக் கல் தரையில் சறுக்கிக்கொண்டே அறையின் ஒரு மூலைக்குச் சென்றான். அவ்வாறு அவன் சறுக்கிச் செல்லும்போது தரையில் இருந்த சலவைக் கற்களில் ஒன்று மட்டும் நன்றாக நகர்ந்தது. ஏறத்தாழ முக்கால் அடி சதுரத்தில் ஓர் ஓட்டை தரையில் ஏற்பட்டதைக் கவனித்து எதிராஜ் அறையினுள் பாய்ந்தான். அதை எட்டிப் பார்க்க அதில் அழகாக ஒரு நகைப் பெட்டி இருப்பதும் அவனுக்குத் தெரிந்தது. தான் தேடித் தவித்த அதே நெக்லெஸ் இப்போது தன் காலடியில் கிடப்பதைப் பார்த்து எதிராஜ் ஒரு நிமிடம் திகைத்து நின்றான். அதை எடுக்க அவன் குனிந்த போது ராஜரத்தினம் அந்தக் குளிக்கும் அறையின் வாசலில் வந்து கொண்டிருந்ததைப் பேச்சுச் சத்தத்திலிருந்து அறிந்து கொண்டு, தனது காலால் சடேரென்று நகர்ந்துபோன சலவைக் கல்லைப் பழைய நிலையிலேயே சரியாகத் தள்ளிவிட்டான். கீழே இருந்த முத்து இதை எதையுமே கவனிக்காமல் தன்னையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அசோக்கின் பார்வையிலிருந்த தீட்சண்யத்தைத் தாங்க முடியாமல் கண்களை மூடித் தியானத்தில் அமர்ந்தான்.

ராஜரத்தினம் அறை வாசலுக்கு வந்தபோது எதிராஜ் எதுவுமே தெரியாதது போல் முத்துவின் பக்கத்தில் நின்று அவனுக்குக் கை கொடுத்துத் தூக்கி விட்டுக் கொண்டிருந்தான்.

ராஜரத்தினத்துக்கு ஒருவேளை நகை இரகசிய அறை இவர்கள் கண்களில் பட்டிருக்குமோ என்ற சந்தேகம் எழுந்தது. ''என்ன? இங்கே ஏதாவது நடந்துதா? முக்கியமா ஏதாவது நடந்ததா?'' என்றார்.

''என்ன முக்கியமா நடக்கும்?'' என்றான் எதிராஜ். இந்தக் கேள்வியை அவன் கேட்டவுடன் 'ஒன்றும் நடந்திருக்க முடியாது' என்று சிறிது திருப்தியடைந்த ராஜரத்தினம், ''சரி, நீங்கள்ளாம் கீழே போங்க. நான் இதோ வந்துடறேன்'' என்று கூற எல்லோரும் அறையை விட்டு வெளியேறினர்.

''சீக்கிரம் வாங்கப்பா. சினிமாவுக்கு 'டைம்' ஆறது. மணி இப்போ ஒன்பதே கால்'' என்று எச்சரித்துவிட்டுச் சென்றாள் கிரிஜா.

அனைவரும் சென்றபிறகு ராஜரத்தினம் சலவைக் கல்லை நகர்த்தி, நகைப் பெட்டி பத்திரமாயிருப்பதைக் கண்டு திருப்தியோடு மீண்டும் மூடிவிட்டு நகர்ந்தார். 'என்ன இருந்தாலும் என் சாமர்த்தியம், சாமர்த்தியம் தான். யாருமே சந்தேகப்பட முடியாத இடத்தில் வைத்திருக்கிறேன். லக்ஷ ரூபாய் பெறுமான நகை இறந்து கிடக்கும் குளிக்கும் அறையில் இருக்கும் என்று எந்தத் திருடனால் கண்டு பிடிக்க முடியும்?' என்று அகமகிழ்ந்து கீழே இறங்கி வந்து கிரிஜாவோடு வாசலுக்கு வந்தார். முத்துவைக் காணுமல் ''டாக்டர் எங்கே?'' என்றார்.

''நாய்க்குப் பயந்து ஓடிவிட்டார் போலிருக்குது'' என்றாள் கிரிஜா.

''நல்ல டாக்டர்'' என்றார் ராஜ ரத்தினம். கிளம்புவதற்கு முன் சிங் காரத்தைக் கூப்பிட்டார். ''இந்தாப்பா வந்து கதவைப் பூட்டிச் சாவியை என் கிட்டே குடு'' என்றார். சிறிது நாட் களாகவே அவருக்குச் சிங்காரத்தின் மீது ஓர் இனம் புரியாத சந்தேகம். டாக்டர் அஸிஸ்டன்ட் எதிராஜையும் அவர் ஒருவகை பயத்தோடுதான் பார்த்தார். எதற்கும் ஜாக்கிரதை யாக இருப்பதுதான் நலம் என்று தீர்மானித்துத்தான் வீட்டுக் கதவைப் பூட்டிச் சாவியைத் தம் கையில் தரு மாறு சிங்காரத்துக்குக் கட்டளையிட் டார். சிங்காரமும் வேறு வழியின்றி அவ்வாறே செய்தான். ராஜரத்தின மும் கிரிஜாவும் சினிமாவுக்குக் காரில் ஏறிப் புறப்பட்டார்கள். கார் சென்று மறைந்தவுடன், வீட்டுக்கு வெளியே விடப்பட்ட எதிராஜும் சிங்காரமும் சற்று ஒதுங்கிச் செடிகளின் அருகில் சென்றார்கள்.

''சிங்காரம்! இன்னிக்கு ராத்திரியே முடிச்சுட வேண்டியதுதான். நகை யைக் கண்டு பிடிச்சுட்டேன்'' என்றான் எதிராஜ்.

''என்ன? எங்கே?'' என்றான், சிங்காரம்.

''எல்லாம் சொல்றேன். இவங்க சினிமாப் படம் முடிஞ்சு வரதுக்குப் பன்னிரண்டரை மணிக்கு மேலே ஆகும். ஊர் சப்தம் ஒஞ்சு கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சுமாரா பதினொன் றரை பன்னிரண்டு மணிக்கு நம்ம காரியத்தை முடிச்சுக்கிட்டு இங்கிருந்து நழுவிடலாம்.''

''கதவைப் பூட்டிட்டாங்களே! படு பாவிங்க!'' என்று அங்கலாய்த்தான் சிங்காரம்.

''கவலைப்படாதே! தோட்டத்து வழியா ஏகிறிக் குதிக்க இடம் பார்த்து வச்சிருக்கிறேன். பின்பக்கம் மாமரம் இருக்குதே, அதுலே ஏறி மாடியிலே குதிச்சுடலாம்'' என்று தைரியம் கூறினான் எதிராஜ்.

இருவரும் நகர்ந்தார்கள். ஓரிரு நிமி டங்கள் கழிந்தன. செடி மறைவி லிருந்து முத்து வெளிப்பட்டான். நாய்க்குப் பயந்து ஓடி வந்தவன் இங்கு தான் வந்து மறைந்தான். இப்போது எதிராஜும் சிங்காரமும் பேசியதைக் கேட்டுத் திகிலடைந்தான். என்ன செய்வது என்று புரியாத நிலையில் தெய்வம்தான் துணை என்று நினைத்து உடனே ரவியைப் பார்ப்பது என்று தீர்மானித்தான்.

முத்து ரவியைப் பார்க்க ஓடி வந்து கொண்டிருந்தபோது ரவி சின்னதுரை வீட்டுத் தோட்டத்தில் பட்டாணிய னோடு பேசிக் கொண்டிருந்தான். பட் டாணியனின் காலில் விழாத குறையாக ரவி கெஞ்சிக் கொண்டிருந்தான்.

''இதோ பாருப்பா! ஏன் இந்த மாதிரி ராத்திரி நேரத்திலே வந்து கழுத்தை அறுக்கறே? மணி பத்துக்கு மேலே ஆகுது. நான்தான் எல்லா ஏற்பாடும் செய்கிறேனே. விக்கிரயப் பத்திரத்திலே எங்க அப்பா கை யெழுத்தை நாளைக்கே வாங்கித் தரேன். தயவுசெஞ்சு இப்போ இங்கே நிக்காதே. யாராவது பார்த் தாங்கன்னு நான் இத்தனை நாள் பட்ட கஷ்டம் எல்லாம் வீணாயிடும். போயிடு'' என்று கேட்டுக் கொண்டிருந்தான்.

''நம்மள் கையிலே பணம் வருகிற வரைக்கும் நம்பள்கி தூக்கம் வரது இல்லே'' என்று கூறி நகர்ந்தான் பட்டாணியன். பட்டாணியன் போன வுடன் முத்து வந்து சேர்ந்தான்; தான் கண்டதையும் கேட்டதையும் ஒன்று விடாமல், கூறி முடித்தான்.

ரவி, ''சரி முத்து, இந்தத் திருட்டை நீ எப்படியாவது தடுக்கணும். நான் சொல்லித் தர மாதிரி செய்'' என்று முத்துவிடம் கூறினான்.

''நீ சொல்லித் தரமாதிரி என்னாலே செய்ய முடியாது. நீயே வந்து செஞ் சுடு'' என்றான் முத்து.

''என்னாலே இப்ப வர முடியாது. நான் இப்பவே எங்கப்பா கிட்ட ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேசணும்.''

''என்ன அது?''

''எங்க வீட்டை விக்க வேண்டிய நிலைமைவந்துடுச்சு. அதைப்பத்தி அப்பா கிட்டப் பேசணும். நீ முதல்லே ராஜ ரத்தினம் வீட்டிலே போய் இரு. நான் எங்கப்பா கிட்டப் பேசிட்டுப் பின்னா லேயே வந்துடறேன்'' என்றான் ரவி.

''அப்புறம் வந்து அப்பாகிட்டப் பேசேன்!''

''இல்லே முத்து! இனிமேலும் அதைப் பத்திப் பேசாமல் இருந்தா என் மனசு ஒரு நிலையிலே நிக்காது. நீ தைரிய மாகப் போ. நான் வந்துவிடறேன்.''

''சத்தியமா வருவியா? உன்னை நம்பித்தான் நான் போறேன்!''

''தைரியமாப் போ. நான் கண் டிப்பா வந்துடறேன்'' என்று ரவி கூற, முத்து மீண்டும் ராஜரத்தினம் வீட்டுக்குப் புறப்பட்டான்.

பட்டாணியன் விவகாரத்தைப் பற் றித் தந்தையிடம் பேசிவிடுவது என்று முத்துவிடம் கூறிய தீர்மானத்தின்படி ரவி தன் தந்தைக்காகத் தோட்டத் திலேயே காத்துக் கொண்டிருந்தான்.



## இவனுடைய இந்தக் குதூகலத்துக்குக் காரணம் தெரிய வேண்டுமா?

43-ம் பக்கம் பாருங்கள்!

'மற்றவர்களுக்குத் தெரியாமல் அவரோடு இது பற்றிப் பேசித் தீர்த்து விடவேண்டும்' என்று நினைத்தான் ரவி. சாப்பாட்டுக்குப் பிறகு சிறிது காலார நடந்து வருவதாகக் கூறி, வெளியே சென்றிருந்த சபாபதியின் வரவை நோக்கி ரவி நின்றான்.

இரவு மணி பன்னிரண்டு அடிக்கச் சில நிமிடங்களே இருந்தன. ராஜரத்தினம் வீட்டுத் தோட்டத்திலே நிகழ்ச்சிகள் வேகமாக நடக்க ஆரம்பித்தன. எதிராஜ் ஒரு மாமரத்தில் ஏறி மாடியில் குதித்தான். குளிக்கும் அறைக்குள் சென்று சலவைக் கல்லை நகர்த்தி இரகசிய அறையிலிருந்து நகைப்பெட்டியை எடுத்துவிட்டு இரகசிய அறையை மூடினான். நகைப் பெட்டியைத் திறந்து அந்த ஜாஜ்வல்யமான நெக்லெஸை ஒரு நிமிடம் மனமாரக் கண்டு மகிழ்ந்து விட்டு அதை எடுத்துக் கொண்டு மீண்டும் தான் ஏறிக் குதித்த மரத்தின் அருகில் வந்து இறங்குவதற்கு ஆயத்தமானான். கீழே சிங்காரம் நிற்கிறானா என்று எட்டிப் பார்த்தான். அந்த இருட்டில் அங்கு ஓர் உருவம் இவனுக்காகக் காத்து நிற்பது தெரிந்தது. ''சிங்காரம்!'' என்று மெதுவாகக் கூப்பிட்டான் எதிராஜ். ''உம்?'' என்று அந்த உருவம் பதிலளித்தது.

''நெக்லெஸைப் போடறேன், பிடிச்சுக்க'' என்று கூறிவிட்டு எதிராஜ் நெக்லெஸைப் பெட்டியோடு கீழே போடக் கீழே காத்து நின்ற உருவம் அதைப் பிடித்துக் கொண்டது. ஆனால் எதிராஜ் சற்றும் எதிர்பாராத விதமாக அந்த உருவம் நகையை எடுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தது. எதிராஜ் துணுக்குற்றான். 'என்ன இது? சிங்காரம் தனக்குத் துரோகம் செய்கிறானா!' என்று திடுக்கிட்டான். எதிராஜ் அப்படியே மரத்தின் வழியாகத் தாவிக் குதித்து அந்த உருவத்தைத் துரத்திக் கொண்டு ஓடினான். தெருக்களின் வழியே ஓடும்போது ஏதோ ஒரு விளக்கு வெளிச்சத்தில் நகையை எடுத்துக்கொண்டு ஓடும் அந்த உருவத்தை எதிராஜ் நன்றாகக் கவனித்தான். அது முத்து என்று தெரிந்தது. எதிராஜுக்கு மேலும் வியப்பு அதிகரித்தது. 'இந்த அசட்டுக்கு இவ்வளவு துணிச்சலா? சிங்காரம் என்ன ஆனான்?' என்று நினைத்தவாறே முத்துவைத் துரத்தினான்.

'எதிராஜ் நகையைக் கீழே போடும் போது முத்து எவ்வாறு அங்கு வந்து தயாராக நின்றான்?' என்பது பெரிய விஷயமல்ல. ரவியின் சொல்படி ராஜரத்தினம் வீட்டுக்குத் திரும்பி வந்த முத்து எதிராஜ் சிங்காரத்தைக் கீழே நிற்கச் சொல்லி விட்டு மாடி ஏறிக் குதிப்பதைப் பார்த்தான். அவர்கள் பேசுவதைக் கேட்டு, 'எதிராஜ் மேலேயிருந்து நகைப் பெட்டியைத் தூக்கிப் போடப் போகிறான். அது கீழே சிங்காரம் கையில் வந்து விழப் போகிறது! பிறகு எதிராஜும் இறங்கி வந்து இருவருமாக ஊரை விட்டே ஓடப் போகிறார்கள்' என்பதையும் அறிந்து கொண்டான். எதிராஜ் மேலே ஏறிச் சென்ற பிறகு, அவன் திரும்பி வருவதையே எதிர்நோக்கி அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த சிங்காரத்தையே உற்றுப் பார்த்தான் முத்து. தன்னால் வீட்டுக்குள் விடப்பட்ட திருடனின் செயலைத் தானே தடுக்க இதை விட்டால் வேறு சந்தர்ப்பம் கிடையாது என்பதை உணர்ந்தபோது அவனுக்கு ஒரு வெறியே வந்தது. அருகிலிருந்த ஒரு குண்டாந்தடியால் பின்புறமாகச் சிங்காரத்தின் மண்டையில் ஓங்கி ஓர் அடி அடித்தான். சிங்காரம் வீழ்ந்

தான். அவனைச் செடி மறைவில் தள்ளி விட்டுத்தான் முத்து அந்த இடத்தில் நின்றுகொண்டிருந்தான். கீழே நடந்தவற்றை அறியாத எதிராஜ் நகையைப் போட முத்துவும் அதைப் பிடித்துக் கொண்டு ஓடினான்.

இப்போது முத்துவும், அவனைத் துரத்திக் கொண்டு எதிராஜும் பல தெருக்களின் வழியாக ஓடிக்கொண்டிருந்தார்கள். மணி சுமார் பன்னிரண்டரை இருக்கும்.

இதே நேரத்தில் சினிமாப் படம் முடிந்து, ராஜரத்தினமும் கிரிஜாவும் தங்கள் வீட்டுக்கு வந்தனர். தங்களுக்கு முன்பாகவே அங்கு ஒரு போலீஸ் ஜீப் வந்து நின்றதை அவர்கள் கவனித்தார்கள். விஷயம் புரியாமல் ராஜரத்தினம் பயந்து, அவசரமாகக் காரிலிருந்து இறங்கினார். இன்ஸ்பெக்டர் ராஜரத்தினத்திடம் ''நீங்கதானே மிஸ்டர் ராஜரத்தினம்?'' என்று கேட்டார்.

''ஆமாம்'' என்றார் ராஜரத்தினம். ''இன்ஸ்பெக்டர் ஸார், இதென்ன இந்த வேளையில்? என்ன நடந்துடுச்சு?''

''ஒண்ணுமில்லே. எதுவும் நடக்கிறதுக்கு முன்னாலே தடுக்கணும்னு தான் வந்திருக்கோம்'' என்று ஆரம்பித்து, டாக்டர் மேகநாதனிடமிருந்து அறிந்து கொண்ட விஷயங்களை ராஜரத்தினத்திடம் கூறினார் இன்ஸ்பெக்டர்.

'டாக்டர் மேகநாதனை அடித்துப் போட்டு, அடைத்து வைத்துவிட்டு, அவர் பெயரைச் சொல்லிக் கொண்டு யாரோ திருடர்கள் தம் வீட்டில் நகையைத் திருடுவதற்காகத் திட்டம் போட்டு வந்திருக்கிறார்கள்' என்று புரிந்து கொண்டார் ராஜரத்தினம். முத்துவும் எதிராஜும் கூட்டாளிகள் என்று தீர்மானித்தார். முத்து வைத்தியம் ஏதும் செய்யாமல் நாய்க்குப் பயந்து ஓடிக் கொண்டேயிருந்ததையெல்லாம் நினைத்தார். 'திருடன்தானே! அதுதான் நாயைக் கண்டு அப்படிப் பயப்படுகிறான். அப்பாவி மாதிரி இருந்து கொண்டு என்ன வேலை செய்யப் பார்த்திருக்கிறான்!' என்று நினைத்துத் திகைத்தார். அவர் தமது சந்தேகங்களை இன்ஸ்பெக்டரிடம் விவரமாகக் கூறினார்.

இன்ஸ்பெக்டர், ''சரி, இதுவரைக்கும் ஒண்ணும் நடக்கலே. உடனே அந்த ரெண்டு பேரையும் 'அரெஸ்ட்' பண்ண வேணும். டாக்டர் மேகநாதன்னு சொன்ன ஆள் எங்கே?'' என்றார்.

''என் சிநேகிதன் சின்னதுரை வீட்டிலே தன் அப்பாவோட போய் இருக்கிறான். அங்கே என்ன திட்டமோ? தெரியலே'' என்றார் ராஜரத்தினம்.

''சரி, உடனே அங்கே வந்து அந்த ஆளைக் காட்டுங்க. நான் 'அரஸ்ட்' பண்ணிடறேன்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

ராஜரத்தினம் ஒன்றும் புரியாமல் விழித்துக் கொண்டு நின்ற கிரிஜாவையும் அழைத்துக் கொண்டு, தம் காரில் புறப்பட, போலீஸ் ஜீப்பில் இன்ஸ்பெக்டர், கான்ஸ்டபிள்கள் சகிதம், அவரைப் பின்தொடர்ந்தார்.

சற்றுக் காலார நடந்து வருவதாகக் கூறிச் சென்ற சபாபதி பீச்சுக்குச் சென்று மணலில் படுத்தவர் சற்றே கண்ணயர்ந்து விட்டார். எழுந்து பார்த்தபோது மணி பன்னிரண்டாகியிருந்தது. அவசரம் அவசரமாகச் சின்னதுரை வீட்டை நோக்கி நடந்தார். அவர் சின்னதுரை வீட்டு வாசலுக்கு வருவதற்கும், ராஜரத்தினம் தமது காரிலும், இன்ஸ்பெக்டர் போலீஸ் ஜீப்பிலும் அங்கு வந்து சேருவதற்கும் சரியாக இருந்தது.

ராஜரத்தினத்துக்குக் காரில் வரும் போதே ஒரு பெரிய சந்தேகம் பிறந்து விட்டது. 'பெரிய டாக்டர் என்று சொன்னவன் இங்கு இருக்கிறான். ஆனால் உதவி டாக்டர் எதிராஜ் தன் வீட்டிலேயே அல்லவா இருக்கிறான்? அவன் நகையை ஏதும் செய்துவிடக் கூடாதே. அது பத்திரமாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டும்' என்று அவர் மனம் படபடத்தது. 'சரி இன்ஸ்பெக்டருக்கு இந்தப் பெரிய டாக்டர் வேஷக்காரனை அடையாளம் காண்பித்து விட்டு வீட்டுக்கு விரைய வேண்டும்' என்று தீர்மானித்தே வந்து சேர்ந்தார்.

இப்போது அவருடைய காரின் விளக்கு வெளிச்சத்தில் சின்னதுரையின் வீட்டு வாசலில் சபாபதி நிற்பதைப் பார்த்தார். இன்ஸ்பெக்டரிடம் அவசரம் அவசரமாக, ''அதோ அவர்தான் நம்ம ஆளின் அப்பா. இவர் பிள்ளைதான் எங்க வீட்டிலே டாக்டர் மேகநாதன்னு சொல்லிக்கிட்டு வந்தது'' என்று சபாபதியைச் சுட்டிக் காட்டிவிட்டு, இன்ஸ்பெக்டரின் பதிலுக்குக் கூடக் காத்திராமல், காரைக் கிளப்பிக் கொண்டு தம் வீட்டை நோக்கி விரைந்தார். முத்துவின் தகப்பனாராகச் சபாபதி ராஜரத்தினத்திடம் அறிமுகப் படுத்தி வைக்கப்பட்டிருந்தார். அதனால் வந்த குழப்பம் இது. இன்ஸ்பெக்டர் சபாபதியை நோக்கி வந்தார்.

இதே சமயத்தில் தோட்டத்தில் தந்தைக்காகக் காத்திருந்த ரவியும் தந்தையை நோக்கி வந்தான். (தொடரும்)

மகிழ்ச்சியான மணவாழ்வுக்கு
திட்டமிடத் தருணம் இதுவே

# இன்றே I.O.B.யில்
# ஒரு சேவிங்ஸ் கணக்கு ஆரம்பியுங்கள்

சேமிக்கக்காரணம் எதுவாயினும் ஐஓபி உங்கள் பாங்காக இருக்கட்டும்

ஐஓபி-பணிசெய் அளவு திறன் உண்டு, உம்முடன் பழகும் அளவு பணிவுண்டு

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

தலைமை காரியாலயம்: 151, மவுண்ட் ரோடு, மதராஸ்-2



M. Ct. முத்தையா, சேர்மன்   G. லக்ஷ்மிநாராயணன், ஜெனரல் மானேஜர்

iob-4198

# அறுபத்தெட்டு பற்றி ஆறுபேர்!

1968ஆ? அதைப்பற்றி நினைக்கவே கொஞ்சம் அச்சமாகத்தான் இருக்கிறது. என்னைப் பொறுத்த வரை 68ம் ஆண்டு 67 போலவே இருந்துவிட்டால் நல்லது என்று தோன்றுகிறது. உங்களுக்கு வியப்பாக இருக்கிறதா? நான் சார்ந்திருக்கும் தமிழ்த் திரைப்படத் துறை அப்படி இருக்கிறது. 67ல் தமிழ்ப் பட விநியோக பிஸினெஸ் ரொம்பச் சுருங்க ஆரம்பித்துவிட்டது. பொருளாதார மந்தத்தைப் பிரமாதப்படுத்தி நான் சொல்லவில்லை. அது ஒரு பக்கம் இருக்கவே இருக்கிறது. முன்பெல்லாம் மைசூர் மாநிலத்திலும் கேரளாவிலும் தமிழ்ப் படங்கள் நிறைய ஓடும். இப்போது நிலைமை மாறி விட்டது. கன்னடப் படங்கள் வெளிவரத் தொடங்கி விட்டன. மலையாளப் படங்களை எடுத்துத் தள்ளிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களால் குறைந்த முதலீட்டில் படங்களைத் தயாரித்து வெளியிட முடிகிறது. குறைந்த கால அளவிலும் படமெடுத்து முடித்து வெளியிட முடிகிறது. அந்தப் பிரதேசங்களிலெல்லாம் இப்போது தமிழ்ப் பட மார்க்கெட் 'டௌன்' தான். ஆகவே தமிழ்ப் படங்களின் விநியோக எல்லை சுருங்கிவிட்டது. முதலீடு செய்பவர்கள் தயங்குவது நியாயந்தானே?



1 படாதிபதி



2 எம். எல். வி.



3 குடும்பத் தலைவி

தரமான படங்களைத் தயார் செய்வது என்பது கற்பனையோடு நிற்க வேண்டிய விஷயம் தமிழ்ப் படத் துறையிலே. கணிதத்திலே இருக்கும் மாற்ற முடியாத நிரந்தர வாய்ப்பாடுகளைப் போல் தமிழகப் படத்துறையில் சில 'பெர்மனென்ட் பார்முலாக்கள்' உண்டு. அதை மாற்ற முயலுபவர்களுக்கு உற்சாகம் அளிக்க ஆள் கிடையாது. இந்த வகையில் மலையாளப் படத் துறை அதிருஷ்டம் பெற்றது.

வரும் ஆண்டில் 'நூறு நாள் ஓடிய படம்' என்ற பெருமைக்கு யாரும் ஆசைப்பட மாட்டார்கள். நாலு வார கால அளவுக்குத் தங்கள் லட்சியத்தைச் சுருக்கிக் கொள்வார்கள். அந்த நிலை இப்போதே ஆரம்பமாகிவிட்டது. இப்படியே இருந்தாலும் போதும்! தொழில் பிழைத்துக் கொள்ளும். நாங்களும் பிழைத்துக் கொள்வோம்.

**கே. பாலசந்தர்:** *திரைப்பட டைரக்டர்*

1967 இதோ முடியப் போகிறது. இவ்வருடம் மக்களைப் பல காரணங்களினால் துயரத்தில் ஆழ்த்தியதே தவிர, நன்மையையும் சுகத்தையும் குறைவாகத்தான் அளித்தது. போதாக்குறைக்குச் சமீபத்தில் பூகம்பம் வேறு ஏற்பட்டுப் பலத்த சேதத்தை உண்டாக்கி விட்டிருக்கிறது. 1968ம் வருடமாவது மக்களுக்கு நன்மையைக் கொடுக்கக் கூடிய வருடமாக இருக்க வேண்டும் என்று இறைவனை வழிபடுகிறேன்.

சமூகத்திலும் ஸ்தாபனங்களிலும் சட்டசபைகளிலும் சச்சரவு. மனக் கசப்பை ஏற்படுத்தும் மாபெரும் கலவரங்கள். மத்திய சர்க்காரின் ஆட்சித் திறன் மங்கல். குழப்பத்திலேயே ருசி கண்ட கட்சிகளின் திட்டமிட்ட கிளர்ச்சி. இவைகளெல்லாம் சேர்ந்து 67ல் ஜனநாயகத்தின்பால் ஏற்பட்டிருக்கும் நம்பிக்கையையே தகர்க்க முயன்றன. சமதர்மம் என்ற சொல் அடிபட்டாலும் தர்மம் வரவரக் குறைந்து விட்டது. பல துறைகளிலும் நாணயமும் மெலிந்து விட்டது.

பாரத தேசம் தர்மத்துக்காகப் பேர் போனது. வியாச பகவான் லட்சம் கிரந்தங்களடங்கிய பாரதத்தை எழுதிவிட்டு, அதன் முடிவிலே 'கையைத் தூக்கிக்கொண்டு கதறுகிறேன்! தர்மத்தினாலேதான் எல்லா நலன்களும் ஏற்படுமே தவிர வேறொன்றினாலுமல்ல. யாரும் இதைச் செவிசாய்ப்பதில்லை' என்று வருத்தத்துடன் முடிக்கிறார். அந்த நிலைதான் இப்போது இருக்கிறது.

எந்த அரசியலும் தர்மத்தை அடிப்படையாகக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு

மனிதனும் தர்மத்தையே பின்பற்ற வேண்டும். அந்த நோக்கத்தில்தான் சமூகம் நன்ருக வளரும். சமூகம் நன்ருக இருந்தால் தான் அரசியல் நன்ருக நடக்கும்.

1968ல் இந்தத் தர்ம உணர்ச்சி வளர்ந்து மக்களைக் கடவுள் நம்பிக்கையிலும் பாரத நாட்டுப் பண்பின் ஈடுபாட்டிலும் திருப்பி அவர்களுக்கு மனச்சாந்தி கிடைக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

கே. பாலசுப்ரமணிய ஐயர், எம்.எல்.ஸி.

1968ல்தான் என் மண வாழ்க்கையின் ஆறுவது வருடம். நினைத்துப் பார்க்கும்போது காலம் எத்தனை வேகமாக ஓடுகின்றது என்ற பிரமிப்பே ஏற்படுகிறது. கடந்த ஐந்து வருடங்களில் நாங்கள் ஐந்து ஜாகைகள் மாற்றிவிட்டோம். 68லும் ஜாகை மாற்றவேண்டிய அவசியம் ஏற்பட்டால் நான் ஆச்சரியப்பட மாட்டேன். இது எங்களுக்குப் பழகிப் போன விஷயம். ஒவ்வொரு புது ஜாகையிலும் ஏதாவது ஒரு புது சௌகரியம் கிடைக்கும் என்ற நம்பிக்கை உண்டு. இந்த நம்பிக்கையில் என்னுடைய அன்ருட வீட்டு வேலைகளின் கால அளவைச் சுருக்கிப் பழகியிருக்கிறேன். இப்போது கிடைக்கும் பல நவீன சாதனங்கள் அடுப்படியில் என்னை அதிகம் அவதிப்படாமல் காப்பாற்றுகின்றன. 68லும் எனக்கு இந்தவகையில் புதிய சாதனங்கள் கிடைத்தால், அதனுல் மிஞ்சும் நேரத்தை என் குழந்தையைச் சீராக வளர்க்க உபயோகிப்பேன். ஒரு லட்சிய மனைவியாகவும் ஒரு லட்சியத் தாயாகவும் விளங்க 1968 எனக்கு உதவாமலா போய்விடும்?

ஸ்ரீமதி பிரபா நாகராஜன்,
அபிராமபுரம், சென்னை.

67ல் பற்ருக்குறை மாநிலங்கள், உணவு உற்பத்தியில் உபரி காணும் மாநிலங்கள் என்ற வகையில் பிரிவுகள் இருந்தும், ஏதோ சில கட்டுப்பாடுகளினுலும், பரஸ்பரம் புரிந்து கொள்ள முடியாத நிலையினுலும் உணவுப் பொருள் விநியோக அமைப்பு சீர்குலைந்து விலைவாசிகள் ஆகாயத்தைத் தொட்டன.

கல்வித் துறையில் அரசியல் துறை வெகுவாக ஊடுருவி அநேகமாக ஒவ்வொரு மாண



4 உத்தியோகஸ்தர்: தொழில் துறை



5 ஆணையாளர்: அஞ்சல் துறை



6 பிரசுரகர்த்தர்

1. அறுபத்தெட்டா, நினைக்கவே கொஞ்சம் அச்சமாக இருக்கிறது!

2. 'கையைத் தூக்கிக் கொண்டு கதறுகிறேன். தர்மத்தினுலேதான் எல்லா நலன்களும் ஏற்படும்' என்ருர் வியாசபகவான்.

3. லட்சியத் தாயாக நான் விளங்க '68 உதவாமலா போய்விடும்?'

4. '67 ஒரு சோதனை ஆண்டு' 68 அப்படி இருக்கக் கூடாது.

5. ஆஸ்திரேலியா சென்றுள்ள பாரத கிரிக்கெட் கோஷ்டி சூடு பிடித்து ரன்களைக் குவிக்க வேண்டும்.

6. '68 நன்ருக இருக்க வேண்டும் என்றுதான் யாரும் சொல்வார்கள். நாசமாகப் போக வேண்டும் என்று சபிப்பார்கள்?'

வனும் தன்னை ஒரு மாபெரும் தலைவன் என்று நினைத்துக் கண்ணாடி முன் நின்று பெருமிதமடையும் நிலை இருந்தது. 'சிலபஸ்' (Syllabus) முடிவடைந்தனவோ என்னவோ பல பஸ்களின் ஆயுட்காலம் அனுயாசமாக முடிந்தன. பல கல்வி நிறுவனங்களில் திறக்கப்பட்டிருந்த நாட்களை விட மூடப்பட்டிருந்த நாட்களே மிகுதி.

தொழில் பெருக்கம், அதிக உற்பத்தி என்ற குரல்கள் ஒரு பக்கமும்; வேலை நிறுத்தம், தொழிலாளர் தகராறு என்ற கூக்குரல்கள் மறுபக்கமும் ஒலித்து முன்னேற்றப் பாதைக்கு முட்டுக்கட்டைச் சின்னக் கொடி பிடித்ததும் இந்த 67ம் ஆண்டில்தான். தொழிலாளர்கள், நிர்வாகத்தினர் உறவு வளராமல் சீர்கேடடைந்து தனிப்பட்டவர்களின் பொருளாதாரமும் தேசியப் பொருளாதாரமும் சேர்ந்து பாதிக்கப்பட்டன.

1967ம் ஆண்டு ஒரு சோதனை ஆண்டு. இந்த ஆண்டில் வேதனையிலும் துயரிலும் மக்கள் கற்றுக் கொண்ட படிப்பினை அதிகம். 1968ம் ஆண்டில் தாங்கள் கற்ற படிப்பினையின் பயனை அவர்கள் புறக்கணிக்க வேண்டிய சித்தாந்தங்களையும் கோட்பாடுகளையும் ஒதுக்கி, வாழ்க்கையில் ஒரு புது மலர்ச்சியைக் காண்பார்கள் என்று நான் நம்புகிறேன். 1968ம் ஆண்டு நிச்சயமாக இந்த ஆண்டை விட நன்மை பயக்கும் ஆண்டாக இருக்கும் என்றே நம்புகிறேன்.

— பி. ராமநாதன்,
என்பீல்ட் இந்தியா நிறுவனம்

1968ம் ஆண்டுத் தொடக்கம் செழிப்பாகவே இருக்கும் என்பதற்கான சூசகம் இப்போதே தோன்றிவிட்டிருக்கிறது. படுமோசமாயிருந்த 1967க்கு இது ஒரு நல்ல மாற்றமாகவே இருக்கும்.

சர்க்கரை எங்கும் நிறையக் கிடைக்க வேண்டும். மக்கள் வாழ்க்கை இதனாலும் இனிமை பெறலாம். உணவும் இதே நிலை தான்.

உழைப்புக்கு முதலிடம் கொடுக்க வேண்டும் என்ற பொறுப்பு உணர்ச்சி மக்களிடம் தோன்ற வேண்டும். வறுமை நீங்கி அவர்கள் வாழ்க்கை வளம் பெறலாம்.

ஆஸ்திரேலிய நாட்டிற்குப் போயிருக்கும் நம் பாரத கிரிக்கெட் கோஷ்டி கொஞ்சம் கொஞ்சமாகச் சூடு பிடித்துக் கொண்டு நிறைய ரன்களை எடுத்துக் குவிக்க வேண்டும். இதனால் விளையாட்டுத் துறையில் நம் பெருமை உயரலாம்.

தற்போது டில்லி அருகில் நடத்தப்படும் பரிசோதனைகள் வெற்றி பெற்றால் நம் நாட்டு ரயில் வண்டிகள் எண்பதிலிருந்து நூறு மைல் வேகம் வரை விபத்துக்கள் இல்லாமல் குறித்த நேரத்தில் ஓடலாம். இதனால் மக்களின் நேரம் வேறு நல் வழியில் உபயோகமாக மீதப்படலாம்.

இந்த 68ல் தான் சர்வதேசக் கண்காட்சி சென்னையில் நடக்கவிருக்கிறது. நம்மை நாமே எடை போட்டுப் பார்த்துக் கொள்வதற்கும், உலகை நம் கண் கொண்டு நோக்குவதற்கும் இந்த வாய்ப்பு நமக்கு உதவலாம். 1968ஐ நல்லதோர் ஆண்டாக நான் வரவேற்கிறேன்.

— கே. என். வேங்கடராமன்,
வெளி நாட்டு அஞ்சலகப் பிரிவு ஆணையாளர்

1968 எப்படி இருக்க வேண்டும்? நன்றாக இருக்க வேண்டும் என்றுதான் யாரும் சொல்லுவார்கள். நாசமாய்ப் போகட்டும் என்றா சொல்வார்கள்? எல்லோரும் வாழ ஆசைப்படுபவர்கள்தானே?

எல்லாத் துறைகளிலும் மலிந்து கிடக்கும் ஒழுக்கக் கேடுகள் ஒழிய வேண்டுமானால், உண்மையான நாட்டுப் பற்று உணர்ச்சி ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஏற்பட வேண்டும். இந்த உணர்வை ஊட்டி வளர்க்கும் விரதத்தில் எல்லோரும் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். இந்நாட்டின் பிரச்னைகள் தீர இந்த விரதம்தான் வழிகாட்டும். குறுகிய எண்ணங்கள் மறையவும் அடிப்படை வாழ்க்கையில் சுபிட்சம் ஏற்படவும் 1968 உதவட்டும்; உதவும் என்றே நானும் நம்புகிறேன்.

— எஸ். சங்கரன்,
உரிமையாளர்: மல்லிகைப் பிரசுரம்

---

"எங்கே சார் படுக்கையுடன் கிளம்பி விட்டேன்?"

"நீங்க கிளம்பிண்டிருக்கிற அதே இடத்துக்குத்தான் — சங்கீதக் கச்சேரிக்கு!"




பாடகர்: என் வீட்டை எப்படி அடையாளம் கண்டுபிடிச்சு வந்தீங்க?

சபா காரியதரிசி: உங்க பாட்டைக் கேட்டு.

பாடகர்: இப்போ நான் பாட்டு ஏதும் பாடலையே!

சபா காரியதரிசி: உங்க சம்சாரத்துக்கிட்டே பஞ்சப்பாட்டு பாடிண்டு இருந்தேளே?



# கல்லுக்குள் ஈரம்

### அத்தியாயம் 50

## எதை நினைத்து அழுதான்?

**ப**னிக் காலத்தின் கடுங்குளிரில் இரவுப் போர்வைகூட இல்லாமல் சிறைக்குள் முடங்கிக் கிடந்தான் ரங்கமணி. விடிந்தால் அவனுக்கு விடுதலை. அதைப் பற்றி அவனுக்கு அக்கறை இல்லை. அவனுடைய விடுதலையைப் பற்றி நாலைந்து நாட்களுக்கு முன்னால் அவனிடம் சிறை அதிகாரி கூறியபோது, ரங்கமணியிடம் எந்தவித பரபரப்பும் தோன்றவில்லை. இந்தியா விடுதலையடைந்துவிட்டது என்ற செய்தி கூட அவன் இதயத்தைத் தீண்டவில்லை.

ஐந்து ஆண்டுகளாகச் சிறையில் ஓர் இயந்திரத்தைப் போலவே காலத்தைக்



ர. சு. நல்லபெருமாள்

வெள்ளிவிழா இரண்டாவது பரிசு நாவல்

கடத்தி விட்டான். அவனுக்குச் சிறையும் வீடும் ஒன்றுதான். வெளியில் வந்தால் அவனுக்கு வேண்டியவர்கள் யார் இருக்கிறார்கள்? எதை நினைத்து அவன் ஆவலோடு வெளியே வர வேண்டும்? யாருக்காக அவன் வாழப் போகிறான்?

அவனுடைய பிரிவைத் தாளாமல் அவன் சிறைக்குள் சென்ற ஒரு வாரத்துக்குள் அவன் தாத்தா இறந்த செய்தி அவனுக்குக் கிடைத்தது. அப்போது அவன் அழவில்லை. ஒரு நீண்ட பெருமூச்சுத்தான் வெளி வந்தது. கிழவர் கடைசியில் மன



வேதனைகளிலிருந்து விடுதலை யடைந்தாரே என்றுதான் திருப்தி யடைந்தான். அவரும் போனபிறகு அவனுக்கு வெளி உலகில் வேறு என்ன இருக்கிறது? ஆயுட் காலம் முழுவதும் வேண்டுமானாலும் அவன் சிறையிலேயே இருந்துவிடவும் தயார்தான். இனி இந்த மண்ணில் எதை நினைத்து அவன் மகிழப் போகிறான்? கடந்த காலம் அவனைப் பிணமாக்கி விட்டது. எதிலுமே நாட்டமில்லாமல் இயந்திரத்தைப் போல்தான் சிறைக்குள் உலவினான். சில சமயங்களில் பழைய நினைவுகள் அவன் கண்களில் நீரைத் தேக்கிவிடும். எல்லாமே ஏதோ ஒரு கனவில் நடந்து மறைந்துவிட்ட காட்சிகள் என்றுதான் நினைத்துவிட முயன்றான். அவனுடைய ஆசையெல்லாம் இப்போது ஒன்றே ஒன்றுதான். மகாத்மா காந்தியின் கால்களில் விழுந்து கதற வேண்டும் என்றுதான் துடித்தான். அவனுடைய கண்ணீரால் அந்த மகானின் பாதங்களை நனைத்தால்தான் அவன் மனம் சாந்தியடையும். யாரைக் காணவே கூடாது என்று வைராக்கியமாக இருந்தானோ, யாருடைய படம் கூடத் தன் பக்கத்தில் இருக்கக் கூடாது என்று நினைத்தானோ, யாருடைய பெயரைக் கேட்டதும் மனம் கசந்தானோ, அந்த மகாத்மாவின் தரிசனத்துக்காக ஏங்கித் தவித்தான்.... அகிம்ஸையின் விரோதி என்று தன்னைச் சொல்லிக் கொள்வதில் பெருமையும் திருப்தியும் கொண்டிருந்த ரங்கமணி, இன்று, அஹிம்ஸாமூர்த்தியின் சந்நிதியில் நுழையத் தவம் கிடக்கிறான். அவன் நெஞ்சில் நிறைந்திருந்த வெறியையும், பழி தீர்க்கும் உணர்வையும் திரிவேணி ஒரு நொடியில் துடைத்து விட்டாள். அவள் சிந்திய இரத்தத்தில் அவன் புனிதமடைந்து விட்டான்.

கடந்த காலம் அவன் இதயத்தில் வேதனைகளை நிரப்பிவிட்டது. திரும்பிப் பார்க்கக்கூட மனம் கூசினான். தந்தைக்காகப் பழி வாங்க வேண்டும் என்று துடித்த மனம், அன்பின் சக்தியை உணர்ந்து பரிதவிக்கிறது. அவனுடைய தவிப்பெல்லாம் மகாத்மாவைக் கண்டால்தான் தணியும். அவரைக் காணக் கூடத் தனக்குப் பாக்கியம் கிட்டாது என்றுதான் நினைத்து விரக்தியடைந்து விட்டான்.

இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு, சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றவர்களை இந்திய அரசாங்கம், விடுதலை செய்ய உத்தரவு பிறப்பித்தது.

மறுநாள் காலையில் அவன் விடுதலையடைந்து வெளியேறி என்ன செய்வது என்ற பிரச்னையில் மூழ்கியிருந்தான். தான் ஓர் அநாதை என்ற உணர்வு அவனை அழுத்தியது. வாழ்க்கையில் அவனிடம் அன்பு காட்ட எத்தனையோ பேர் வந்தார்கள். கால வெள்ளத்தில் அவனை மட்டும் தனியே நிறுத்திவிட்டு எப்படி எப்படியோ போய்விட்டார்கள். மீதி வாழ்க்கையை மகாத்மாவின் நிழலில் ஒதுங்கியே கழித்துவிட முடிவு செய்தான்.

மறு நாள் காலையில் ரங்கமணி விடுதலை அடைந்து சிறைச்சாலையின் வாசலை விட்டு வெளியே வந்தபோது திகைத்து விட்டான். அவனை வரவேற்கச் சிவானந்தமும், கமலவாசகியும், தீக்ஷிதரும் தயாராக வெளியில் காத்து நின்றதைக் கண்டதும் அவன் கண்களில் நீர் நிறைந்து விட்டது. சிவானந்தம் பரவசத்துடன் ரங்கமணியை அணைத்துக் கொண்டான். தீக்ஷிதர் கண்களில் நீர் மல்க அவனை இறுகக் கட்டிக் கொண்டார்.

உடனே அம்பாசமுத்திரம் போகப் புறப்பட்டான் ரங்கமணி. ஆனால் சிவானந்தம் விடவில்லை.

''எங்கும் போகக் கூடாது. சில நாட்கள் என்னோடு இருந்துவிட்டுத்தான் பிறகு மற்ற இடங்களுக்குப் போக வேண்டும்'' என்று சிவானந்தம் வற்புறுத்தினான். ரங்கமணி தயங்கினான். கமலவாசகியும் சேர்ந்து வற்புறுத்தவே அவனால் மறுக்க முடியவில்லை. மனம் குழம்பி நின்றான்.

''அதுவும் சரிதான், அவர்களோடு சில நாட்கள் இரு. உன் மனத்துக்குச் சற்று ஆறுதலா யிருக்கும். யாருமில்லாத அம்பாசமுத்திரத்து வீட்டுக்குப் போய் என்ன செய்யப் போகிறாய்?'' என்றார் தீக்ஷிதர்.

ரங்கமணி பதில் ஒன்றும் பேசாமல் சிவானந்தத்தைப் பின்தொடர்ந்தான்.

சில நாட்கள் சிவானந்தத்தோடு இருந்தான். அவன் மனம் சதா தவித்துக் கொண்டே யிருந்தது. மகாத்மாவைக் காண வேண்டும் என்ற துடிப்புத்தான்.

அந்தச் சமயத்தில் வட இந்தியாவில் நடந்த இந்து முஸ்லிம் படுகொலைகளைப் பற்றிச் செய்திகள் வந்து கொண்டிருந்தன. நவகாளியில் நடந்த கோர சம்பவங்களை எண்ணி எண்ணி மனம் பரிதவித்தான் ரங்கமணி. சொந்த வீட்டில் சகோதரர்கள் வெட்டிக் கொண்டு மாளும் கொடுமையை நிறுத்த நவகாளி நோக்கி மகாத்மா

புறப்பட்ட செய்தி கேட்டு மனம் சிலிர்த்தான். அவரைத் தானும் தொடர வேண்டும் என்று துடித்தான். ஆனால் தீக்ஷிதர் தடுத்து விட்டார். மகாத்மா காந்தி தில்லிக்குத் திரும்பிய பிறகு அவரைச் சந்திக்கச் செல்வது என்று முடிவு செய்தான் ரங்கமணி.

ரங்கமணி தில்லிக்குப் புறப்பட்ட போது துணைக்குத் தீக்ஷிதரும் புறப்பட்டார்.

தில்லிக்குப் புறப்படுவதற்கு முந்தின நாள் இரவு, ரங்கமணி தனக்கு வேண்டிய சாமான்களை ஒரு சிறு கைப் பெட்டியில் எடுத்து வைத்துக் கொண்டிருந்தான். சிவானந்தம் பத்திரப்படுத்தி வைத்திருந்த அவனுடைய பெட்டியைத் திறந்தான். உள்ளே தூசியும் குப்பையுமாயிருந்தது. ஒரு மூலையில் சிலுவைப் பொம்மை கிடந்தது. அதை எடுத்துத் தூசியைத் துடைத்துக் கைப் பெட்டிக்குள் பத்திரப்படுத்தினான்.

''இது எதற்கு?'' பக்கத்தில் இருந்த சிவானந்தம் கேட்டான்.

''மகாத்மா கொடுத்த பொம்மை. அவரிடமே திருப்பிக் கொடுத்துவிடத்தான். இதை வைத்திருக்கும் அருகதை எனக்கு இல்லை'' என்றான் ரங்கமணி. ஒரு சோகப் புன்னகை அவன் இதழ்களில் தோன்றி மறைந்தது.

மறுநாள் ரங்கமணியையும் தீக்ஷிதரையும் வழியனுப்பிவைக்கச் சிவானந்தமும், கமலவாசகியும் ரயில் நிலையத்துக்கு வந்திருந்தார்கள். ரயில் வண்டி புறப்படும் போது, ''மகாத்மாவைச் சந்தித்துவிட்டுத் திரும்பும் போது புது மனிதனாகி விடுவீர்கள். அவருடைய தரிசனந்தான் உங்கள் மன வேதனைகளை அகற்ற முடியும்'' என்று சிவானந்தம் சொன்னான்.

'' சீக்கிரம் திரும்பி விடுங்கள் '' என்றாள் கமலவாசகி.

இதைக் கேட்டு ரங்கமணியின் உதட்டில் ஒரு சோகப் புன்னகை தோன்றியது —

யாருக்காக அவன் திரும்ப வேண்டும்? யாரை நினைத்துப் பழைய இடத்துக்கு வரவேண்டும்? இனி திரும்பவே கூடாது, மகாத்மாவின் அருகிலேயே காலத்தைப் போக்கிவிட வேண்டும் என்ற முடிவில்தான் புறப்பட்டுவிட்டான். தன்னுடைய அந்தரங்கத்தை யாரிடமும் சொல்லவில்லை.

கமலவாசகியை ஒரு முறை உற்றுப் பார்த்தான். ஆனால் பதில் ஒன்றும் சொல்லாமல் தலையை மட்டும் அவன் அசைத்தான்.

ரயில் வண்டி கண்களுக்கு மறையும் வரையில் பிளாட்பாரத்தில் நின்ற சிவானந்தமும், கமலவாசகியும் கையை அசைத்துக் கொண்டிருந்தார்கள்.

**“எ**ன்றாவது ஒரு நாள் என்னைப் பார்க்க வருவான் என்று மகாத்மா சொன்னது பலித்து விட்டது பார்த்தாயா? முன்பு ஒரு முறை இதேமாதிரி ரயில் வண்டியில் வரும் போது நீ சொன்னது ஞாபகமிருக்கிறதா, இந்த ஜென்மத்தில் அவரைச் சந்திக்கப் போவதில்லை என்றாயே !'' என்றார் தீக்ஷிதர்.

'' நாம் நினைத்தபடியெல்லாம் நடக்கவா செய்கிறது?'' என்று கூறிப் பெருமூச்சு விட்டான் ரங்கமணி. பிறகு கேட்டான்: ''சர்தாரைப் பற்றி ஒரு தகவலும் இல்லையே?''

''என்ன ஆனானோ தெரியவில்லையே !'' என்றார் தீக்ஷிதர்.

''அவர்தான் ஆஷ் கொலைச் சதியில் ஈடுபட்டிருந்த ஏட்டு குருநாதய்யர் என்ற இரகசியம் போலீசுக்குத் தெரிந்திருக்குமா ?''

'' ஊஹூம்..... அந்த இரகசியம் சிவானந்தத்துக்குத்தான் தெரியும்.... குருநாதனுடைய டயரிகளை அவன் தான் கைப்பற்றினான். ஆனால் அதைப் போலீஸ் இலாகாவில் ஒப்படைக்காமல் அவனே எரித்துச் சாம்பலாக்கி விட்டான்.''

''இந்த இரகசியம் திரிவேணிக்குக் கூடத் தெரியாதா?'' என்று ஆவலோடு கேட்டான் ரங்கமணி.

''தெரியாது. ஏட்டு குருநாதன் தான் சர்தார் சொக்கலிங்கம் என்னும் இரகசியத்தை உன்னிடம் மட்டுந்தான் சொல்லியிருக்கிறேன்'' என்றார் தீக்ஷிதர்.

''அதுவும் நல்லதுதான். ஆஷ்துரையின் கொலைச் சதியில் தன் தந்தைக்கும் பங்கு உண்டு என்று திரிவேணிக்குத் தெரிந்திருந்தால் அவன் சர்தாரைப் பற்றித் தாழ்வாகக்கூட எண்ணியிருப்பாள். இந்த இரகசியம் அவளுக்குத் தெரியாமலே இருந்ததுவும் நல்லதுதான்'' என்று கூறிவிட்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தான் ரங்கமணி. பிறகு தீக்ஷிதரைப் பார்த்து மிக்க ஆர்வத்துடன், ''எனக்குச் சர்தாரைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது'' என்றான்.

''அவன் உயிரோடு இருக்கிறானா என்பதே சந்தேகமாயிருக்கிறது. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு அவன் பயமின்றி இருக்கலாம். சுதந்திரம் கிடைத்து இத்தனை மாதங்கள் ஆகியும் அவனைப் பற்றி ஒரு தகவலும் இல்லையாதலால் இறந்து போயிருப்பான் என்றுதான் நினைக்கிறேன்.''

"ஒரு பெரிய தியாகி, இப்படி இனம் தெரியாமல் மறைவது துரதிர்ஷ்டம்தான்" என்று கூறிப் பெருமூச்சு விட்டான் ரங்கமணி. பிறகு சொன்னான்: "இதைவிடத் துரதிர்ஷ்டம், அந்தக் காலத்தில் ஆஷ் கொலைச் சதிக்காக அவர் கொண்டு வந்த இரண்டு துப்பாக்கிகளில் ஒன்று அவருடைய மகளுக்கே எமனாக அமைந்துவிட்டதுதான். இது அவருக்குத் தெரிந்தால் எப்படித் துடிதுடித்துப்போவார்!"

"திரிவேணி வளர்ப்பு மகள்தானென்றாலும், அவள்மீது உயிரையே வைத்திருந்தான்" என்றார் தீக்ஷிதர்.

இதைக் கேட்டு ரங்கமணி திடுக்கிட்டான். "என்ன, வளர்ப்பு மகளா...? திரிவேணி அவருடைய சொந்த மகள் என்றீர்களே?" என்றான்.

"ஓ.... உன்னிடம் உண்மையை மறைத்து விட்டேன்..... திரிவேணி வளர்ப்பு மகள்தான். அப்படித்தான் குருநாதன் சொன்னான். அவன் மணியாச்சியிலிருந்து தப்பியபோது நேரே பாண்டிச்சேரிக்குப் போய் அங்கிருந்து ஜெர்மனிக்குப் போய் விட்டான். பிறகு எங்கெல்லாமோ அலைந்துவிட்டுப் பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் இந்தியாவுக்கு வந்தான். வட இந்தியாவிலேயே சுற்றினான். அப்போது திரிவேணியைத் தத்து எடுத்ததாகக் கூறினான்" என்றார் தீக்ஷிதர்.

ரங்கமணி வியப்புடன் தீக்ஷிதர் சொன்னதைக் கேட்டுக்கொண்டிருந்தான். தீக்ஷிதர் தொடர்ந்தார்:

"வட இந்தியாவில் குருநாதன் பயங்கர இயக்கங்களில் ஈடுபட்டிருந்தபோது யாரோ ஒரு தியாகி போலிஸின் குண்டடி பட்டு இறக்கும்தறுவாயில் தன் ஒரே மகளான திரிவேணியை இவனிடம் ஒப்படைத்தானாம். ஒரு தியாகிக்கு ஏற்ற மகள்தான் என்பதைக் கடைசிவரையில் திரிவேணி நிரூபித்து விட்டாள்."

திரிவேணியின் நினைவால் ரங்கமணியின் கண்கள் கலங்கின.

"திரிவேணியைக் குருநாதன் தென் இந்தியாவுக்கு அழைத்து வந்தபோது அவளுக்கு இரண்டு வயது இருக்கும். சர்தார் சொக்கலிங்கம் தன் தந்தை இல்லை என்னும் விஷயம் திரிவேணிக்குக் கடைசிவரை தெரியாது.

"அத்தை குருநாதனுடைய ஒன்று விட்ட சகோதரி. அவள் கணவன் குடித்துப் பொருளைத் தொலைத்து விட்டான். அவன் வட இந்தியாவில் ரயில்வே கம்பெனி ஒன்றில் வேலை பார்த்து வந்தான். திரிவேணி அவளிடம்தான் வளர்ந்தாள். அத்தையின் கணவன் எங்கோ சொல்லிக் கொள்ளாமல் போய் விடவே, அவளையும் திரிவேணியையும் அழைத்துக் கொண்டு, குருநாதன் தமிழ் நாட்டுக்கு வந்தான். முதல் சில வருஷங்களுக்குச் சென்னையிலேயே தலை மறைவாக இருந்தான். பிறகு திருநெல்வேலிக்கு வந்து விட்டான்."

சர்தாரின் பூர்வீக ரகசியங்கள் ரங்கமணிக்குப் பிரமிப்பை அளித்தன. சர்தாரோடு அவன் பழகிய நாட்களை நினைத்தபோது அவன் கண்களில் நீர் மல்கியது. அவனுடைய மன அளவில் சர்தார் இன்னும் உயர்ந்து விட்டார். அவன் மனம் அவரை நினைத்து வணங்கியது.

**(அடுத்த இதழில் முடியும்)**

நியூடெக்ஸ் டவல்கள் அருமையான ஜேக்கார்டு டிஸைன்களுடன், என்றும் புதுமையுடன் மிளிரும் கண்கவர் வண்ணங்களில் கிடைக்கின்றன

# நியூடெக்ஸ் டவலினால் துடைத்துக் கொள்ள பெரியவர்களுக்கு சில விநாடிகளே போதும்...

## குழந்தைகளுக்கோ, ஒரு முறை ஒற்றியெடுத்தாலே போதும்!

மிகவும் மென்மையான நியூடெக்ஸ் டவல் நொடிப் பொழுதில் ஈரத்தை உறிஞ்சி விடுகிறது. இதன் ரகசியம் பாம்பே டையிங்கின் பிரத்தியேகமான 'ஸூபர்லூப்' நெசவே! கண்கவர் நியூடெக்ஸ் டவல்களை இன்றே கடையில் பாருங்கள் ... வாங்குங்கள்!

'ஸூபர்லூப்' டவல்களின் தனிச் சிறப்பென்ன?



நியூடெக்ஸ் டவலை உற்றுக் கவனித்தால் ஆயிரக்கணக்கான ஸூபர் லூப்களைக் காண்பீர்கள். இவற்றின் பயனாகத்தான் டவல் மெத்தென்றிருப்பதுடன் ஈரத்தை வெகு சீக்கிரம் உறிஞ்சி விடுகிறது... வெகுசீக்கிரம் உலர்ந்து விடுகிறது.

**நியூடெக்ஸ் — பாம்பே டையிங்** அளிக்கும் 'ஸூபர்லூப்' கொண்ட புதுமை டவல்

மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்

பி.வி.ஆர்

## அத்தியாயம் 14

அகிலா தன் சகோதரன் ரவியிடம் இனி ராஜாவின்மீது எடுக்க வேண்டிய நடவடிக்கை பற்றி விவரித்தாள்: ''டிரங்க் பெட்டி கூட இல்லாத ஆளை ஒரு பக்கத்திலே வெளியேற்றி விட்டு, இன்னொரு பக்கத்திலே ஸி. ஐ. டி. யை விட்டுப் பின்தொடரச் சொன்னால், எல்லாக் குட்டும் வெளியே வர்றது... எத்தனை நாளைக்குக் கையிலே இருக்கிற பணத்தை வெளியே எடுக்க முடியாம சிமாச்சுவால் இருக்க முடியறதுன்னுதான் பார்ப்போமே... இந்த மாதிரி நெஞ்சழுத்தக்காரன்களைக் கையும் களவுமாகப் பிடிச்சாத்தான் உண்டு.''

சந்தானம் அகிலாவின் ஏற்பாட்டை முழுதும் ஆமோதித்தான்.

மூன்றாவது நாள் மாயவரத்தில் சிமாச்சுவைப் பணத்துடன் கைது செய்து, சென்னைக்கு இழுத்து வந்தார்கள். இனி தப்ப வழி கிடையாது என்ற அவன் தனக்குத் தெரிந்ததையெல்லாம் கூறிவிட்டு, 'ரிமாண்டில்' அழுது கொண்டிருந்தான். ஜாமீனில் வெளியே வர அவனுக்கு உதவி செய்ய யார் இருக்கிறார்கள்? ராஜா பிடிபடும் வரையில் காத்திருக்க வேண்டிய கதி ஏற்பட்டது அவனுக்கு!

நாட்கள் சென்றன. ஒருவாறு கம்பெனிக் கணக்குகளைத் தீர்த்தாகி விட்டது. ரவி சோர்வடைந்து போனான். கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம் ரூபாயைக் கோதண்டராமன் அவனுக்கு என்று எழுதி வைத்திருந்த போதிலும் ராஜா மோசடி செய்தபின் பன்னிரண்டாயிரம்தான் மிஞ்சியிருந்தது. என்னதான் அகிலாவின் ஒரு லட்சமும் அம்மாவின் ஐம்பதாயிரமும் அப்படியே இருந்தாலும் அவற்றில் தனக்கு யாதொரு உரிமையும் கிடையாது என்று அவன் எண்ணினான்.

திடீரென்று தான் ஓர் ஏழையாகி விட்டதாக எண்ணம் உண்டாகியது அவன் மனத்தில். பங்களா அவன் பேரில் இருந்தாலும், அதை விற்க முடியாது. பாங்கியில் பணம் நாளுக்கு நாள் கரைந்து கொண்டே வருகிறது. இத்தனை நாட்கள் வரையில், சரித்திர ஆராய்ச்சியிலேயே தன் வாழ்நாளைக் கழிக்க வேண்டும் என்று எண்ணியிருந்தவன், வயிற்றுப் பிழைப்புக்காக ஒரு வேலையில் சேர்ந்துதான் ஆகவேண்டும் என்ற நிலை பிறந்து விட்டது.

ரவி பணத்தின் மீது மோகம் கொள்ளாதவனே ஆனாலும், பணம் இல்லாத போது, அதன் அவசியத்தை உணர்ந்தான். பத்தாயிரம் ரூபாய் எத்தனை நாட்களுக்கு வரும்?

''அண்ணா! நானும்தான் ஒரு வாரமாகப் பார்க்கிறேன். நீ என்னமோ உன்மத்தம் பிடிச்சவன் மாதிரி ஆகிவிட்டே.... இப்போ என்னாயிடுத்து...? அப்பா எப்படிச் சம்பாதிச்சு வைச்ச பணமோ, உனக்கு அது தக்கவில்லை.... எனக்கு எதற்கு ஒரு லட்சம்? அதிலே பாதியை நீ உன் விருப்பத்துக்குச் செலவு செய்து கொள். அம்மாவுக்கு வருகிற

வட்டிப் பணமே அவள் வயிற்றுக்கு ஏராளம். இவ்வளவு பெரிய பங்களா, நம்ம மூணு பேருக்கு ஏதுக்கு....? மாடியை வாடகைக்கு விட்டாலே, நானூறு ரூபாயைக் கண்ணை மூடிக் கொண்டு கொடுப்பார்கள்.''

''நீ சுலபமாகச் சொல்லிவிட்டே, அகிலா !''

''பின்னே எப்படிச் சொல்லணும் என்கிறே...? அந்த ராஜா மோசடி செய்தாச்சு.... போலீஸிலே சொல்லி ஒரு மாசமாச்சு... வாரத்துக்கு ஒரு தடவை 'இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை' என்று அவர்களும் எழுதுகிறார்கள்..... இன்னமே அவனை எப்போ பிடிச்சு, எத்தனை ரூபாயை மீட்கப் போகிறோம்...? எனக்கு நம்பிக்கையே இல்லை... நான் சொல்கிறபடி கேளு.....''

''நான் என் கையாலேயே உழைச்சுச் சம்பாதித்துக் கொள்ளுகிறேன்....''

''அது நல்ல 'ஐடியா'தான்... முப்பத்தி மூணு வயசுக்கு அப்புறம் ஞானோதயம் வர்றது நல்லதுதான்.... ஆனா நீ எந்த வேலையில் சேருவாய்...? நீ... ஹிஸ்டரி லெக்சரர் வேலைக்குத்தான் லாயக்கு.... ஆனா யார் தருவார்கள், இந்த வயசுக்கு மேலே?''

''அம்மா என்ன சொல்லுகிறாள்?''

''என்ன சொல்லுவாள்? நான் இப்போ கத்தறேனே.... அதைத்தான் அவளும் கத்துவாள்......''

ரவி எழுந்தான்.

''ராஜாவைப் பிடிக்கிற வரைக்கும் என்னாலே எதிலும் ஈடுபட முடியாது. அகிலா, ராவும் பகலுமாக எனக்கு இது ஒண்ணுதான் மனசை வாட்டறது.... நான் பணம் பறி போனதைக்கூடப் பெரிசா நினைக்கல்லே..... ஆனா, என்னை ஒருத்தன் ஏமாத்திட்டானே என்பதை நினைக்கிற போதுதான் ஆத்திரமும் கோபமும் வர்றது.....''

''கோபம் வந்து என்ன பிரயோசனம்? போலீஸ்தான் பாவம் என்ன செய்வார்கள்? ராஜாவைப் பற்றி ஒரு ரிகார்டுகூட இல்லை அவர்களிடம். ஒரு போட்டோவாவது கிடைக்கிறதா? அப்படியே அவர்கள் பிடிச்சாலும், ராஜா பணத்தைக் கொடுத்துவிடுவானா.....? எல்லாம் செலவழிந்து போச்சு என்பான். ஆறு மாசமோ, ஒரு வருஷமோ, உள்ளே இருந்துவிட்டு அப்புறம் ஒளிச்சு வைச்ச பணத்தைத் தலைகால் தெரியாமல் செலவு செய்வான். நான் ஏதுக்கு இதெல்லாம் சொல்றேன்னு கேட்டா, இன்னமே நீ உன்னையே பறி கொடுத்துக்கப்படாது என்பதற்குத்தான்.''

''இன்னமே நான் கலியாணம் பண்ணிக் கொள்கிறதில் அர்த்தமில்லேன்னு



எனக்குத் தோணறது. பாகிரதி அம்மாவிடம் அவளுக்குச் சேரவேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டு, சீதாவை நல்ல இடமாகப் பார்த்துக் கொடுங்கன்னு சொல்லிவிட வேண்டியதுதான்!''

''அன்னிக்கு நீ செய்த முடிவும் அவசரமான முடிவு..... இப்போதும் அவசரமாக முடிவு செய்கிறாய்!'' என்றாள் அகிலா.

''இல்லை, அகிலா... அன்னிக்கு நான் பணக்காரன்..... என் பணம் அவளுக்குச் சகல சௌகரியங்களையும் கொடுக்கும்னு நினைச்சுத்தான் சீதாவைக் கலியாணம் செய்து கொள்ளலாம் என்று நினைச்சேன்..... இன்னிக்கு நான் ஏழை.... என்கிட்டே என்ன இருக்கு இப்போ?''

''இதைப் பத்தி நான் ஒண்ணும் சொல்லத் தயாராக இல்லை. உன் இஷ்டத்துக்குச் செய்... ஆனா பணம் போச்சேன்னு ராவும் பகலும் வெதும்பி வெதும்பி உசிரை விடாதே!''

**ப**த்து நாட்களாக ரவி தன்னுள்ளேயே புழுங்கிக் கிடந்தான். தினம் தினம் ராஜா பிடிபட்டு விடுவான் என்று கண்ட கனவுகள் பொய்த்தன.

அகிலாவின் யோசனைகளை ஏற்க மனம் மறுத்தது.

இனி என்ன செய்வான் அவன்? எத்தனையோ தலைசிறந்த சரித்திரப் பேராசிரியர்களை அவனுக்குத் தெரியும்! ஏதாவது ஒரு சர்வகலாசாலையில், அவர்களுடைய உதவியால் ஒரு வேலை தேடிக் கொள்ள வேண்டியதுதான்.

வேலை எப்போது கிடைக்கும்.....! கிடைக்கும் வரை



யில் அவன் சமாளித்துக் கொள்ளுவான்! அவனே இப்படி நிர்க்கதியாக நிற்கும் போது, சீதாவைக் கல்யாணம் செய்து கொள்ளுவது அறிவீனம்தான்!

அகிலா கூறுவது போல, ராஜாவைக் கைது செய்தாலும் அவனிடமிருந்து பணம் கிடைக்குமா? அது கிடைத்தாலொழிய அவன் சீதாவைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டான்.

அவன் பாகீரதி அம்மாளிடம் நேரிலேயே விஷயத்தை விளக்கிக் கூறிவிடுவதுதான் சிறந்தது என்று நினைத்தான்.

அதற்கு அவன் தன்னைத் தானே தயாரும் செய்துகொண்டான்.

பாகீரதியின் வீடு வெறிச்சோடியது. வீட்டின் கலகலப்புக்கும் குதூகலத்துக்கும் உயிர்நாடியாக இருக்கும் ஜானுவின் போக்கே கடந்த ஒரு மாத காலத்தில் மாறி விட்டது. முதன் முதலாக ராஜாவைச் சந்தித்தபோதும் அதன் பின் அடிக்கடி இருவருமாகப் பழகிய நாட்களிலும், அவனைப் பற்றிய நல்லெண்ணங்களே அவளுடைய மனத்தில் ஊறியிருந்தன. அவனைப் பற்றிச் சந்தானம் அசுவாரசியமாகவும், அதிருப்தியாகவும் பேசிய போதும்கூட அவளுக்குச் சந்தானத்தின் மீது ஆத்திரம் தோன்றியதே தவிர, ராஜாவின் மீது வெறுப்பு உண்டாகவில்லை. ஆனால் ராஜாவே தான் செய்திருக்கிற ஓரிரு குற்றங்களை அவளிடம் சொல்லி, திருந்தி விடுவதாகவும் வாக்களித்த போது, அவன் மீது அவள் கொண்டிருக்கும் அன்பு அவனை மன்னித்து விட்டது. அவன் நல்லவனாக, யோக்கியனாக மாறி விடுவான், அவனை அம்மாதிரி மாற்றவும் தனக்குத் திறமையும், சக்தியும் உண்டு என்று ஜானு எண்ணியிருந்தாள். லட்சுமி அம்மாள் அவளைத் தபாலாபீஸில் சந்தித்து, புத்திமதி கூறியபின்தான் மனத்தில் ஒரு தடுமாற்றம் பிடிக்கலாயிற்று. ஒரு தாயார் தான் பெற்ற பிள்ளை நாணயமில்லாதவன், அவனை விவாகம் செய்து கொள்ளுகிற பெண் அவதிப்படுவாள் என்று எச்சரிக்கை செய்யும்போது, ஜானுவின் மனம் தடுமாறாமல் எப்படி இருக்க முடியும்? இவ்வளவெல்லாம் ஆனபிறகும்கூட, ராஜாவை அவளால் மறக்க முடியவில்லை. அவள் மனைவியாக வாய்த்து விட்டால் அவன் கண்டிப்பாக மாறி விடுவான் என்று அவள் நம்பினாள்.

ஆனால், 'கொழும்பு செல்லப் போகிறேன்' என்று திடீரென்று அவன் தலைமறைவாகப் போனதும் அவனைப்பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் வெளியானதும், அவளைச் சம்மட்டியால் அடித்து வீழ்த்தின. இனி ராஜாவுக்கும் அவளுக்கும் எந்தவிதமான சம்பந்தமும் கிடையாது என்று அவளுடைய மனம் எண்ணியது. இருந்தும்கூட, அவனை அவளால் மறக்க முடியவில்லை. அவன் செய்த மோசடியோ, அவன் ஓடின ஓட்டமோ அவள் மனக் கண்முன் நின்று அடிக்கடி வதைத்தாலும், அவனுடைய புன்முறுவல் தவழும் உதடுகளையும், உயிரையே ஒளியாக வீசும் கண்களையும் அவளால் மறக்க முடியவில்லை.

ஜானு தன்னுள் அழுது கொள்ள ஆரம்பித்தாள். அவளுடைய தினசரி வாழ்க்கையே இயந்திரம்போலச் சென்றது. வீட்டில் யாருடனும் அவள் அதிகம் பேசுவதில்லை. ஓரிரு முறைகள், சந்தானம் அவளைத் தேற்ற முயன்றபோது கூட அவள் அவனிடமிருந்து ஒதுங்கினாள். ராஜாவைத் தவிர வேறு எவருக்கும் இடம் அளித்திராத அவளுடைய பெண் மனத்தை யார்தான் தேற்ற முடியும்?

ஒரு நாள் தபாலாபீஸிலிருந்து திரும்புகையில், வழக்கமாக ராஜா சந்திக்கும் இடத்தைப் பார்த்த போது, அவனுடைய நினைவில் அவள் மனம் குமுறியது! லட்சக்கணக்கில் பணத்தைக் களவாடிய அவன் அவளையும் இழுத்துக் கொண்டு போயிருக்கக் கூடாதா என்றுகூட அவள் ஏங்கினாள். அந்த ஏக்கமே, திடீரென்று ஒரு யோசனையை உருவாக்கியது.

தன் மனம் மீண்டும் மாறி விடுமோ என்ற பயத்தில் அவள் அப்போது தான் வந்த திருவான்மியூர் பஸ்ஸில் அவசரம் அவசரமாக ஓடி ஏறினாள்.

ராஜாவின் வீட்டைத் தேடிக் கண்டுபிடிக்க அதிக நேரம் ஆகவில்லை அவளுக்கு.

லட்சுமி அம்மாள் திண்ணையில் உட்கார்ந்திருந்தாள். ஜானுவைக் கண்டதும், அவளுடைய கண்களில் நீர் மல்கியது. ''வா, அம்மா, ஜானு!'' என்று அவள் ஜானுவை வரவேற்று, உள்ளே அழைத்துச் சென்றாள்.

அழுகை பீறிட்டு வந்தது ஜானுவுக்கு.

''மாமி, ஏதாவது தகவல் கிடைத்ததா?''

''அவன் உசிரோடுதான் இருக்கான் ஜானு!'' என்ற லட்சுமி அம்மாள், மாதம் தவறாமல் வந்த மணியார்டர்களைப் பற்றிச் சொன்னாள். ''அவனுக்கு அம்மா என்றால் உசிர்.....



லண்டன், யுனைடெட் கமர்ஷியல் பாங்க், நிறுவனத்தில் பணிபுரிபவரும், ஸ்ரீ ஏ. ஸ்ரீநிவாச அய்யங்கார் அவர்கள் குமாரருமான ஸ்ரீ எஸ். ராமானுஜம் அவர்களுக்கும் சென்னை, இந்தியன் ஆயில் கம்பெனியில் பணியாற்றும் சௌ. ஆர். சரோஜா M. A. க்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

:.பாஸ்:.போமின்  சக்தியை அதிகரிக்கிறது. பசியைத் தூண்டுகிறது.





வலிவைப் பெருக்குகிறது.

நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

சுருங்கச் சொன்னால் — குடும்பத்தில் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ உதவுகிறது :.பாஸ்:.போமின்




:.பாஸ்:.போமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும் பலவகை கிளிஸரோ:.பாஸ்பேட்டுகளும் அடங்கிய. பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும். காம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இந்த உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

ஸ்குப்' TTT

SARABHAI CHEMICALS

Shilpi SC 50A/67 Tam.

பலத்திற்கும் ஆரோக்கியத்திற்கும்
பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

69 வருடங்களாக பிரசித்திப்பெற்றது

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிமிடெட்
சென்னை - 17.

எங்கேயிருந்தாலும் மறக்காமல் பணம் அனுப்புகிறான்....''

''இதுவரையில் ரெண்டு தடவை வந்திருக்கு..... ஆனா ரெண்டும் ரெண்டு ஊரிலேயிருந்து — அவன் இப்போ எங்கே இருக்கானோ, அந்தத் தெய்வத்துக்குத்தான் தெரியும்...''

''போலீஸார் பிடித்தால்...'' என்று ஆரம்பித்த ஞானா வார்த்தையை முடிக்கப் பயந்தவளைப் போல் நிறுத்தினாள்.

## முதல் முயற்சி — 5




''அவனைக் கண்டிப்பாக ஜெயிலில்தான் தள்ளுவார்கள்...... எனக்கு ரொம்ப நாட்களாகவே அவனைப்பற்றி இது விஷயமா பயம்தான்.. ... எத்தனையோ சொல்லிப் பார்த்தேன். தலையில் அடிச்சுண்டேன்.... 'சுலபமா எத்தனை சம்பாதிக்க முடியுமோ அத்தனையும் சீக்கிரத்திலே சம்பாதிச்சுட்டா, அப்புறம் ஆற அமர, நிம்மதியா இருக்கலாம், அம்மா!' என்று என்னிடம் வாதாடுவான்..... ஒருத்தனை ஏமாத்தி இன்னொருத்தன் ரொம்ப நாள் வாழ முடியாதுன்னு நான் சொல்லி என்ன பிரயோசனம்? அவன் காதுகளில் ஏறினால்தானே ?''

ஞானாவின் மனக் கண் முன்னால் ராஜா நின்றான்.

லட்சுமி அம்மாள் தொடர்ந்தாள்:

''அவன் இப்போ பெரிய ஆபத்திலே சிக்கியாச்சு..... உண்ட வீட்டுக்குத் துரோகம் பண்ணி விட்டான்.... லட்சத்துக்கு மேலே மோசடி செய்திருக்கான்னு கேள்விப்பட்ட போது, பிள்ளை என்கிற இரக்கம்கூட எனக்கு வரல்லே.... அவன் அகப்படாமல் இருக்கணும் என்கிற ஆசைகூட வரல்லே..... ஏன் தெரியுமா ?''

ஞானா மௌனமாய் லட்சுமி அம்மாளைப் பார்த்தாள்.

''சின்னத் திருட்டிலே அவன் மாட்டிக்காமல் இருந்தான். அதுவே பெரிய திருட்டு நடத்தத் தூண்டி விட்டது.... இப்போ அவன் நாடெல்லாம் திரிந்து திரிந்து, பணத்தைக் கண்டபடி வாரி இறைத்தபின், கையிலே பணம் இல்லாத நிலை வர்ற போது, இன்னும் பெரிய திருட்டிலே இறங்கி விடுவான். அவனை யாரும் வாய் வார்த்தையாலே இனி மேல் திருத்த முடியாது. என் பிள்ளை முழுத் திருடன் ஆகிவிட்டான்..... அதனாலே, அவனைப் பிடிச்சால்தான் அவன் கொஞ்ச நாட்களுக்கு ஜெயிலிலே இருந்தால்தான் திருந்துவான்னு எனக்குத் தோணறது.....''

ஒரு தாயார் தன் பிள்ளையைப் பற்றி இப்படி விபரீதமாகப் பேசுவதைக் கேட்க ஞானாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. பிள்ளை சிறைவாசத்தை அனுபவித்தால்தான் நல்லவனாக மாற முடியும் என்று நினைக்கிறாளே!

''அவர் ஜெயிலுக்குப் போகக் கூடாது, மாமி!''

''பாவக் குழியிலிருந்து எழுந்திருக்க வேறு வழியே இல்லை!''

''ஜெயிலுக்குப் போய்த் திரும்பி வந்தால் அப்புறம் திருந்தி விடுவார்னு என்ன நிச்சயம்?''

'' நிச்சயமில்லைதான்.... ஆனால், வேறு எதற்கு ஜெயில்னு வைச்சிருக்கா.... நூத்துலே அம்பது பேராவது திருந்தி விடறான்னு எனக்குத் தெரியும்......!''

''அவர் என்னிக்காவது, எப்போதாவது அம்மாவைப் பார்க்கணும் என்கிற பாசத்திலே, ரகசியமா வந்தால் எனக்குச் சொல்லி அனுப்புகிறீர்களா, மாமி.....?''

''எதுக்கு......!''

''நானே ரவியிடம் சொல்லி, போலீஸ் சேனையை வாபஸ் வாங்கச் சொல்கிறேன்.....''

''அது நடக்கும்னு எனக்குத் தோணலே.......!''

''எது?''

''கேஸை வாபஸ் வாங்குகிற காரியம்.... எக்கச்சக்கமா பணத்தைத் திருடியிருக்கிறான்...... ''

''இருந்தாலும் என் முயற்சியும் இருக்கட்டுமே.''

சிறிது நேரம் மௌனம் சாதித்த லட்சுமி அம்மாள், ''அன்னிக்கு நான் உன்கிட்டே சொன்னது எப்படிப் பலிச்சுட்டது, பார்த்தியா? நல்ல வேளை, நீ தப்பினாய்'' என்றாள்.

''நான் தப்பி விட்டேன் என்கிற நினைவோ, அதனாலே ஒரு நிம்மதியோ எனக்கு இப்போ இல்லே.''

''அதுக்கு என்ன காரணம் தெரியுமா? உன்னால் ராஜாவை மறக்க முடியவில்லே..... உன் துரதிர்ஷ்டம், அவன் சமூகத்திலே சேர்க்கப்படாத ஓர் ஆளாகிவிட்டான்.....!''

ஜானு மெதுவாக எழுந்தாள். அவளுடைய சிவந்த முகத்தையும், கனத்த கண்களையும் பார்த்தபோது, லட்சுமி அம்மாளுக்கும் அழுகை வந்தது. ஜானுவிடம் குங்குமத்தை நீட்டிய வாறே அவள் சொன்னாள் :

''நான் பகவானைப் பிரார்த்திப்பதெல்லாம், ராஜா சீக்கிரம் சிக்கிக் கொண்டு, செய்த குற்றத்துக்குத் தண்டனையை அனுபவித்து . வெளியே நல்லவனாக வர வேண்டும் என்பது தான்.... நெருப்பு எல்லாவற்றையும் சுத்தி செய்கிறது.... மனுஷனுடைய இருதயத்தைச் சுத்தி செய்யற நெருப்பு தான் ஜெயில்.... நாலு சுவர்களுக்கு நடுவே, தன்னந் தனியே ராஜா தன்னைத் தானே அலசிப் பார்க்கிற போது தான், அவனுக்குத் தான் செய்திருக்கிற பாப காரியம் விளங்கும். அப்போதுதான் அவனுடைய மனசும் மாறும் !''

ஜானு வெளியே வந்தாள். லட்சுமி அம்மாளின் கருத்துக்களில் அவளுக்கு நம்பிக்கை இல்லே. ராஜா எங்கே இனி மாறப் போகிறான்? ஆனால் இனிமேல் அவன் மாறினால் என்ன, மாறாமலே போனால்தான் என்ன? அவளுடைய மனச் சிறையிலிருந்து ராஜாவை அப்புறப்படுத்திவிட்டாள். இனி அவனைப் பற்றிய சிந்தனையே அவளுள் எழாது.

மனசு புலம்பியது. சிறையிலிருந்து ராஜா வெளியேற மறுப்பதையும் அது உணர்ந்தது.

**ஜா**னு வீட்டை அடைந்தபோது மணி எட்டு.

சந்தானம் அவன் அறையில்,—ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பவனைப் போல் உட்கார்ந்திருந்தான். கூடத்தில் சீதா குனிந்த தலை நிமிராதவளாய் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு, விசும்பிக் கொண்டிருந்தாள்.

கமலா ஓர் ஓரமாக நின்று கொண்டிருந்தாள்.

அம்மாவின் அழுகை ஒலிகூட முழுதும் கேட்டது. ஜானுவின் மன நிலையில், அவளுக்கு ஒன்றும் புரியவில்லே.

''கமலா, என்ன விஷயம்? அக்கா, என்ன நடந்தது?.... ஏன் இப்படி உட்கார்ந்திருக்கே.... அம்மா ஏன் அழறா.... யார் என்ன சொன்னார்கள்.......?''

ஜானுவின் சரமாரியான கேள்விகளுக்கு யாரும் பதில் சொல்ல முன் வரவில்லே.

''கமலா! ஏண்டி ஊமை மாதிரி நிக்கறே.....? வீட்டிலே என்ன நடந்தது...? ஏன் இப்படி எல்லாரும் அழுதுண்டு கிடக்கிறீர்கள்......?''

''ரவி வந்துட்டுப் போனார், ஜானு!'' என்றாள் கமலா தாழ்ந்த குரலில்

''அக்காவைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிற நிலேயிலே அவர் இல்லே யாம். ராஜா அவருடைய பங்கு முழுவதையுமே எடுத்துண்டு ஓடிவிட்டானும்... அவன் சிக்கி, அவன்கிட்டேயிருந்து பணமும் கிடைத்தால்தான், அக்காவுக்கு வாழ்வளிக்க முடியும்னு சொன்னார்..... அனு அதிலே அவருக்கு நம்பிக்கையில்லேயாம்....''

ஒரு கணம் மின்சாரம் தாக்கியது போல் துடித்த ஜானு மறுகணமே தன்னைத் தானே சமாளித்துக் கொண்டாள். சீதாவின் மூன்றுவது நிச்சய தார்த்தமுமா இப்படி ஆவது ! அவளுடைய இந்தக் கல்யாணம் தடையின்றி நடக்க வேண்டும் ; அதற்கு ராஜா அகப்பட்டுக் கொள்ள வேண்டும்; சீதாவின் வாழ்வு, ராஜா போலீஸார் கையில் சிக்குவதைப் பொறுத்திருக்கிறது..... தங்கைகளுக்காக உயிரையே அர்ப்பணித்த சீதா, வாழ்க்கையில் இருமுறை ஏமாந்த சீதா கண்டிப்பாக வாழ வேண்டும் ! ரவியைப் போன்ற வரன் யாரும் கனவிலும் எதிர்பார்க்கமுடியாத வரன்! அந்த வரன் கைநழுவிப் போனால், சீதா உயிரோடு இருக்க மாட்டாள்!

ஜானு தன் துக்கத்தை மறந்தாள். அவளுடைய மனச் சிறையிலிருந்து ராஜா வெளியேறி விட்டதாக அவளுக்குத் தோன்றியது! எப்படியாவது

ராஜாவைக் கண்டு பிடிக்க முயற்சி எடுக்க வேண்டும்.

ஆனால் அவளால் என்ன செய்ய முடியும்? போலீஸ் இலாகா செய்ய முடியாததை அவள் எப்படிச் சாதிப்பாள்? சந்தானத்தின் உதவியை நாடினாலும், அவனால் எந்த அளவுக்கு உதவி செய்ய முடியும்?

ராஜா பிடிபட வேண்டும். அவனுக்குத் தண்டனை கிடைக்கிறதோ இல்லையோ, ஜானுவுக்கு அநாவசியம். களவாடிய பணத்தை மீட்டு ரவியின் கையில் கொடுக்க வேண்டும்! ரவி அதன்பின் சீதாவுக்கு வாழ்வளிக்க வேண்டும்.

ஜானு தன்னுள் பிதற்ற ஆரம்பித்தாள். ஆனால் அது பிதற்றல் என்று அவளுக்குத் தோன்றவில்லை.

அன்று இரவு முழுதும் உறங்காத ஜானு அதிகாலையில் படுக்கையை விட்டு எழுந்தாள். அருகே நிச்சிந்தையாக உறங்கிக் கொண்டிருக்கும் சீதாவைப் பார்த்த போது, மனம் வியந்தது. மனம் ஒடிந்து கிடந்த அவளை விவாகம் செய்து கொள்ளுவதாக முன் வந்த ரவி, இப்போது பின்வாங்கிவிட்டானே என்ற கோபம் வேறு ஜானுவின் உள்ளத்தில் எழுந்தது.

ஜானு காலைக் கடன்களை முடித்துவிட்டு வரவும், பால் டிப்போவிலிருந்து சந்தானம் திரும்பி வரவும் சரியாக இருந்தது.

''சந்தானம் ஸார்! நேத்து என்ன நடந்தது.....? ரவி வந்திருந்தானாமே!'' என்று கேட்டாள், சந்தானம் பால் பாட்டில்களை வைத்துவிட்டுத் திரும்பி வரும்போது.

'' ஆமாம்.... என்னிடமும் ரவி சொன்னான்.''

''எங்கள் சீதாவைக் கலியாணம் செய்து கொள்ளுங்கள் என்று நாங்கள் ரவியைக் கேட்டுக் கொண்டோமா? அவராக வலிய வந்து ஆசை காட்டிவிட்டு இப்போது முடியாது என்றால் அக்காவின் மனசு எப்படி இருக்கும்?''

''எல்லாவற்றுக்கும் காரணம்....'' என்று இழுத்த சந்தானம் தனது அறையினுள் நுழைந்தான்.

''ஏன் நிறுத்துகிறீர்கள்....? சொல்லுங்கள்......''

''உன் ராஜாதான்.... பாங்கியிலிருந்து லட்சத்து முப்பதாயிரம் களவாடியிருக்கிறான்.... அதைத் தவிர கோதண்டராமன் இரும்புப் பெட்டியிலிருந்த பணம் வேறு. அது எத்தனையோ இன்னும் தெரியவில்லை.....''

''அதுக்காக......''

''ரவியிடம் இப்போ பணம் இல்லை. எதை ஆதாரமாக வைத்துக் கொண்டு சீதா அவனுடன் சந்தோஷமாக வாழ்வாள்?''

''அதை அக்காதானே தீர்மானம் செய்து கொள்ள வேண்டும்....!''

''ஜானு!'' என்று அவளைக் கடுமையாகப் பார்த்த சந்தானம், ''ரவிக்குச் சீதா கஷ்டப்படணும் என்கிற ஆசையில்லை!'' என்றான்.

''ராஜா மாட்டிக் கொண்டால்?''

''அது மட்டும் எப்படிப் போதும்? போன பணத்தில் பாதியாவது தேற வேண்டும்......''

''அப்படித் தேறினால்?''



உஷார்!
சட்டைப் பை
பெண்கள் கை!

பெங்களூரில் இப்போது பெண் 'பிக்பாக்கெட்' திருடர்கள் அதிகமாகி விட்டதாகப் போலீஸ் கமிஷனர் கூறியிருக்கிறார்.

'பாபு'
(டெக்கான் ஹெரால்ட்)

''ரவி கண்டிப்பாகச் சீதாவைக் கைவிடமாட்டான்.....''

''அதுவரையில் அக்கா காத்துக் கொண்டிருக்க வேண்டுமா? ராஜா எவ்வளவு காலம் மறைவாக இருக்கிறாரோ.... எப்போது அவரைக் கண்டு பிடிப்பார்களோ? அப்படியே கண்டு பிடித்தாலும் அவரிடம் எவ்வளவு பணம் மிஞ்சியிருக்கிறதோ.......?''

'' இதையெல்லாம் உத்தேசித்துத்தான், வேறு இடத்தில் வரன் பார்க்கட்டும் என்று ரவியே வந்து சொன்னான்.... இன்னிக்கு நீ முடியுமானால் ராஜாவைப் பிடிச்சுக் கொடு. நாளைக்கே சீதா கழுத்திலே தாலியைக் கட்டச் சொல்றேன்....!''

''நிச்சயமாகவா?''

''சத்தியமாக!''

அடுத்த கணம் ஜானு மனம் தளர்ந்தாள்.

''எனக்கு எப்படித் தெரியும் ராஜா எங்கே இருக்கார்னு? அவருடைய தாயாருக்குக்கூடத் தெரியாது!''

''அப்போ சீதா ரவியை மறந்து விடட்டும். உன் அக்காவுக்கும் கல்யாணத்துக்கும் ராசி இல்லே போலிருக்கிறது !''

ஜானுவுக்குக் கோபம் வந்தது.

''எப்படியும் இந்தக் கல்யாணம் நடக்கணும்.....!''

''விருப்பாகப் பேசி விட்டால் நடந்து விடுமா? ராஜா உன்மீது உசிரை வைச்சிருக்கான்னு தெரியறது.... ஒரு வேளை உனக்காக அவன் வந்து போகலாம் இல்லியா?''

''ரெண்டு மாசமா வராதவர் வருவார்னு எப்படி எதிர்பார்க்கிறதாம்.... அப்படியே வந்தாலும்,—பெண்ணாகப் பிறந்த நான் என்ன செய்ய முடியும்......?''

அவள் பேச்சை முடிக்கவும், பாகிரதி கர்ப்பியுடம் அங்கே வந்தாள்.

''சந்தானம்...! இனிமேல் இந்த வீட்டில் நான் உசிரோடு இருக்கிற வரைக்கும் கல்யாணம் என்ற வார்த்தையே என் காதில் விழப்படாது.... என் பெண்கள் மூணும் இப்படியே நின்னு நாசமாப் போகட்டும்..... என் அண்ணாபிள்ளை, ரகுபதி, ரவி... இன்னமே என் சீதா கன்னிப் பெண்ணாகவே ஒழிஞ்சு போகட்டும்.....''

''ஏன் மாமி, அலுத்துக் கொள்கிறீர்கள்..... ரவிதான் தன் கஷ்டத்தைச் சொன்னானே.... சொத்தையே இழந்து நிக்கிறவன் மனசை நீங்களும் கொஞ்சம் புரிஞ்சு கொள்ளணும்.... அந்தப் பெண் அகிலா, தன் பங்கில் பாதியைத் தர்றேன்னு சொல்றா. ஏன், அண்ணாவுக்காக முழுப் பங்கையே கூட விட்டுக் கொடுக்க அவள் தயார் தான்.... ஆனா அப்படியெல்லாம் பணம் பெறணும்னு ரவிக்கு ஆசை கிடையாது.... இன்னும் சொல்லப் போனா, நீங்க சொத்து வேண்டாம்னு சொன்னதற்கு உங்க ஐம்பதாயிரத்தை அவனே எடுத்துக் கொள்ளலாமே..... அவன் என்ன சொல்றான், தெரியுமா? 'பாகிரதி அம்மாளின் மூணு பெண்களின் கலியாணமும் இந்தப் பணத்திலேதான் நடக்கணும். அதில் நான் கை வைக்கப்படாது !' என்கிறான்.... அவனைவிட ஒசத்தியான பிள்ளையை நீங்கள் 'இந்த உலகத்திலே பார்க்க முடியாது, மாமி.....!''

பாகிரதி, ''நான் இப்போ ரவியை ஒரு குற்றமும் சொல்லவில்லையே? நீ அவனுக்காகப் பரிஞ்சு பேசறதைப் பார்த்தால் நான் ஏதோ அவனைப் புழிச்சுவிட்ட மாதிரின்னா தோணும்?'' என்றாள்.

காப்பியைக் குடித்த சந்தானம், ''நீங்கள் எல்லாரும் இப்போதைக்கு எல்லாத்தையும் மறந்து கொஞ்சம் பொறுமையா இருக்கணும்.... சீதா மனசு ஒடிஞ்சு போயிருக்கும். வாஸ்தவம்தான்.... ஆனா என்ன செய்ய முடியும்? நீங்க அலுத்துக் கொள்றதும், ஜானு குதிக்கிறதும் சரியில்லே. ஏழெட்டு நாட்களாக, ரவி என்ன செய்வது என்று தெரியாமல் அலைபாய்கிறான். நானும் அகிலாவும் போலீஸிலே பெரிய பெரிய அதிகாரிகளையெல்லாம் கண்டு பேசியாகி விட்டது....ஆனால் அவர்கள் விரிக்கிற வலையிலே ராஜா இன்னும் விழல்லியே?....'' என்றான்.

''அந்த ராஜாவை நினைச்சாலே எனக்குப் பற்றிக் கொண்டு வருகிறது.... வெட்டிப் போடலாமான்னு தோணறது !'' என்று கறுவினாள் பாகிரதி.

''கோபித்துக் கொண்டால் ஒன்றும் நடக்காது.... ஒண்ணு மட்டும் நிச்சயம்..... ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் ராஜா சிக்கி விடுவான்.... எத்தனை சீக்கிரம் அவன் மாட்டிக் கொள்கிறானோ, அத்தனைக்கும் ரவிக்கு நல்லது..... நிறையப் பணம் திருடின யாருமே, அதை முதலில் அமுக்திவிடுவார்கள்..... கொஞ்சம் கொஞ்சமாகத் தான் செலவு செய்வார்கள், சந்தேகம் எழாமல் இருக்க !''

பாகிரதி ஒருவாறு தன்னைத் தானே அடக்கிக் கொண்டாள். அருகே நிற்கும் ஜானுவைப் பார்த்த போது திடீரென்று அவளுக்கு மீண்டும் கோபம் வந்தது.

''இந்த லங்கிணி அந்தக் கேப்புமாரியைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்ளணும்னு திட்டம் போட்டாள். கல்யாணம் ஆகியிருந்தால், இப்போ இவ எப்படி இருப்பாள்?''

''ஓடியிருக்க மாட்டார்.... நானே திருடியிருந்த பணத்தை மீட்டுக் கொடுத்திருப்பேன் !'' என்றாள் ஜானு ஆத்திரமும் அழுகையும் கலக்க.

''சரி, சரி.... இனி மேல் நடக்க வேண்டியதைப் பார்க்கணுமே தவிர, பழங் கதைகளைப் பேசிப் பிரயோசனம் இல்லே!''

பாகிரதி காலி தம்ளருடன் சென்ற பிறகு ஜானு தாழ்ந்த குரலில் கேட்டாள்: ''ரவி அக்காவைக் கல்யாணம் செய்து கொள்ளுவான் என்று நீங்கள் நம்புகிறீர்களா ?''

''அது ராஜாவைப் பொறுத்திருக்கிறது.....'' என்ற சந்தானம், ''என் அக்காவின் கல்யாணத்தை நானே

நடத்தி வைப்பேன்னு முன்னே ஒரு நாள் சவால் விட்டாயே. இப்போ அதுக்கு சான்ஸ் வந்திருக்கு...நடத்தி வை, பார்ப்போம்!'' என்றாள்.

அவள் குரலில் பொதிந்திருந்த ஏளனத்தைத் தாங்க முடியாமல் ஆத்திரமடைந்த ஜானு, ''அவர் எங்கே இருக்கார்னு எனக்குத் தெரியாதே!'' என்று கத்தினாள்.

''நான் உன்னை நம்ப மாட்டேன், ஜானு?''

''என்ன?''

''உன்னோடு இன்பமாக வாழத்தான் அவன் இவ்வளவு பெரிய தொகையைக் களவாடியிருக்கிறான்...முதன் முதலா உன்னைச் சந்திச்சானே, சைக்கிள் ஆக்ஸிடெண்ட் நடந்ததே அன்னிக்கு! அப்போதே, அவன் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானம் செய்தாச்சு.....!''

''நீங்கதான் அவர் மனசைக் குடைந்து பார்த்தீர்களாக்கும்....!''

''ஒவ்வொன்றையும் சரியா கவனிச்சுப் பாரு... உனக்கே புரியும்... சில்லறை சில்லறையாய்ப் பொய்க் கணக்கு எழுதித் திருடியவன், ஆக்ஸிடெண்டு ஆன அன்னிக்கு ராத்திரி ஒரு சந்தர்ப்பம் கிடைச்ச போது, இரும்புப் பெட்டியைத் திறந்து பணம் எடுத்திருக்கிறான். இதை அவன் கூட்டாளி சீமாச்சுவும் சொல்லியாகி விட்டது. மறுநாள் காலையில் கோதண்டராமனின் பணம் கிடைக்கிற போது, பாங்கி திறந்ததும் இறக்காததுமாய் லட்சத்து முப்பதாயிரம் வாங்கி யிருக்கிறான்..... இதைப் பாங்கி ஏஜண்டே சொல்லியாச்சு... அப்புறம் அவன் நெஞ்சு தைரியத்தோடே ஒரு மாச காலம் உன்னோடு பழகியிருக்கிறான்... இரண்டு நாளுக்கு ஒரு தடவை போஸ்டாபீசுக்கு வந்து உன்னைச் சந்தித்திருக்கிறான்.... இதைப் போஸ்ட் மாஸ்டர் சிதம்பரமே சொல்லி யிருக்கிறார். ஆனால் அப்போதெல்லாம் ஒரு பெரிய மோசடிக்காரனுடன் பழகிக் கொண்டிருப்பதாக உனக்குத் தெரியவில்லை; தெரிய நியாயமுமில்லை!

''அவனுடைய அம்மா வந்து போனப்புறம், உங்கள் கல்யாணம் நிச்சயமாகி விடும் என்ற ஒரு நிலை உண்டான பிறகுதான், அவன் தலைமறைவாக இருக்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டது. செக்கு விஷயத்தை ரவி, பேச்சோடு பேச்சாகக் கேட்டிருக்கிறான்... இனிமேல் என்றைக்கு வேண்டுமானாலும் கண்டுபிடித்து விடுவார்கள் என்ற உதறல் உண்டாகி விட்டது அவனுக்கு. ஊரை விட்டே ஓடியிருக்கிறான்.....ஆனால் அவன் எங்கே இருந்தாலும், உனக்கு ஒரு தகவலாவது அனுப்பாமல் இருக்க மாட்டான்.....''

இத்தனை நேரமும் மௌனமாய்ச் சந்தானம் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஜானு அழுது கொண்டே, ''சத்தியமாக ஒரு தகவலும் அவர் எனக்கு அனுப்பவில்லை... அனுப்பியிருந்தால் அக்காவின் கல்யாணத்தை உத்தேசித்து நான் அதைப் பகிரங்கப்படுத்தியிருப்பேன்...'' என்றாள்.

---

ருஷிய ஜார் மன்னருக்கு இரண்டே நாட்கள் வைத்தியம் செய்து மூன்று லட்சம் ரூபாய் தட்டிக் கொண்டார் பேராசிரியர் ஜாகரின்.

பிலடெல்பியாவில் பொற்கொல்லராக வாழ்வு தொடங்கி, பிறகு பல் டாக்டராகிப் பாரிஸில் சக்கைப் போடுபோட்டவர் டாக்டர் தாமஸ் இவான்ஸ். மூன்றாவது நெப்போலியன், விக்டோ



ரியா மகாராணி உள்படப் பல மன்னர்களுக்கு மருத்துவம் செய்தவர் இவர். இவான்ஸ் விட்டுச் சென்ற சொத்தின் மதிப்பு இரண்டுகோடி ரூபாய்க்கு மேலாகும். இதில் பாதிக்கு மேற்பட்ட தொகையைக் கொண்டு பிலடெல்பியாவில் தலைசிறந்த பல் வைத்திய நிலையம் நிறுவப்பட்டது.

---

''அக்காவுக்காக அவனை நீ காட்டிக் கொடுத்து விடுவாய் என்று நான் நம்பவில்லை....''

''ராஜாவினிடம் நான் என் மனசைப் பறி கொடுத்திருக்கலாம். இத்தனையெல்லாம் அவர் செய்ததற்கு நான் அவர் மீது வெறுப்பு அடையாமலும் இருந்திருக்கலாம். ஆனால் என் அக்காவின் வாழ்வு மற்ற எல்லாவற்றையும்விட ஒசத்தி என்கிறதை நான் சொல்லி நீங்கள் நம்பாமல் போனால் எனக்கு ஒரு நஷ்டமுமில்லை.''

அவளுடைய விம்மலுக்கிடையே சந்தானம் கூறினான்: ''ரவி சீதாவைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறானோ இல்லையோ, அது வேறு விஷயம். நீ ஒரு பெரிய ஆபத்திலிருந்து தப்பியிருக்கிறாயே, அதுதான் இப்போ உன் வாழ்க்கையிலேயே பெரிய அதிருஷ்டம்....கடவுள்தான் உன்னை மாபெரும் இக்கட்டிலிருந்து காப்பாற்றியிருக்கிறார். தெரிந்ததா?''

அதற்கு ஜானு யாதொரு பதிலும் சொல்லவில்லை.

(தொடரும்)

**ரா**ஜியின் மீது பசுபதிக்கு எப்போதும் உயர்ந்த அபிப்பிராயம் உண்டு. பண்பு நிறைந்த அந்தப் பெண்ணிடம் சமீப காலமாக அவர் கண்ட ஒரு பலவீனம் அவருக்கு அதிர்ச்சி அளித்தது. ஆண் மகன் ஒருவனிடம் அவள் நட்புக் கொண்டிருந்தது அவருக்கு நம்பவொண்ணாததாக இருந்தது. ஆயினும் ஆபீஸ் வாசலில் நின்று அவளை ஒருவன் சந்திப்பது பசுபதியின் கண்கள் காட்டிய உண்மை.



கௌரவம் மிக்க உத்தியோகத்திலுள்ள ராஜியின் தந்தை ராமலிங்கம் பெரிய மனிதர். மிகுந்த அந்தஸ்துடன் வாழ்பவர். அவளை நேசம் வைத்த சுந்தரமோ, பொருட்களைத் தலைச் சுமையாகச் சுமந்து தெருத் தெருவாய் வியாபாரம் செய்து பிழைப்பவரின் மகன். சுந்தரம் பெரிய இடத்துப் பையன் தோரணையில் பாண்ட்டும் ஸ்லாக்கும் அணிந்து கொண்டு சிகரெட்டும் கையுமாய் நவநாகரிக வாலிபனாகக் காட்சி தந்தாலும் சாதாரண சேல்ஸ்மேனாக வேலை பார்ப்பவன்தான் என்று பசுபதிக்குத் தெரியும். மிஞ்சிப் போனால் அவன் சம்பளம் எழுபதுக்கு மேல் இருக்காது.

ராஜியின் அலுவலகத்துக்குப் பக்கமுள்ள பெட்டிக்கடை முன் வெய்யிலுக்காகப் போடப்பட்டிருந்த பந்தற்காலில் சாய்ந்தவாறு, சிகரெட் புகையைச் சுருள் சுருளாக விட்டுக்கொண்டு ஒரு மணி நேரத்துக்கு மேல் ராஜிக்காகக் காத்து நின்றான் சுந்தரம். ராஜி ஆபீசிலிருந்து வருவதைப் பார்த்ததும் பாதி எரிந்த சிகரெட் துண்டைக் கீழே போட்டுக் காலால் நசுக்கி அணைத்துவிட்டு அவளை நோக்கிச் சென்றான். வேலை செய்த அசதியில் ராஜி களைத்துப் போய் மெதுவாக வந்து கொண்டிருந்தாள்.

''ராஜி !'' என்று அழைத்தான் சுந்தரம்.

எதிர்பாராமல் ஆபீஸ் வாசலில் அவனைக் கண்டதும் அவளுக்கு அதிர்ச்சிதான்.

"சுந்தர், இங்கேயே வந்து விட்டீர்களா?" என்றாள் பதற்றத்துடன்.

"உனக்காக ஒரு மணி நேரமாய்க் காத்து நிற்கிறேன் ராஜி !"

"ஆபீஸ் வாசலுக்கே வந்துவிட்டீர்களே! யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்?" ராஜி சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டாள்.

"நினைத்தால் நமக்கு என்ன ! வா, போகலாம்."

சுந்தரம் ராஜியோடு ஒட்டிக் கொண்டான். அவள் உடம்பு கூசியது. யாராவது பார்த்து விடுவார்களோ என்ற அச்சம் அவளைப் பற்றிக் கொண்டிருப்பது நன்றாகத் தெரிந்தது.

"இன்று ஒரு திட்டத்தோடு வந்திருக்கிறேன் ராஜி! புதுசா ஒரு காதல் படம் வந்திருக்கு. நாம் இருவரும் சேர்ந்து பார்க்கணும்" என்றான் சுந்தரம்.

"சினிமாவுக்கா? வேண்டாம், சுந்தரம்."

"சினிமா என்றதும் ஏன் பயப்படுகிறாய் ராஜி ?"

"வேறு எங்காவது போய்ப் பேசிக் கொண்டிருப்போம். சினிமா மட்டும் வேண்டாம்." — அவள் கெஞ்சலுடன் சொன்னாள்.

"இத்தனை பழகியும் நீ இன்னும் கோழையாக இருக்கிறாயே, ராஜி !"

சுந்தரம் ராஜியை ஒரு ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றான். அங்கு இருவரும் சிற்றுண்டி அருந்திவிட்டு மனம் போன போக்கில் எங்கெங்கோ சுற்ற ஆரம்பித்தனர்.

பசுபதி தொடர்ந்து சென்று பார்த்த இந்தக் காட்சிகளை எப்படி நம்பாமல் இருக்க

என்பதுதான் என் கருத்து. குழந்தை மனம் குரங்காகிவிட்டபின் ஏற்படும் சபலம்தான் காதல்."

"அப்படி என்றால் காதலைப் பற்றி உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?"

"நாம் ஏற்படுத்திக் கொண்ட அடக்கத்தையும், பண்பையும் மீறிய ஒன்றுதானே காதல்? காதலை உண்டாக்கிக் கொள்வது நாம் தானே ? மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டால் காதல் ஏது ?"

பசுபதி சிறிது தயக்கத்துடன், "ராமலிங்கம், நம் ராஜி தெரிந்தோ, தெரியாமலோ காதல் பாதையை நோக்கிச் செல்வது போல் தெரிகிறது" என்றார்.

ராமலிங்கம் ஒருகணம் அதிர்ச்சிக்குள்ளாகி விட்டார். சிறிது நேரம் எதுவும் பேசத் தோன்றவில்லை அவருக்கு.

"பசுபதி, ராஜியை நீங்கள் நன்றாகப் புரிந்து கொண்டவர்தானே ? அவள் தவறான பாதையில் செல்வாள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா ?"

"நினைக்கத்தான் முடியவில்லை. ராஜி அவ்வளவு அடக்கமான பெண் ! ஆண்களிடம் தலைநிமிர்ந்துகூடப் பேச மாட்டாள். ஆனால் இன்று கண்ணால் பார்த்ததைப் பொய்யென்று கொள்ள என்னால் முடியவில்லையே!"

"ராஜி யாரிடமோ 'சோஷலா'கப் பேசியதைப் பார்த்து நீங்கள் தவறாகக் கணித்திருப்பீர்கள் பசுபதி ! ராஜி அடக்கத்தை மீறக்கூடிய பெண்ணல்ல. ஏனென்றால் அவள் பிறந்த பரம்பரை அப்படி. எங்கள் பரம்பரையில் இதுவரையில் இந்த மாதிரி பேச்சுக்கு இடமிருந்ததில்லை. எங்கள் பரம்பரைப்படி



# காதலுக்காக அல்ல.

எம். கே. சங்கரன்

முடியும்? ராஜியின் தந்தை ராமலிங்கத்திடம் இதை உடனே தெரிவித்துவிட வேண்டும் என்ற துடிப்பு பசுபதிக்கு.

தயக்கத்தோடு ராமலிங்கத்தின் எதிரில் உட்கார்ந்த பசுபதி, விஷயத்தை எந்த முறையில் அவரிடம் சொல்வது என்று யோசித்துவிட்டுக் கேட்டார் : "காதலைப் பற்றி நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"இது சினிமாவையும், கதைகளையும் பார்த்துவிட்டு அலையும் இளம் பெண்களின் கேள்வியல்லவா? உங்களுக்கு எப்படி இதில் ஈடுபாடு வந்துவிட்டது?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் ராமலிங்கம்.

"காரணத்தோடுதான் கேட்டேன்."

"காதல் என்பது சுவைக்காகக் கதைகளிலும், சினிமாவிலும் சேர்க்கப்படும் வார்த்தை

நாங்கள் அனுசரித்து வந்த கட்டுப்பாடும் மரியாதையும் என் ராஜிக்கு நிச்சயம் இருக்கும்."

"நீங்கள் சொல்கிறபடி பரம்பரை மரியாதையை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் காலத்தின் சூழ்நிலையையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நம் பெண் வெளியில் வேலை செய்கிறாள். பலதரப்பட்ட ஆண்களோடு பழகும் சந்தர்ப்பமும் ஏற்படுகிறது......."

"யாரிடம் பழகினால் என்ன? ஒரு பெண் உயர்ந்த பரம்பரையில் பிறந்திருந்தால் அந்தப் பரம்பரையின் கண்ணியமான உணர்வு என்றும் அவளிடம் இருக்கும். ராஜியைப்பற்றி நான் நன்றாக அறிவேன். அவளிடம் எனக்கு உறுதியான நம்பிக்கை உண்டு."

''என் எண்ணமும் உங்கள் நம்பிக்கைப்படி இருக்க வேண்டும் என்பதுதான்.''

ராமலிங்கத்தின் பார்வை தெரு வாசலை நோக்கியபடி இருந்தது. வாசலுக்கு அந்தப் பக்கம் ராஜி நின்று கொண்டிருந்தாள். அவள் சற்று முன்பே வந்து விட்டாள். ஏனோ உள்ளே வரவில்லை.

''ராஜி !'' என்று ராமலிங்கம் அழைத்தார்.

தயக்கத்துடன் ராஜி உள்ளே வந்தாள். ராமலிங்கம் சுவர்க்கடிகாரத்தைப் பார்த்தார். மணி ஏழு ஆகி இருந்தது.

''ராஜி, இப்பவெல்லாம் நீ தினமும் லேட்டாக வருகிறாய். ஏனம்மா?''

பதில் பேச முடியாமல் தலை குனிந்து நின்றாள் ராஜி.

''ராஜி! நீ ஒரு பெண் இல்லையா? ஆபீஸ் முடிந்தவுடன் நேராக வீட்டுக்கு வருவது தானே நல்லது? உலகத்தின் கண் பொல்லாததென்று உனக்குத் தெரியாதா?''

''அப்பா, நான் உங்கள் பெண். உயர்ந்த பரம்பரையில் பிறந்திருக்கிறேன் என்ற உணர்வு எனக்கு இருக்கிறது. பரம்பரை மரியாதையை நான் மீறிவிட மாட்டேன். என்னை நீங்கள் நம்பலாம்.''

ராஜியின் உறுதியான பேச்சைக் கேட்டுப் பசுபதி ஆச்சரியம் அடைந்தார். ஒருவேளை தாம் கணித்ததுதான் தவறோ என்றுகூட நினைத்தார்.

''ராஜி! நான் கண்ணால் பார்த்ததை வைத்து அப்பாவிடம் ஏதேதோ சொல்லிவிட்டேன்.....'' பசுபதி வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னார்.

''நீங்கள் அப்பாவிடம் சொன்னது என் நன்மைக்குத்தான் என்பதை உணர்வேன், மாமா ! பரம்பரைக் கண்ணியத்திலிருந்து நான் சிறிதும் விலக மாட்டேன் என்பதை உங்களிடமும் உறுதியாகச் சொல்கிறேன்'' என்றாள் ராஜி.

ராஜி தன் அறைக்கு வந்து விட்டாள். அவள் மனத்தில் இப்போதுதான் நிம்மதி ஏற்பட்டிருந்தது. கொஞ்ச நாட்களாக அவளிடம் ஒரு பயம் குடிகொண்டிருந்தது. அதாவது என்றிலிருந்து சுந்தரிடம் நெருக்கமாகப் பழக நேர்ந்ததோ, அன்றிலிருந்து ஏற்பட்டது இந்தப் பய உணர்ச்சி. நேர்மையான பாதையாக இருந்தால் பயம் ஏன் ஏற்படுகிறது ? தவறு செய்வது போன்ற உணர்ச்சி ஏன்?

இப்போது அவளுக்குள் ஒரு தெளிவு ஏற்பட்டிருந்தது. அவள் மனத்தில் எழுந்த ஆசாபாசங்களை அவள் அடக்கியாளத் தலைப்பட்டு விட்டாள். அதற்குப் பிராயச்சித்தமாகவே தன் தந்தையிடம் உறுதிமொழி கொடுத்தாள். இனி அவள் பயப்படத் தேவை இல்லை.

சுந்தரத்தை ராஜி பார்த்து ரொம்ப நாளாயிற்று. அவனைச் சந்திக்க வேண்டும் என்ற எண்ணத்தை அவள் அறவே ஒதுக்கி விட்டாள். ஓரிரு முறை அவனை அவள் பார்த்தாலும் அவன் அருகில் வருவதற்குள் வேகமாகப் போய் விடுவாள். ராஜி விலகி ஓட ஓட அவனைச் சந்திக்க வேண்டும் என்ற எண்ணம் சுந்தரைப் பலமாகப் பற்றிக் கொண்டது. அவளைப் பார்க்க ஒரு நாள் ஆபீஸ் வாசலுக்கே வந்து விட்டான்.

ராஜி ஆபீஸ் படி இறங்கிய போதுதான் சுந்தரத்தைப் பார்த்தாள். அவளுக்கு அதிர்ச்சிதான். ஒன்றும் பாராதது போல் நேராகப் போய்க் கொண்டிருந்தாள். சுந்தரம் அவள் பின்னால் வந்தான். ராஜி வேகமாக நடந்தாள்.

''ராஜி ! ராஜி !''

அவன் கூப்பிடக் கூப்பிட அதிவேகமாக நடந்தாள். தெருமுனை கடந்து விட்டது. மேலும் சுந்தரம் அவளைப் பின்தொடர்ந்து வருவது அவளுக்குச் சங்கடமாக இருந்தது.

சட்டென்று திரும்பி, ''சுந்தர், தயவு செய்து என் பின் வராதீர்கள்'' என்றாள்.

''உனக்கு என்ன வந்து விட்டது ராஜி ? நீ ஏன் என்னை விட்டு விலகி ஓடுகிறாய்?'' என்று ஏக்கத்தோடு கேட்டான் சுந்தரம்.

''சுந்தர்! ஒரு பெண்ணும் ஆணும் பழகத் தகுந்த முறையில் நாம் பழகிக் கொள்ளவில்லை. நாம் இருவரும் கண்ட கண்ட இடங்களில் சந்திப்பதும் அலைவதும் தப்பு என்று உணர்ந்துவிட்டேன். பெண்ணாய்ப் பிறந்த நான் ஒரு நியதிக்குக் கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டும். என் பெண்மை அடக்கம், மரியாதை எல்லாவற்றையும் நான் காப்பாற்றித்தான் தீர வேண்டும். என் பெண்மையை நீங்கள் போற்றுவதாக இருந்தால் தயவுசெய்து என்னை வெளி இடங்களில் சந்திக்க முயலாதீர்கள். என்னைத் தான் அடைய வேண்டும் என்று நீங்கள் தீவிரமாக விரும்பினால் உங்கள் அப்பாவின் மூலம் என் அப்பாவிடம் பெண் கேட்கச் சொல்லுங்கள்.''

மிகுந்த அழுத்தத்துடன் கூறிய ராஜி சுந்தரின் பதிலைக்கூட எதிர்பாராமல் வேகமாகப் போய் விட்டாள்.

ராமலிங்கம் ராஜிக்குச் சீக்கிரமாகக் கல்யாணத்தை முடித்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தார்.

பசுபதி மிகுந்த அவசரத்துடன் ராமலிங்கத்தைப் பார்க்க வந்தார்.

''ராமலிங்கம்! நம்ம ராஜிக்கு ஏற்ற ஒரு பெரிய இடம் கிடைத்திருக்கிறது'' என்றார் உற்சாகத்தோடு.

''யார் ?'' என்றார் ராமலிங்கம்.

''மிராசுதார் சண்முகத்தின் மகன்தான். எம். ஏ. பட்டதாரி. காலேஜில் லெக்சரராக வேலை பார்க்கிறான். நல்ல வசீகரமான பையன். நம் ராஜியை ரொம்பவும் விரும்பிக் கேட்கிறார்கள். உங்களிடம் கேட்டுச் சொல்கிறேன் என்று வந்தேன்.''

ராமலிங்கம் சிறிது யோசனையில் ஆழ்ந்தார். ராஜி இருவருக்கும் காப்பி கொண்டு வந்தாள்.

ராமலிங்கத்தின் பார்வை தெருவை நோக்கித் திரும்பியது. யாரோ இரண்டு வயதானவர்கள், சாதாரண உழைப்பாளிகள் போலிருந்தார்கள், உள்ளே வரத் தயங்கி வாசலில் நின்று கொண்டிருந்தார்கள். பசுபதியும் அவர்களைப் பார்த்தார்.

ராமலிங்கம் அவர்களை உள்ளே வரச் சொன்னார். மிகுந்த தயக்கத்துடன் உள்ளே

வந்த அவர்கள் ராமலிங்கத்தின் எதிரில் பய பக்தியுடன் நின்றார்கள். அந்த இடத்தில் நான்கைந்து பேர்கள் தாராளமாக உட்காரக்கூடிய ஆசனங்கள் இருந்தும் அந்த இருவருக்கும் ராமலிங்கத்துக்குச் சமமாக உட்காரும் மனப்பான்மை இல்லை.

"முதலாளிகிட்டே ஒரு சமாசாரம் தனியாப் பேசணும்" என்றார் சுந்தரத்தின் தகப்பனாருடன் வந்தவர்.

"இங்கே அந்நியர் யாரும் இல்லை. எந்த விஷயத்தையும் தாராளமாகச் சொல்லலாம்" என்றார் ராமலிங்கம்.

"நாங்க ஏழைங்க. தெரிஞ்சோ தெரியாமலோ உங்க வாசல்லே வந்து நிக்கறோம். இவர் மகன் சுந்தரத்துடைய நச்சரிப்பு தாங்க முடியாம வந்திருக்கோம். நாங்க வந்தது தப்புன்னு முதலாளி பொறுத்துக் கொள்ளணும்" என்றார் பீடிகையுடன்.

"விஷயத்தை முதலில் சொல்லும்."

"இவரு மகனை எவ்வளவோ பாடுபட்டுப் பத்து கிளாஸ் வரை படிக்க வைச்சிட்டார். நல்ல கெட்டிக்காரப் பையன்தான். எங்க நிலைமைக்குத் தகுந்த மாதிரி ஒரு நல்ல பெண்ணைப் பார்த்து அவனுக்குக் கல்யாணம் முடிச்சு வைக்கணும்னு இவருக்கு ஆசை. ஆனா அவன் பெரிய நெனைப்பு நெனைச்சிக்கிட்டிருக்கான். உங்க மகளைப் பேசி முடிக்கச் சொல்றான். நீங்க இருக்கிற அந்தஸ்துக்கு நாங்க உங்களிடம் பெண் கேட்க முடியுமா ? அவனிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தோம். கேட்க மாட்டேங்கிறான். ஒரு வார்த்தை உங்ககிட்டே கேட்டுட்டு, இல்லேன்னுவது வந்து சொல்லுங்க என்கிறான்.... நாலஞ்சு தடவை உங்க வீட்டு வாசல்வரையில் வந்துட்டுத் தைரியம் இல்லாமல் திரும்பிப் போயிட்டோம்."

ராமலிங்கம் நெற்றியில் கை வைத்தவாறு யோசனையில் ஆழ்ந்தார். பசுபதிக்குக் கொஞ்சம் வேகம்.

"நீங்கள் பெண் கேட்கிறதில் தப்பில்லே. எந்த இடத்தில் பெண் கேட்கணும் என்கிறதைத் தெரிஞ்சிருக்கணும்."

ராமலிங்கம் நிதானமாக, "பசுபதி, ஒரு இடத்தில் பெண் என்று இருந்தால் நாலு பேர் கேட்பது இயல்புதான். நம் ராஜிக்கும் பிராப்தம் அப்படி இருந்தால் நம்மால் தடுக்க முடியுமா?" என்றார்.

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால்...."

"ஆம், பசுபதி, இவர்களாகப் பெண் கேட்க வந்தது நன்மைக்குத்தான்."

"மிராசுதார் சம்பந்தம், எம். ஏ. பட்டம், அந்தஸ்தான உத்தியோகம் இவையெல்லாம் வலிய வர்றதில்லே."

"வேறு எதையும் பேசி என்னைக் குழப்பாதீர்கள் பசுபதி !" என்ற ராமலிங்கம் வந்தவர்களை நோக்கி, "உங்கள் பையனுக்கு என் பெண்ணைக் கொடுக்கச் சம்மதம்" என்றார்.

வந்தவர்கள் மலைத்து விட்டனர். ராமலிங்கத்தின் போக்கு பசுபதிக்குப் புதிராக இருந்தது.

வந்தவர்கள் போனதும் பசுபதி ராமலிங்கத்திடம், "ராமலிங்கம்! மிராசுதார் சம்பந்தத்தை விட்டு இந்தச் சாதாரண



"சேவா சங்கம் ஆரம்பித்திருக்கிறீர்களாமே! யாருக்கு என்ன சேவை செய்யப் போறீங்க?"
"அவாளவாள் பத்தினிக்கு சேவை செய்யற, தர்மபத்தினி சேவா சங்கம்! நீங்களும் சேருகிறீர்களா ?"

சம்பந்தத்தை ஏற்றுக் கொண்டீர்களே, ஏன்? ராஜி சுந்தரத்தின் காதலை நீங்கள் ஒப்புக் கொண்டு விட்டீர்களா?" என்று கேட்டார்.

"ஒப்புக் கொள்ள வேண்டியதுதானே?"

"அப்படி என்றால் காதலைப் பற்றி ஏதேதோ வியாக்கியானம் செய்தீர்களே?"

"காதலிப்பதற்கு இடம் கொடுக்கக் கூடாதென்றுதான் சொன்னேன். காதலித்தவர்களைப் பிரிக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லையே ?"

"ராஜி காதல் வழிக்கெல்லாம் போக மாட்டாள் என்று நீங்கள்தான் சொன்னீர்கள்! நானும் அதை நம்பினேன்."

"ராஜி அந்த வழியில் போகக் கூடாது என்பதுதான் என் எண்ணமும். நீங்கள் அன்று என்னிடம் சொன்னபோதுதான் அவள் அந்தப் பாதையில் விழுந்து விட்டாள் என்ற விஷயம் எனக்குத் தெரிந்தது. அந்த நேரத்தில் காதல் என்ற வார்த்தையைக் கேட்கவே எனக்கு அச்சமாக இருந்தது. அவளைத் திசை திருப்பவே நான் அப்படிச் சொன்னேன். அப்போது அவள் வெளியே நின்று கொண்டிருந்தது எனக்குத் தெரியும். பாரம்பரியப் பெருமைகளை அவள் காதில் படும்படி உணர்த்தினேன்."

"நீங்கள் நினைத்ததுபோல் அவள் திசை திரும்பி விட்டாளே. இப்போது நீங்களாகப் பார்த்து யாருக்குக் கல்யாணம் செய்து கொடுத்தாலும் அவள் சம்மதிப்பாள். அப்படி ஒரு சந்தர்ப்பம் கிடைத்தும் உங்கள் அந்தஸ்துக்குக் குறைந்த சுந்தரத்துக்கு ஏன் கொடுக்கணும் என்பதுதான் என் கேள்வி."

"அது ராஜியின் நன்மையை உத்தேசித்துத்தான். பசுபதி, ராஜி மனத்தை மாற்றிக் கொண்டாலும் அந்தப் பக்குவ நிலை வருவதற்குமுன் சுந்தரத்தை விரும்பியிருக்கிறாளல்லவா ? இன்னொருவனை அவள் கல்யாணம் செய்து கொண்டால் சுந்தரத்துடன் பழகியது ஒரு குற்ற உணர்வாக நிலைத்து அவள் வாழ்நாள் முழுவதையும் வருந்தச் செய்துவிடும். என் மகள் குற்ற உணர்வோடு வாழ்வதை நான் ஏற்க முடியுமா? மனத்தாலும் அவள் தூய்மையானவளாக இருக்க வேண்டும் என்றே இந்தக் கல்யாணம்—காதலை அனுமதித்து அல்ல" என்றார் ராமலிங்கம்.

பசுபதிக்குப் பதில் பேச நாஎழவில்லை.




"ஆறுமுகம்! இந்தக் களி மொத்தை கிட்டேயிருந்து உனக்கு விடுதலை கிடைக்கப் போவுது" என்றது ஒரு குரல். திரும்பிப் பார்த்த ஆறுமுகம் அப்போதுதான் வந்து சாப்பாட்டு அறையில் நின்ற உதவி சூப்பரின்டெண்ட் சுந்தரத்தைக் கண்டான்.

"என்ன சொன்னீங்க, ஸார்?" என்று கேட்டான் ஆறுமுகம், அவருக்குப் பெரிய கும்பிடு ஒன்று போட்டுவிட்டு.

"களி மொத்தையின் மகிமையைப் பத்திப் பெரிசாக் கதை படிச்சுக்கிட்டிருப்பியே; அதை இனிமே தின்ன உனக்குக் கொடுத்து வைக்கலேன்னு சொல்ல வந்தேன்."

"ஏன்? எனக்கு மட்டும் இட்டிலி—சாம்பார் ஏற்பாடு பண்ணிட்டீங்களா?"

"அதில்லேடா ஆறுமுகம். இன்னிக்கு உன்னைச் சிறையிலேயிருந்து விடுதலை பண்ணப் போறாங்க."

ஆறுமுகம் திடுக்கிட்டான். "அது எப்படிங்க? அஞ்சு வருசத் தண்டனை முடிய இன்னும் நாலு மாசம் இருக்குதே..." என்று தலையைச் சொறிந்தான்.

"உன் தண்டனைக் காலத்தை நாலு மாசம் குறைச்சு உத்தரவாகியிருக்குது—ஜெயிலுக்குள்ளே நீ ரொம்ப நல்ல மாதிரியா நடந்துக்கிட்டதா சூப்பரின்டெண்ட் துரை மேலிடத்துக்குச் சிபாரிசு செய்ததனாலே."

"இங்கே மட்டும் தானே என்னாலே ஒழுங்கா நடந்துக்கிட முடியுது. வெளியே போனா இந்தப் பாழும் புத்தி ஏன் தான் கண்டபடி திரும்புதோ தெரியலே" என்று ஆறுமுகம் அங்கலாய்த்தான். திடீரென்று கிடைத்த விடுதலையால் அவனது உள்ளத்தில் மகிழ்ச்சி நிறையவில்லை.

கோபம் தணிந்த சுந்தரம் அவன் தோள்மீது கை வைத்தபடி, ஆதரவுடன் கூறினார்: "அப்படி

இஷ்டம்போல் திரும்பாமே அந்தப் புத்தியை அடக்கி ஆளத் தெரியணும்டா ஆறுமுகம். உன்னுலே அது முடியும். உன் உடம்பிலே இருக்கிற உறுதி மனசுக்கும் வரணும். மூட்டை சுமந்தோ, கைவண்டி இழுத்தோ யோக்கியமாய் நாலு காசு சம்பாரிச்சு உன் பெண்டு பிள்ளேங்களேக் காப்பாத்து.''

''அப்பிடித்தானுங்க நானும் நினேச்சுக் கிட்டிருக்கேன். இந்தத் திருட்டுத் தொளிலிலே எனக்கு அதிர்ஷ்டம் போதாதுங்க.''



மீண்டுமொரு முறை சுதந்திரப் பறவையாக வெளி உலகில் கால் வைத்தான் ஆறுமுகம்.

பெரிய புள்ளிகளுக்கு வழி விட்டுச் சில்லறை ஆசாமிகள் ஒதுங்குவது போல் எதிர்த் திசையிலிருந்து வரும் மெயில் வண்டிக்காக அச் சின்னஞ் சிறு ஸ்டேஷனில் காத்திருந்தது கோயம்புத்தூர் பாஸஞ்சர். அதன் மூன்ருவது வகுப்புப் பெட்டி ஒன்றில் ஜன்னலோரமாகக் கண்களே மூடிக் கொண்டு ஆறுமுகம் அமர்ந்திருந்தான். சிந்தித்து, முடிவு கட்ட வேண்டிய பல பிரச்னேகள் ஆறுமுகத்தின் மனக் கண் முன்னுல் மலே போல நின்றன.

ஐந்து வருட கால இடைவெளிக்குப் பின் தன் குடும்பத்தினரைச் சந்திக்கப் போகும் ஆர்வம் அவன் மனத்தில் பொங்கவில்லே. அந்தச் சந்திப்பின் இன்பம் அதிகபக்ஷம் இரண்டு தினங்களுக்கு நீடிக்கலாம். பிறகு?...

எதற்கெடுத்தாலும் சீறிச் சினந்து வசை பாடும் அவன் மனேவி வள்ளி, கண்டதற்கெல்லாம் கண்ணீர் வடித்து ஒப்பாரி வைக்கும் அவனது இழத் தாயார், படிப்பும் வராமல், பொறுப்பும் தெரியாமல், வளரும் புதல்வன் பொன்னம்பலம், இப்போது கலியாண வயதை அடைந்திருக்கக் கூடிய ஒரு மகள் — இத்தனே பேரையும் அடக்கி ஆண்டு சமாளித்துத் திருப்திப்படுத்திக் குடும்பம் நடத்துவது எளிதா?

அதுவும் திருட்டுப் புரட்டுகளில் ஈடுபடாமல், யோக்கியமான முறையில்...?

இப்படி வெறுங் கையாய் வீடு திரும்புவதை விட வேறு முகமறியாத ஒரு ஊருக்குச் சென்று மூட்டை தூக்கியோ, வண்டி இழுத்தோ நாலு காசு சேர்த்துக்கொண்டு...

பேய் போல் இரைச்சலிட்டுக் கொண்டு வந்து பாசஞ்சரைக் கடந்து சென்றது மெயில். ஆறுமுகத்தின் சிந்தனே கலேந்தது.

பாஸஞ்சர் சேலத்தை அடைந்தபோது மாலே மணி ஐந்து. ஆறுமுகம் இறங்கி வெளியே நடந்தான். கிழக்கே மூன்று மைல் தொலேவில் அவனது கிராமம். வில்லினின்று புறப்பட்ட அம்பு போல் அவன் தன் இல்லம் நோக்கி விரையவில்லே.

சூரியாஸ்தமன வேளே. சாப்பிட்டுவிட்டு மெல்ல நடந்த ஆறுமுகம் அப்போதுதான் ஒரு மரத்தடியில் தன் கடையைப் பரப்பிக் கொண்டிருந்த ரேகை ஜோசியன் ஒருவனேக் கண்டான். கீழே ரேகைப் படத்தை விரித்துப் பக்கத்தில் கடவுளர் படங்களே நிறுத்தி அகல் விளக்கை ஏற்றி ஊதுவத்தியையும் கொளுத்தியாயிற்று. தன் எதிர்காலம் பற்றித் தெரிந்து கொள்ளும் இயற்கையான ஆவல் மனத்திலெழ ஆறுமுகம் அங்கு போய் நின்ருன். முகத்தை மூடி மறைத்திருந்த தாடி மீசைகள், நெற்றி நிறையப் பூசிய திருநீறு, அதன் நடுவே பெரியதொரு குங்குமப் பொட்டு இவற்றுடன் ஒரு யோகி போலக் காட்சி தந்தார் ரேகை சோதிடர்.

அருகே நின்று அவரைப் பார்த்த ஆறுமுகத்தின் விழிகள் சில விநாடிகளுக்கு நிலேக் குத்திவிட்டன. அந்த முகம்...!

''வா, தம்பி! சாமியைக் கும்பிடு மொதல்லே. அதுக்குக் காசு பணம் ஒண்ணும் கிடையாது'' என்று சோதிடர் ஊக்கினர். அந்தக் குரல்...!

ஆறுமுகத்தின் மூளே பழைமையை ஊடுருவிப் பாய்ந்தது. எதையும் யாரையும் எளிதில் மறவாத அதற்கு விடை காண நெடு நேரமாகவில்லே.

''என்ன முளிச்சுக்கிட்டு நிக்கிறே? ரேகை பார்க்கணுமா?''

''ஆமாம், பார்க்கணும். என தன ரேகை எப்படி ஓடுதுன்னு தெரியணும். அவ்வளவுதான்'' என்றவாறு ஆறுமுகம் கையை நீட்டினான். மங்கியவிளக் கொளியில் ஆராய்ச்சி நடந்தது.

''உனக்கு உடனடியாகத் தன லாபம் இருக்குது தம்பி.''

''அது எவ்வளவு? ஆயிரம் ரூபாயா, இரண்டாயிரமா?''

''அதை எப்படிக் கரெக்டாச் சொல்ல முடியும்?''

''ஏன் முடியாது?... விசயம் எப்படி இருக்குதுன்னு... அஞ்சு இடத்திலே கொள்ளையடிச்சு, மூணு பேரைக் கொலை செஞ்சு அப்புறம் ஜெயிலிலே இருந்தும் தப்பிச்சுக்கிட்ட பக்காத் திருடன் ஒருத்தன் இருக்கான். அவனைப் பத்தித் துப்புச் சொல்றவங்களுக்கு ஆயிரம் ரூபா சன்மானம் கொடுக்கிறதாப் போலீசிலே வெளம்பரம் செஞ்சிருந்தாங்க. ஆறு வருஷங்களாகியும் அவன் அகப்படலே. ஆனா அவனை நான் இன்னிக்கு அடையாளம் கண்டுக்கிட்டேன்....''

ரேகை சோதிடரின் முகம் பேயறை பட்டவன்போல் மாறிற்று. ஆறுமுகம் ஒரு கேலிச் சிரிப்புடன் தொடர்ந்தான்.

''...என் மனசிலே ஒரு தவிப்பு. அவனைக் காட்டிக் கொடுத்துப் போலீசிலே ஆயிரம் ரூபாய் இனாம் வாங்கறதா, அல்லது அவன் கிட்டே யிருந்து இரண்டாயிரம் ரூபாய் வாங்கிக்கிட்டு, 'கம்'முன்னு இருந்திடறதா? இதுக்குப் பதில் உன் ரேகை சாஸ்திரம் சொல்லாது. நீதான் சொல்லணும், மன்னார் சாமி?''

மாஜித் திருடன் மன்னார்சாமிக்கு வியர்த்து விறுவிறுத்தது. தாடி மீசைகளையும் மங்கிய அகல் விளக்கொளியையும், இந்தக் கடவுளர் திருவுருவப்படங்களையும் நம்பி இந்தத் தொழிலில் இறங்கியது எவ்வளவு தவறு என்பது இப்போதுதான் அவர் மனத்தில் பட்டது. பல ஆண்டுகளுக்கு முன் வேலூர் மத்திய சிறையில் அவரைக் கண்டு சில காலம் பழகியிருந்த ஆறுமுகம் திடீரென்று எமன் போல வந்து நிற்கிறான்!

''ஆறுமுகம்! நீ கெட்டிக்காரன்தான் அப்பா!''

''அதிருக்கட்டும், மன்னாரு! நீ என்ன சொல்றே?''

மன்னார்சாமி மென்று விழுங்கினான். பிறகு ஈனசுவரத்தில் சொன்னான்: ''நான் கொலை செய்யக் கூடியவன்தான். கொள்ளையடிக்கத் துணிந்தவன்தான். ஆனால் பொய் மட்டும் என் வாயிலிருந்து வராது...''

''என்னப்பா கதை அளக்கிறே? நீ சொல்ற ரேகை சோசியமே வெறும் பொய் தானே?'' என்று இடைமறித்தான் ஆறுமுகம்.

''அது வேறே சமாசாரம். என் கையிலே ரெண்டாயிரம் ரூபாய் புரளுறதானா நான் ஏன் இப்படி வீதியோரத்திலே குந்திக்கிட்டுப் பிராணனை விடறேன்?''

''என்னாலே எதையும் நம்ப முடியாது, மன்னாரு. நீயும் உன் கூட்டாளி பெரியண்ணனுமாகச் சேர்ந்து கொள்ளை அடிச்சிங்களே, அந்தப் பணமெல்லாம் எங்கே போச்சுது?''

ஏதோ தான் கொடுத்து வைத்த பணத்தைத் திருப்பிக் கேட்பவன் போலத்தான் அதிகாரமாக ஆறுமுகம் கேட்டான். ஆயினும் அதற்காகக் கோபப்படக்கூடிய நிலையில் மன்னார்சாமி இல்லை.

''சொன்னா நீ நம்ப மாட்டே. இரண்டாயிரம் பெறுமானத்துக்கு மேலேயே பணமும் நகையுமா இருக்கிற இடம் எனக்குத் தெரியும். ஆனா அதிலே ஒரு காசைக்கூட என்னாலே தொட முடியலே, ஆறுமுகம். எனக்கு மட்டுமென்ன? யாருக்குமே பிரயோசனப் படாமே போயிக்கிட்டிருக்குது அந்தச் சொத்து. அது ஒரு பெரிய கதை...''

ரஸ்தாவை அடுத்திருந்த மைதானத்தின் தனிமையில் அடங்கிய குரலில் அந்தக் கதையை மன்னார்சாமி சொல்ல, ஆறுமுகம் கேட்டான்.

கொள்ளைக்காரர்கள் பெரியண்ணனும் மன்னார்சாமியும் தாங்கள் பல இடங்களில் கைப்பற்றிய பொருள்களைத் தமக்குப் பொதுவாக ஓரிடத்தில் ஒளித்து வைத்தார்கள். சேலத்துக்கு மேற்கே இரண்டு மைல் தொலைவில் ஒரு வெட்ட வெளியிலே ஒரு மதுரை வீரன் கோயில். அதற்கு அருகே தண்ணீரே ஊறாத ஒரு பாழுங் கிணறு. அந்தப் பாழுங் கிணற்றின் அடியில் ஆழ்ந்ததொரு பள்ளம் தோண்டி அதில் புதைக்கப்பட்டது கொள்ளையரின் பணப் பெட்டி. அதிலிருந்து பணத்தை எடுக்கவோ, அன்றி அதனுள் வைக்கவோ இருவரும் ஒன்றாகத்தான் வர வேண்டும், தனித்து வரக் கூடாது என்பது நிபந்தனை.

அந்த நிபந்தனையை மீறி ஒரு நாள் நடுநிசியில் கிணற்றை நோக்கிப் போய்க்கொண்டிருந்தான் பெரியண்ணன். தன்னை முந்திக் கொண்டு அங்கு 'பிரத்யக்ஷ'மாகியிருந்த மன்னார்சாமியைச் சந்தித்தான். இருவரும் பேசிக் கொள்ளவில்லை. பேச்சுக்கு அப்பாற்பட்ட நிலைமை அது. மன்னார்சாமியின் கைத்தடி பெரியண்ணனின் மண்டையைப் பிளந்தது. பெரியண்ணன் வீசிய வெட்டரிவாள் மன்னாரின் இடக் கரத்தைத் துண்டாக்கியது.

தீக்குச்சியைக் கிழித்து ஆறுமுகம் அதன் வெளிச்சத்தில் பார்த்து மன்னாருக்கு இடக்கை இல்லை யென்று நிரூபணமாக்கிக்கொண்டான். அதற்கு மேல் கதையைப் பூரணமாக நம்ப அவனால் முடிந்தது.

தேடப்பட்டு வந்த கொள்ளைக்காரப் பெரியண்ணனின் சடலம் போலீஸாருக்குக் கிடைத்தது. தன் குற்றச் சுமையில் இன்னொரு கொலையையும் ஏற்றிக் கொண்ட மன்னார்சாமி பிடிபட்டான். பின் சிறையிலிருந்து தப்பினான்.

பாழுங் கிணற்றிலிருந்து பணப் பெட்டியைத் தோண்டி எடுத்துக் கொண்டு கண் காணாத இடத்துக்குச் சென்றுவிட எண்ணி அவன் வந்தபோதோ....!

பெரியண்ணனின் பயங்கர ஆவி அவனை நெருங்கவே விடவில்லை. ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று முறைகள் முயற்சி செய்தும் மன்னார்சாமி கண்டது தோல்விதான். மூன்றாவது முயற்சியில் அந்த ஆவியிடம்

அறை வாங்கி மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் இரத்தம் கக்கி அவன் மூர்ச்சையுற்றுக் கிடந்த சம்பவத்தைச் சொல்லும்போதோ மன்னாரின் நாக்குழறியது. மேனி பதறியது.

ஆறுமுகம் சிரித்தான். ''பேயாவது, பிசாசாவதுடா மன்னாரு. எல்லாம் உன் மனப் பிரமைதான்'' என்றான்.

''நான் முட்டாள்னு நீ நினைச்சுக்கிட்டாப் பரவாயில்லே ஆறுமுகம். எனக்குப் பணத்தை விட என் உசிருதான் பெரிசு. உசுரு ஒண்ணு இருந்தாத்தானே பணத்தை அநுபவிக்க முடியும்?''

ஆறுமுகம் சற்று யோசித்துப் பிறகு சொன்னான்: ''மன்னாரு! நான் ஒண்ணு சொல்றேன். நான் இப்போதான் ஜெயில்லேருந்து விடுதலையாகி வரவன். எனக்குத் திருப்பியும் தப்புத் தண்டாச் செஞ்சு மறுபடியும் ஜெயிலுக்குப் போற உத்தேசம் இல்லே. யோக்கியமாப் பொழைக்கக்கிடறதாத்தான் தீர்மானம். ஆனா எதுக்கும் பணம் வேணு மில்லே. அங்கே பாழுங் கிணத்திலே பணம் கொட்டிக் கிடக்குது. அதிலே கை வைக்க முடியாமே நீ திண்டாடிக்கிட்டிருக்கே. இந்த நிமிஷத்திலே எனக்கு உயிர் கூடப் பெரிசாத் தோணலே. அந்தப் பெட்டியை நான் எடுத்துக்கிட்டு அதிலேயிருந்து உன் பங்கைத் தந்திடறேன். பெரியண்ணன் பங்கை நான் வச்சுக்கிறேன். சம்மதமா?''

---

**''பெண் பார்த்துவிட்டு வந்தாயாமே! பெண் எப்படி?''**

**''ஆகா! மாம்பழக் கன்னம். திராட்சை விழிகள், தக்காளி உடல்....''**

---

மன்னார்சாமியின் முகம் மலர்ந்தது. ''தாராளமாகச் செய் ஆறுமுகம். உன்னை நான் நம்பறேன். ஆனா... உனக்கு அங்கே ஏதேனும் ஆபத்து நேர்ந்திருச்சின்னா நான் பொறுப்பில்லே'' என்றான்.

''நீதான் பொறுப்பின்னு யாருடா சொன்னாங்க இப்போ?.....அப்படியே பெரியண்ணன் ஆவி அங்கே சுத்திக்கிட்டிருந்தாக் கூட என்னை ஒண்ணும் செய்யாது அது. அவனைக் கொன்னவன் நீதானே? நான் இல்லியே?''

நடு நிசியைத் தாண்டிய நேரம். சேலம் டவுனின் இருண்ட சந்து பொந்துகளில் நுழைந்து வேகமாக நடந்து கொண்டிருந்தான் ஆஜானுபாகுவான ஒரு மனிதன். அவன் தலைமீது ஒரு பெரிய கனமான 'டிரங்க்' பெட்டி; அவனது உள்ளத்திலோ அளவிட முடியாத ஆனந்தம்.

அந்த மனிதன் நம் ஆறுமுகமேதான் என்று சொல்லத் தேவையில்லை.

''அப்பனே! மதுரை வீர சுவாமி! எல்லாம் நல்லபடியா நடந்தா உனக்குப் பொங்கல் வைக்கிறேன்'' என்று வேண்டிக் கடவுளைக் கைக்குள் போட்டுக் கொண்டு மண்வெட்டியுடன் பாழுங் கிணற்றில் இறங்கியிருந்தான் அவன். மெழுகுவத்தியின் வெளிச்சத்தில் வெட்டினான். பெரியண்ணனின் ஆவி மட்டுமல்ல, ஒரு பாம்பு, தேள் கூட அங்கு தலை காட்டவில்லை. அரை மணி நேரத்துக்குள் பணப் பெட்டியுடன் மேலே ஏறி விட்டான். 'சென்றேன், கண்டேன், வென்றேன்' என்று வேலை முடிந்தது. தலையில் பளுவுடன் சேலத்தை நோக்கித் திரும்பி இரண்டு மைல் நடந்த சிரமமே தோன்றவில்லை. எப்படித் தோன்றும்? பெட்டியினுள் இருப்பது சாதாரணச் சுமையா?

எதிர்ப்பட்ட இரண்டொரு குதிரை வண்டிக்காரர்களின் பரிவான அழைப்பை அவன் ஏற்கவில்லை. சிறையிலிருந்து அன்றுதான் விடுதலையாகி வரும் ஆறுமுகம் பெட்டியுடன் வண்டியில் வந்து இறங்கினான் என்றால் கேட்பதற்கே சங்கடமாக இருக்கிறதல்லவா?

நகரத்தின் கிழக்கு எல்லையைத் தாண்டியாகி விட்டது. ஜன சஞ்சாரமற்ற சிறு சாலையில் மேலும் மூன்று கல் தொலைவு




நடந்தால் அவனது கிராமத்தை அடையலாம். சற்றுக் காலாற ஒரு கல்லின்மீது உட்கார்ந்தான், ஆறுமுகம். அப்போதுதான் அந்தக் காட்சி அவன் கண்களுக்குப் புலனாயிற்று.

எதிரே விஸ்தாரமான தோட்டத்தின் நடுவே ஒரு பெரிய பங்களா. அதன் வெளி மதிற் சுவரின்மீது பதிக்கப்பட்ட கண்ணாடித் துண்டுகள் கைகளில் குத்தாதவாறு சர்வ ஜாக்கிரதையுடன் ஏறும் ஓர் உருவம். ஆறுமுகம் எழுந்திருக்கு முன் தோட்டத்தினுள் குதித்து விட்டது அது.

பாம்பின் கால் பாம்பறியாதா? அவனும் ஒரு திருடன்தான் என்று ஆறுமுகத்துக்கு நிச்சயமாகப் பட்டு விட்டது. 'திருந்தி நல்ல வழியில் செல்லத் தீர்மானித்திருக்கும் நான் என் கண் முன்னே நிகழப் போகும் இந்தக் குற்றத்தை அனுமதிக்கலாமா?' என்றொரு போராட்டம் அவன் உள்ளத்தில் நடந்தது.

அதில் வென்றது ஆறுமுகத்தின் மனச்சாட்சிதான்!

''டேய் பயலே!'' என்று தணிந்த குரலில் அவன் போட்ட அதட்டல் நள்ளிரவின் நிசப்தத்தை ஊடுருவியது. இரும்புத் தண்ணீர்க் குழாயைப் பற்றிக் கொண்டு மாடிக்குப் பாதி ஏறியிருந்த திருடனின் உருவம் அசைவற்றுக் காணப்பட்டது.

''இறங்குடா, கீழே.''

திருடன் இறங்கினான். மந்திரத்தால் கட்டுண்டவன் போல் ''வா இப்படி'' என்ற ஆக்ஞைக்கும் கீழ்ப்படிந்தான். மதிற் சுவருக்கு அப்பால் நின்றபடியே தன் நடவடிக்கைகளைக் கவனித்து அதிகாரமாக அழைப்பது ஒரு போலீஸ்காரராகத்தான் இருக்க வேண்டும் என்பது திருடனின் யூகம்.

சென்ற வழியே திரும்பிச் சுவரேறிக் குதித்து நடுக்கத்துடன் தன் எதிரே நிற்கும் உருவத்தைப் பார்த்தான் ஆறுமுகம்.

''இத்தினி சின்ன வயசிலேயே உனக்கு ஏண்டா இந்தப் புத்தி?'' என்று கேட்டான். இருளில் முகம் நன்றாகத் தெரியாவிட்டாலும் பையனின் வயது பதினெட்டுக்குள்தான் இருக்குமென அவனால் அனுமானிக்க முடிந்தது.

''...என்னை விட்டுடுங்க சாமி. வவுத்துக் கொடுமையாலேதான் இப்பிடி....'' அழுதே விடுவான் போலப் பையனின் குரலில் ஒரு கரகரப்பு, தடுமாற்றம் ஏற்பட்டது.

''வவுத்துக் கொடுமையின்னு உடனே திருடக் கிளம்பிடறதா? மூட்டை தூக்கியோ மண்வெட்டியோ பிழைக்கக்கூடாதா? போனாப் போவுதுன்னு உன்னைப் போலீசிலே ஒப்படைக்காம விடறேன். இந்தா, இந்தப் பெட்டியைத் தூக்கியாந்து என் வீட்டிலே வைச்சுட்டு நான் கொடுக்கிற காசை வாங்கிப் போ!''

''செய்யறேனுங்க, சாமி!''

கனமான அந்த 'டிரங்க்' பெட்டி பையன் தலை மீதேறியது. 'ஒரு நல்ல காரியம் செய்தோம்; நமது சிரமத்தையும் சற்றுக் குறைத்துக் கொண்டோம்' என்ற பூரண மனத்திருப்தியுடன் பையனைப் பின்தொடர்ந்து ஆறுமுகம் கம்பீரமாக நடந்தான்.

மேலும் ஒரு மைல் தொலைவு கடந்தது. வழியில் அவர்கள் இருவரும் எதுவுமே பேசிக்கொள்ளவில்லை. ஆயிரமாயிரம் மனக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்த ஆறுமுகத்துக்குப் பேச நேரம் ஏது?

திடீரெனச் சூறுவளி போல் சுழன்றடித்த காற்று அவனது கண்களில் மண்ணை அள்ளித் தூவிவிட்டுச் சென்றது. சாலையில் நின்று கண்களைக் கசக்கினான் அவன். ஒரே ஒரு நிமிட காலம்தான். தூசு விலகிக் கண்கள் மீண்டும் திறந்தபோது....

பையன் அங்கு காணப்படவில்லை!

ஆறுமுகம் திடுக்கிட்டான்; தவித்தான்; தடுமாறினான். ''காத்து என் கண்ணிலே மட்டும்தான் மண்ணைப் போட்டுது. நீ என் தலையிலேயே அள்ளிப் போட்டுப்புட்டியேடா, பாவி மகனே!'' என்று ஓலமிட்டான்.

ஆயினும் பலன் என்ன? பையனும் பெட்டியும் மறைந்தது மறைந்ததுதான். இந்த இருளில் அவனை எங்கென்று தேடுவது?

மன்னார் இதைச் சொன்னால் நம்புவானா? அல்லது ஆவி வந்து விரட்டிற்று என்றுதான் அவனிடம் சொல்ல வேண்டுமா?

கண்ணிலான் பெற்றிழந்த கதையாகப் பொக்கிஷத்தைப் பறி கொடுத்துவிட்டு நடுச் சாலையில் நின்ற ஆறுமுகத்துக்கு யாரையாவது கட்டிக் கொண்டு ஒரு குரல் அழ வேண்டும் போலிருந்தது. அதற்காகவாகிலும் வீடு செல்ல வேண்டியதுதான்!

தூக்கத்துக்கும் பசிக்கும் என்ன நெருங்கிய தொடர்போ தெரியவில்லை; மனைவி வள்ளியம்மா அந்த நடுநிசி வேளையில் படைத்த பழைய சோற்றையும் கீரைக் குழம்பையும் ஆவலோடு பரபரக்க உண்டான் ஆறுமுகம். உடலில் தெம்பு ஊறியதோடு மனத்திலும் சிறிது தெளிவு பிறந்தது. 'கொள்ளைக்காரன் சொத்துத்தானே? போகட்டும். கறை படிந்த அந்தப் பணம் கைக்கெட்டி வாய்க்கெட்டாமல் போனதே ஒருவிதத்தில் நல்லதுதான்' என்ற ரீதியில்கூடச் சிந்தனை ஓடலாயிற்று.

திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவன் மனைவியைக் கேட்டான்: ''சேலத்துக்கா போயிருக்கான் பொன்னம்பலம்? இரண்டாவது ஆட்டம் எப்போதோ முடிஞ்சிருக்குமே. ஏன் இன்னும் திரும்பலை இந்தப் பய?''

வள்ளியின் முகம் சற்று வாடியது. சற்றுத் தயங்கியபின் அவள் சொன்னாள்: ''இதோ பாருங்க, மச்சான். உங்ககிட்டே நெசத்தைச் சொல்லவே நெஞ்சு கசக்குது. அதுதான் சொல்ல வேண்டாமின்னு பார்த்தேன்.....''

''பரவாயில்லே, சொல்லு வள்ளி. என் மகன் விசயத்தை நானும் தெரிஞ்சுக்கிடனுமில்லே? என்ன செஞ்சான் அவன்?''

''அப்பன் தொழிலைத் தானும் செய்ய ஆரம்பிச்சுட்டான். வேறென்ன வேணும்?''

''என்ன?'' என்று அதிர்ந்து போனான் ஆறுமுகம்.

''ஆமாம். இந்த அஞ்சு வருசமா நீ ஜெயிலிலே இருக்கிறப்போ இவனும் திருடிப் பிடிபட்டு ரெண்டு வாட்டி கம்பி எண்ணிப்பிட்டு வந்திருக்கான். அப்பிடியும் இவனுக்குப் புத்தி வந்தபாடில்லே. இன்னமும் ராத்திரி வேளைக்கு வீடு திரும்பறதில்லே....''

''அட, வயிற்றெரிச்சலே! திருடுவது தவறு என்ற ஞானோதயம் நமக்கு ஏற்பட்ட சமயத்தில்தானா இப்படி.....!'' என்று ஆறுமுகம் கலங்கினான். கலங்கும் அந்த இதயத்தின் மூலையில் திடீரென ஓர் ஐயம் தோன்றியது.

ஒருகால் அப்படியும் இருக்குமோ?

வாயிற்கதவை யாரோ மெல்லத் தட்டும் ஓசை. வள்ளி காடா விளக்கை எடுத்து வந்தாள், ''அந்தப் பயதான் போலிருக்கு.....'' என்று முணுமுணுத்தவாறே. ஆறுமுகம் முன்னே நடந்து கதவைத் திறந்தான். அவனது சந்தேகம் நியாயமானதுதான் என நிரூபிப்பதுபோலத் தலை மீது பளுவான, பெரிய பெட்டியுடன் வெளியே நின்றான் ஓர் இளைஞன். அந்தப் பெட்டி, அதைச் சுமந்து நிற்கும் இளைஞன் இரண்டையுமே அவனால் அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது.

தானே விட்டுவிட நினைத்த ஒரு தொழிலுக்கு ஒரு வாரிசும் ஏற்பட்டிருப்பதைக் கண்டபோது அழுவதா சிரிப்பதா என்றே ஆறுமுகத்துக்குப் புரியவில்லை!




# மழைக் காலக் குறிப்புகள்

1. குடை துருப் பிடிக்காதிருக்க, குடைக் கம்பிகளின்மீது இலேசாகக் 'கிரீஸ்' தடவி வையுங்கள். 2. உங்களுடைய 'பூட்ஸ்'கள் மழையில் நனைந்துவிட்டால், 'பூட்ஸ்'களைக் குப்பைக் காகிதத்தால் நிரப்பி விடுங்கள். இந்தக் காகிதங்கள் ஈரத்தை இழுத்துக் கொள்ளும். இப்படி இன்றி, நெருப்புக் குட்டில் காண்பித்தால், 'பூட்ஸ்'களின் தோல் நாசமாகி விடும். 3. உங்களுடைய 'கான்வாஸ்' காலணி அழுக்காகி விட்டால் சோப்புத் தண்ணீரால் கழுவுங்கள். 4. 'பூட்ஸ்' பாலிஷ் உலர்ந்து விட்டால் கொஞ்சம் [illegible] — வெனிகர் கலவையை அல்லது சிறிது பெட்ரோலைப் பாலிஷில் சேர்க்கவும். 5. மேஜை நாற்காலிகளில் உள்ள கறைகளைப் போக்க, கறை உள்ள இடத்தைக் கொஞ்சம் 'ஸ்பிரிட்' கொண்டு துடைக்கவும். 6. மழைக் காலத்தில் மரச் சாமான்களுக்கு வார்னிஷ் அடிக்கக் கூடாது. ஏனெனில் ஈரப் பசை காரணமாக மரம் வழுக்கும்.

தகவல்: வி. சம்பத்குமார்

ஆதாரம்: ''சல்வ் வீக்லி''

# லாமினேட்டட் பிளாஸ்டிக்' – அப்படியென்றால்...?

பல நவீன ஹோட்டல்களில் சாப்பாட்டு மேஜையின் மேல் பகுதி வண்ணச் சித்திர வேலைப்பாடுகளுடன் வழவழப்பாக அமைந்திருப்பதைக் காணலாம். லாமினேட்டட் பிளாஸ்டிக் என்று இதனைச்சொல்கிறார்கள். இவற்றின் உபயோகம் சமீப காலத்தில் அதிகரித்துக் கொண்டே வருகிறது. மேஜைகள் மீது பொருத்துவதற்கு மட்டுமின்றி, நவீன நாகரிகத்திலே லாமினேட்டட் பிளாஸ்டிக் வண்ண 'ஷீட்டு'கள் சோபாக்களிலும் நாற்காலிகளிலும் கட்டில்களிலும் அலமாரிகளிலும், ஏன், சுவர்களிலும்கூடப் பயனாகி அழகூட்டுகின்றன. இப்படி இதன் உபயோகம் அதிகரித்துக் கொண்டே போவதற்குக் காரணம், உஷ்ணத்தினாலோ, வெப்பத்தினாலோ, ஈரத்தினாலோ அது பாதிக்கப்படாது, புது மெருகு குன்றாது பளபளப்புடன் இருப்பதுதான். 150 டிகிரி வரை உஷ்ணம் தாங்கும் சக்தி இதற்கு உண்டு. சூடான காப்பி டம்ளரையோ அல்லது எரிந்து கொண்டிருக்கும் சிகரெட்டையோ இதன்மீது வைத்தாலும்கூட இது [illegible] பாழாவதில்லை. அத்துடன் பலவித டிசைன்களில் கிடைப்பதால் ஹோட்டல்கள், வைத்திய சாலைகள், கப்பல்கள், பல் வாகனங்களில், காரியாலயங்கள் ஆகியவை அழகுறுத்தவைப் பயன்படுத்துகின்றன. இவ்வளவுக்கும் பார்க்கப்போனால் இந்த லாமினேட்டட் பிளாஸ்டிக் என்பது முக்காலே மூணு வீசம் வெறும் காகிதம்

007

''1952-ல் திருமணம் செய்து கொள்ளவே பயப்பட்டேன். அந்தப் பயத்தைப் போக்கிக்கொள்ள ஒரு கதாபாத்திரத்தை சிருஷ்டித்தேன். அவன்தான் ஜேம்ஸ் பாண்ட்'' என்று '007' பாத்திரத்தைப் படைத்த அயான்பிளமிங் சொல்லி இருக்கிறார்.

— கே. ராஜாமணி ''டெல்லி மிர்ர''

பளிச்சைப் பக்கீ ஓ

நான். ரசாயன முறையில் 'ரேயின்'களின் ஊடுருவலால் இக்காகித அடுக்கு அசாதாரண உறுதி பெற்றுவிடுகிறது. ஆயினும் வளைந்து கொடுக்கும் தன்மையை இது இழப்பதில்லை. இதன்மீது வண்ணச் சித்திரங்கள் அச்சடிக்கப்பட்ட காகிதமும் அதற்குமேல் செலபோன் காகிதமும் பொருத்தப்படுகின்றன. இவையும் 'ரேயின்'களின் சேர்க்கையில் ரசாயன முறையில் உறுதியாக்கப்பட்டவையே. பின்னர் இது எவர்சில்வர் தகடுகளுக்கிடையில் அதிக அழுத்தத்துக்கும் உஷ்ணத்துக்கும் உட்படுத்தப்படுகிறது. நிறம் வெளிறாதிருக்கவும் உஷ்ணத்தால் பாதிக்கப்படாமல் இருக்கவும் கறை படியாதிருக்கவும் விசேஷத் தன்மையினைப் பெறுகிறது. 'ஃபார்மைகா' ஸ்தாபனத்தில் லாமினேட்ட பிளாஸ்டிக் தயாராகும் விதத்தை விளக்கும் ஒரு திரைப்படத்தை, அண்மையில் அந்த ஸ்தாபனத்தினர் காண்பித்தார்கள். ராட்சத இயந்திரங்களிலே அது தயாராகி அடுக்குக்காக வந்து விழுவது பார்ப்போரைத் திகைக்க வைத்தது.

புதிதாகத் திருமணமான தம்பதி காரில் உல்லாசமாக வெளிக் கிளம்பினார்கள். மனைவியின் தோள்மீது ஒரு கையும் 'ஸ்டீரிங்'கில் ஒரு கையுமாகக் கார் ஓட்டிக்கொண்டு வருவதைப் பார்த்த கான்ஸ்டபிள் காரை நிறுத்தி, ''ஐயா! கார் ஓட்டும்பொழுது இரு கைகளையும் பயன்படுத்துங்கள்!'' என்றார். ''அது சரி! இரண்டு கையையும் பயன்படுத்தினால் ''ஸ்டீரிங்''கை யார் பிடிப்பது?'' என்று கேட்டார், புது மாப்பிள்ளை!

— ஓ. க. தியாகராஜன்

ஒரு கையே போதுமே..



சியாமளாவிடம் எனக்கு இருந்த கோபம் இன்னும் ஆறவில்லை. காகித அடுக்கில் பட்ட தீயாகக் கனன்று கொண்டிருந்தது: கடந்த இருபத்து நான்கு மணி நேரமாக. பஞ்சில் பட்ட தீயை விட ஆழமாகப் புகைந்தது.

"பேசாமல் வேலை தேடுவதை விட்டு விட்டு வரன் தேடி விடலாம்" என்று ஒரு கணம் தோன்றியது. "வரனா?" என்று பேய்ச் சிரிப்புச் சிரித்தது மனம். ஒன்றுமற்ற சூனிய வெளியை உழக்கால் அளந்துவிடுவது போன்ற என் சிந்தனை எனக்கே வெட்கத்தை அளித்தது. செப்பாலடித்த காசு கையில் இல்லாமல் சியாமளாவுக்குக் கலியாணம் செய்ய முடியுமா? சியாமளா! வேலை தேடியதற்கும், வரன் தேடப் போவதற்கும் மூல காரண பூதம் அவள்தானே? பூதம்... இல்லை பிசாசு! என் வயிற்றில் இப்படி ஒரு பெண் வந்து பிறந்திருக்கிறாளே! ஹ்ம்! பெருமூச்சு விடுவதைத் தவிர என்னால் ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. ஈஸிசேரில் சாய்ந்து கொண்டு சிந்தனைச் சுருள்களைப் பெருமூச்சுக்களாக மாற்றிக் கொண்டிருந்தேன்.

யாரோ அருகில் நடமாடும் உணர்ச்சி வரவும் கண் திறந்தேன். சியாமளாதான் காப்பி கொண்டு வந்திருந்தாள். "அப்பா!" என்று அழைத்துவிடும் நிலையில் அவள் இருந்ததைக் கண்டு, 'வெடுக்'கென்று காப்பியை வாங்கி, 'மடக் மடக்' என்று குடித்துக் காலி டம்ளரை 'ணங்க்' என்று வைத்தேன். என்னுடைய இந்தக் கோப நாடகம் என்வாரிசுக்குப் புரியாமல் இருக்குமா? பேச வந்தவள் மௌனமாகத் திரும்பி நடந்தாள்.

அவள் நடந்து செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். காக்கைக்கும் தன் குஞ்சு என்பதையும் தவிர, சியாமளா அவளுடைய தாயாரைக் கொண்டு உண்மையிலேயே அழகாகத் தோன்றினாள். இருபது வயது என்பது தானே பருவம் பரிமளித்துப் பிரகாசிக்கும் நிலை. நீண்ட கேசம்... உயர்ந்த உடல்... காலா காலத்தில் கல்யாணம் செய்துகொடுக்க

# பாரதப்பெண் தான்...!




முடியாதபடி வேலைக்கு அனுப்ப வேண்டியிருக்கிறதே என்ற தந்தைமை உள்ளே இருந்து குமுறியது.

அப்படியும் வேலைக்கு அனுப்ப முடியாது போயிருக்கிறதே! இன்றையத் தலையெடுப்பு யுகத்தில், பிஞ்சில் பழுத்த வெம்பல் காலத்தில், தன்னந் தனியாக பஸ்ஸிலும் ரயிலிலும் பயணப்பட்டுப் போய் வேலை செய்து சம்பாதிக்கத்தானா வேண்டும்? வெளி உலகத்தில் படுகாலிக் கண்களின் பார்வையை, வேட்டை, விரட்டலை அவளால் சமாளிக்க முடியுமா?

முடியாது என்பதுதான் நேற்று தெரிந்து போய்விட்டதே! காலியின் சேஷ்டைகளுக்குத் தூபம் போட்டுக் கொண்டு வந்தவளால் ....என் மனம் பயங்கரமாகக் குலுங்கிற்று. உடல் நடுங்கியது. இந்த எருக்கம் விதையைக் காலித்தனம் என்ற காற்றில் பறக்கவிட்டுப் பதம் பார்ப்பதா? 'கூடாது! கூடாது!' என்று நானே சொல்லிக் கொண்டேன்.

நேற்று விழுப்புரத்துக்குச் சியாமளாவுடன் சென்று பொரிக பெற்றுத் திரும்பினேன். விழுப்புரத்திலிருந்து ரயில் வண்டி ஊதிவிட்டுப் புறப்பட்டது. அத்தனை கும்பலிலும் தேடித் திண்டாடிச் சியாமளாவை ஒரு ஜன்னலுக்கு அருகான சீட்டில் உட்கார வைத்து விட்டுப் பாதுகாப்பாகப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். எதிர் ஜன்னலுக்குப் பக்கத்து சீட்டு ஒரு பெட்டிக்கு உரியதாயிருந்தது. பெட்டிக்கு உரியவன் வண்டி ஓட்டமெடுத்த பின்னர் எல்லாரையும் தள்ளிக் கொண்டு சீட்டில் வந்து விழுந்தான். பேய் போன்ற புகைத் திரளை வண்டி முழுவதுமாக ஊதிப் பரப்பினான் அவன். உட்காரும் போதே அவன் கழுகுக் கண்கள் வண்டி முழுதும் ஊடுருவின. ஆமாம்! அந்தக் 'கம்பார்ட்மெண்ட்' முழுதும் ஆண்கள். பாலைவனச் சோலைபோல சியாமளா அந்தக் கண்களுக்குத் தட்டுப்பட்டிருக்க வேண்டும். உடனே தன் குஷாலான சீட்டி. கண்களில் ஒரு நொடிப்பு. ஓர் ஒளி. ஒரு துள்ளல்.

உலகத்து அழகிகள் எல்லாம் தனக்காகவே பிறந்து விட்டார்கள் என்ற காலித்தனம். அப்பப்பா! அந்தக் கால் நூற்றாண்டு காளை பிஞ்சு வெம்பி வதங்கிவிட்டது. என்ன சேஷ்டை, என்ன கோமாளித்தனம்! சியாமளாவைத் திரும்பிப் பார்த்தேன். அவள் தன் பாட்டில் தான் படித்துக் கொண்டிருந்த நாவலுள் மூழ்கிக் கிடந்தாள். எதிரொலி இல்லாத இடத்தில் இந்தப் பையன் வீணாக முட்டிக் கொள்கிறான் பாவம்! 'என் பெண் பாரதப் பெண்!' என்று பூரித்தேன்.

அந்தப் பையனுக்கு இன்னொரு நண்பன் போலிருக்கிறது. பர்த்தில் படுத்தபடியே கீழே பார்த்துக் கொண்டிருந்தான். நான் பார்க்கும்போது மட்டும் கண்களை மூடிப் பாசாங்கு செய்து கொண்டிருந்தான். வண்டி ஓடிக் கொண்டிருந்தது.

எதிர்த்து எடுத்துக் கொண்டு சண்டை பிடிக்க முடியாதபடி கிலேடைப் பேச்சுக்கள் ஆரம்பமாயின.

''வண்டி என்னடா 'டல்'லடிக்குது!''— மேல் பர்த்காரன்.

''வண்டிக்கு என்னடா, ஜிலுஜிலுன்னு...'' கண் சிமிட்டிவிட்டு, சியாமளாவைப் பார்த்தான். நான் பார்ப்பதைக் கண்டு பார்வையை வேறுமுகப்படுத்தினான்.

''பேசக்கூட ஆள் இல்லேடா. நீயும் கொரங்கு மாதிரி மேலே...''

''ஏய்! யாருடா கொரங்கு?... உன் மூஞ்சியைப் பார்த்துப் பயந்துக்கிட்டுத்தான்....''

''ஓஹோ! என் மூஞ்சிக்கு என்னடா? காலேஜ் வாசல்லே நின்னு மைக் கண்களா வந்து மொய்க்கும்டா!''

''ஆமாம்! தேன் அடை! இப்ப ஏன் ஒரு வண்டுகூட சீண்ட மாட்டேங்குது?'' அதைத் தொடர்ந்து ஏதோ ஹாஸ்யம் பேசிவிட்டதாகச் சிரிப்பு.



''எத்தையாவது படிடா, அவங்களாட்டம்!'' மேல் பர்த் பையன் நேரடியாகவே வம்புக்கு இழுத்தான். நான் என்ன செய்வது? உடல் பதற உட்கார்ந்து கொண்டிருந்தேன். திரும்பிச் சியாமளாவைப் பார்த்தேன். அவள் நாவலிலிருந்து ஒரு தீப்பொறிப் பார்வையை விசிறிவிட்டுப் படிக்க ஆரம்பித்தாள்.

''டேய்! ஜாக்கிரதை! உஷ்ணம் ஜாஸ்தியா இருக்குது!''

''அப்படித்தான்டா இருக்கும். கும்பல் ஜாஸ்தியல்ல...''

''பேசாமத் தூங்குடா. உனக்குந்தான் எடம் இருக்குது.''

''தூக்கம் வரமாட்டேங்குதுடா?''

''ஏதாவது படிக்கலாம்னு ஒண்ணும் புஸ்தகம் கொண்டாரல்லே.''

''யாருகிட்டேயாச்சும் இருந்தாலும் கேட்கலாம்...''

''அவுங்க அவுங்களுக்கு ஒரு புத்தகம்தான் கொண்டு வந்திருப்பாங்க. உனக்குக் கொடுக்க வேறே கொண்டு வந்திருப்பாங்களா?''

''கேட்டுப் பார்க்கலாம்...''

''கேளேன்....''

இந்தச் சம்பாஷணையைத் தொடர்ந்து, சியாமளா புத்தகத்தை மூடி வைத்தாள்.

''ஏன், படிக்கப் புத்தகமா வேணும்?'' என்று நேரிடையாகவே அந்தக் காலிப் பையனைக் கேட்டாள். என் உடல் பதறியது. என் பெண்ணா? இவள் பாரதப் பெண்ணா? காலித்தனமாகப் பேசி வம்புக்கு இழுத்துப் பேச வைக்கும் அந்தப் பையன்களின் முயற்சிக்குத் தூபம் போடுவது போல...நான் கத்தியிருப்பேன். கத்தினால் வண்டியில் இருப்பவர்கள் என்னை மட்டமாக எண்ணி விடுவார்களே! பதறிக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

''ஆமாம், மாடம். படிக்க நல்ல 'லவ்வி' நாவல் இருந்தா....''

''என் கிட்டே உள்ளதுதான் நான் தர முடியும். பிடிக்குதா, படிச்சுப் பாருங்க...'' என்று சொல்லியபடியே சியாமளா தன் தோல் பையைக் குடைந்து ஒரு பழைய புத்தகத்தை எடுத்துப் பக்கம் பார்த்துக் கொடுத்தாள். என்னால் தாங்க முடியவில்லை.

விடியற்காலம் வண்டியை விட்டு இறங்கி, பஸ் பிடித்து மயிலாப்பூர் வந்து குளித்து முழுகிச் சாப்பிட்டு, ஆபீஸ் போய் வந்து இத்தனை ஆகியும் இன்னும் கோபம் தீரவில்லை. கவலை மாறவில்லை. சியாமளாவை இதுபற்றி என்ன சொல்லி எப்படிக் கேட்பது என்று எனக்குத் தலைப்புக் கிடைக்கவில்லை. கண்களை மூடிப் படுத்திருந்தேன். இத்தனை நேரமும் நான் சியாமளாவுடன் பேசவில்லை.

* * *

''அப்பா!....'' என்ற குரல் கேட்டுக் கண்களைத் திறந்தேன். சியாமளாதான் எதிரில் நின்றிருந்தாள்—எதற்கும் துணிந்த முக பாவத்துடன்.

''ஏன்?'' என்பது போலப் பார்த்தேன்.

''உங்கள் கோபம் புரிகிறது. ஆனால் நீங்கள்தான் உங்கள் பெண்ணை...''

''புரிந்து கொண்டிருக்கிறேன்...'' என்றேன் உஷ்ணமாக.

''எப்படி...? காலித்தனத்தின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் தூபம் போடும் ஒரு கோழையாக அல்லவா?'' என்றாள்.

''பின்னே என்னவாம்... அந்தப் பையன் உன்னைக் குறி வைத்து உன்னுடன் பேச வேண்டும் என்று இல்லாத கோணங்கித்தனமெல்லாம் செய்தான். நீயானால்...''

''வலுவில் பேசிப் புத்தகம் கொடுத்தேன். அதுதானே?''

''பின்னே அந்தக் காலிகளுக்கு வேறு என்ன வேண்டும்... அது போதாதா?''

''அது சரி! அதற்குப் பின்னர் அவர்கள் காலித்தனம் தொடர்ந்ததா? இல்லை, பேசத்தான் செய்தானா?''

''யார் கண்டது? நீதான் அவனின் போக்குக்கு வளைந்து...''

''அப்பா...'' என்று சீறினாள் சியாமளா. ''உங்கள் பெண்ணைப் புரிந்துகொள்ள முடியாமல், வெறும் கோபத்தின் பதற்றத்தில் கண்டதை மறைக்காதீர்கள். புத்தகம் பெற்றுப் படித்த பின்னர் பேச்சு இருந்ததா?''

''இல்லை. தூங்குவது போல் பாவனை செய்து தூங்கியே விட்டான்.''

''இப்போது புரிகிறதா? தூங்க வைக்கத்தான் புத்தகம் கொடுத்தேன்.''

''என்ன! அதில் தூக்க மருந்து தடவியிருந்தாயா?''

''தூக்க மருந்தாவது மண்ணாங்கட்டியாவது? இது போன்ற காலிப் பயல்களுக்குச் சாட்டையடி இருந்தது அதில்.''

''அப்படியா? அது என்ன சாட்டை?'' என்றேன்.

சியாமளா அதே புத்தகத்தின் ஒரு பக்கத்தைக் காட்டினாள். அதில் பல பகுதிகளில் சிவப்பு மையினால் கோடிட்டுக் காட்டியிருந்தது. ''படியுங்கள் அப்பா!'' என்றாள் சியாமளா. படித்தேன்.

> காலிகளே! உங்களுக்கும் தாய், தங்கை சகோதரிகள் உண்டு. அவர்களும் என்னைப் போன்ற பெண்கள்தான். உலகத்தில் உள்ள பெண்கள் எல்லாருமே உங்களுக்கு உடன் எடுத்து உபயோகிக்கும் சோப்புக் கட்டிகளாக இருந்து விடமாட்டார்கள். காளியும் ஒரு பெண்தான். பிடாரியும் ஒரு பெண்தான். ஜாக்கிரதை...
>
> வால் ஆட்டுவது நறுக்கப்பட்டுவிடும். தாய், தங்கை பேதம் தெரியாத குரங்குகளே, வாயை மூடுங்கள். இந்த இடத்தில் உங்கள் தங்கை இருந்து என் அண்ணன் இப்படி நடந்து கொண்டால்... சிந்தித்துப் பாரடா மூடா!....

சிவப்புக் கோடு தொடர்ந்து போய்க் கொண்டிருந்தது. அட! என் பெண் சியாமளா இத்தனை நிபுணியா? காதல் தூதுதான் புத்தகத்தில் போகும் என்பார்கள். காலித்தனத்துக்குச் சாட்டையும் புத்தகத்தில் இருக்கிறதா என்று எண்ணி வியந்தேன். ''இப்போது என்ன சொல்கிறீர்கள்?'' என்பது போலப் பார்த்தாள் சியாமளா.

அப்பா! என் பெண் எத்தனை உயர்ந்து விட்டாள்! அவள் பாரதப் பெண்தான்!

## டிரான்ஸிஸ்டர் தவணைகளில் கிடைக்கும்




டீலர் லைசன்ஸ் நெ. WD / DL 120/67
சென்ட்ரல் எக்சைஸ் லைசன்ஸ் நெ. 109 - DD/WR
லெட்ஸ்/67

ரூ. 225/- மதிப்புள்ள உலகப் புகழ்பெற்ற "எஸ்கார்ட்" 3 பாண்டு, கையில் எடுத்துச் செல்லக்கூடிய டிரான்ஸிஸ்டர் மாதம் ரூ. 25 வீதம் செலுத்திப் பெறலாம்

3750, கஸ்ஸி ஹாக்கிம் பாக்லா, டெல்லி-6ல் உள்ள எமது காட்சி சாலைக்கு விஜயம் செய்து ரேடியோ எப்படி இயங்குகிறது என்பதைக் கண்டு களியுங்கள்

இராணுவ ஜவான்களுக்கும், அதிகாரிகளுக்கும் விசேஷ சலுகைகள் உண்டு

கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்:

**JAPAN AGENCIES (KU 77)**
**P. O. Box : 1194 — DELHI-6**

# ஹெடன்ஸா




# மூல நோய்க்கு

## எங்கும் கிடைக்கும்






மீன் விழியோ!
மான் விழியோ
**ஐடெக்ஸ்**
**கண் மை**
விழியோ!

**அரவிந்த் லாபரட்டரீஸ்**
தபால் பெட்டி 1415.. மதராஸ்-17.




தொகுத்தவர்:
கு. அழகிரிசாமி

(பெங் சுயே பெங் என்ற சீன ஆசிரியர் 1903ல் சிக்கியாங் மாகாணத்தில் பிறந்தவர். பல ஆண்டுகளாகப் பள்ளி ஆசிரியராக வேலை பார்த்தவர். பின்பு இலக்கிய சஞ்சிகை ஒன்றின் ஆசிரியராகப் பணியாற்றினார். அவருடைய இலக்கியப் படைப்புக்களில் முக்கியமானவை அவர் எழுதிய குட்டிக் கதைகளே.)

## பூனையும் பானையும்

ஒரு வீட்டின் சமையற் கூடத்தில் இரண்டு பானைகள் இருந்தன. முதல் பானையில் மூடியே' இல்லை. பக்கத்திலிருந்த ஜன்னலில் ஏறி அந்தப் பானையைப் பூனை எட்டிப் பார்த்தது. அது காலிப் பானையாக இருக்கவே, ''நான் இதை எட்டிப் பார்த்திருக்க வேண்டியதில்லை. மூடியில்லாத பானையில் என்ன இருக்கும்?' என்று சொல்லிக் கொண்டே இரண்டாவது பானையைத் திரும்பிப் பார்த்தது பூனை. அதற்கு மூடி இருந்தது. 'இதனுள் நிச்சயமாக ஏதாவது இருக்கும்' என்று ஆவலோடு மூடியைத் தள்ளிவிட்டுப் பானையினுள் பூனை எட்டிப் பார்த்தது. அதுவும் காலிப் பானையாகவே இருந்தது.



ஏமாற்றத்துக்கு உள்ளான பூனை பின் வருமாறு கூறியது: ''இரண்டுமே காலியாக இருக்கின்றன. இந்தப் பானைகளைப் போல் தான் மனிதர்களும் இருக்கிறார்கள். சிலர் தங்கள் உள்ளத்தில் எதுவுமே இல்லையென்றால் அதை வெளிப்படையாகச் சொல்லி விடுகிறார்கள். மற்றவர்கள் தங்கள் உள்ளத்தில் ஏதோ ஒரு பெரிய விஷயத்தை அடக்கிக் கொண்டிருப்பதுபோல் ஆழ்ந்த பார்வை பார்த்துக் கொண்டு பாவனை செய்கிறார்கள். அவர்கள் மனத்தில் உள்ள அரிய விஷயம் என்ன என்று எல்லோரையும் ஆவலோடு ஆராய்ச்சி பண்ணும்படியும் செய்துவிடுகிறார்கள். ஆனால் உண்மை என்னவென்றால் அவர்களிடமும் அரிய விஷயம் எதுவும் கிடையாது.''

## மூவரின் சாமர்த்தியம்!

மூன்று பேர் தள்ளு வண்டிகளில் மண் பானைகளை ஏற்றிக் கொண்டு மலைப் பாதையில் போய்க் கொண்டிருந்தார்கள். செங்குத்தான ஒரு மலை குறுக்கிட்டது. அதைக் கடப்பதற்குச் சிரமப்பட்டு வண்டிகளைத் தள்ளிச் சென்றபோது ஒருவனுடைய வண்டி குடைசாய்ந்து உருண்டுவிடவே, அத்தனை பானைகளும் உடைந்து நொறுங்கிவிட்டன.



இரண்டாமவன் மேலும் சிறிது உயரத்துக்கு — பாதி தூரம் வரை — வண்டியைத் தள்ளிக் கொண்டு போய்விட்டான் என்றாலும் அவனுடைய வண்டியும் ஒரு பாறையில் மோதி, அதிலிருந்த பானைகளும் உடைந்து நொறுங்கிவிட்டன.

மூன்றாமவன் மலைச் சிகரத்துக்கே வண்டியைக் கொண்டுபோய் விட்டான். வெற்றிக் களிப்புடன் அவன் சந்தோஷ ஆரவாரம் செய்யும்போது பிடியைத் தளர விட்டு விட்டான். உடனே அவன் வண்டியும் கீழே உருண்டு அத்தனை பானைகளும் உடைந்து நொறுங்கிவிட்டன.

மூவருடைய பானைகளும் நொறுங்கி விட்டன என்றாலும் அவர்கள் உற்சாகத்தை இழக்காமல் மலையில் உட்கார்ந்து பேசத் தொடங்கினார்கள்.

முதலாமவன் சொன்னான்: ''என் வண்டி தான் முதலில் உருண்டது. அதுவே நல்லதாய்ப் போய்விட்டது. உச்சி வரையிலும் தள்ளிக் கொண்டு போனபிறகு உருண்டிருந்தால் என் சக்தியும் உழைப்பும்தான் வீணாகியிருக்கும். அப்படி வீணாகாமல் காப்பாற்றிக் கொண்டதால் நான் சாமர்த்தியசாலியே.''

இரண்டாமவன் சொன்னான்: ''நான் சிரமப்பட்டாலும் பாதி தூரம் வரை வண்டியைத் தள்ளி விட்டேன். இந்த வெற்றியைத் தேடிக் கொண்டு விட்டதால் நான் சாமர்த்தியசாலி என்பதில் சந்தேகமில்லை.''

மூன்றாமவன் கூறியதாவது: ''மலைச் சிகரத்துக்கே நான் வண்டியைக் கொண்டு போய்விட்டேன். அது என் தனிப் பெருமை.

நான் சாமர்த்தியசாலி என்பதற்கு வேறு சான்று தேவையில்லை.''

கடைசியில் மூவரும் சேர்ந்து: ''நம் முடைய பானைகள் யாவும் உடைந்து நொறுங்கிவிட்டன என்றாலும் நம் மூவ ரிடமும் சாமர்த்தியம் இருக்கிறது'' என்று சொல்லி, உற்சாகத்துடன் தங்கள் காலி வண்டிகளைத் தள்ளிக் கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

## பாம்பும் இசையும்

ஒரு பாம்பு புற்றிலிருந்து வெளியே தலையை நீட்டியபோது ஒரு மைனாவைப் பார்த்தது. உடனே அதைக் கொன்று விட்டது. அந்த மைனாவின் ஜோடியான பெண் மைனா தன் துணைவன் கொல்லப் பட்டு இறந்ததற்காக ஆத்திரமும் சோகமும் கொண்டு நெஞ்சைப் பிளக்கும்படியாகக் கதறி அழுதது.



மைனாவின் அழுகையொலியை அவ் வழியே வந்த ஒரு சங்கீத வித்வான் கேட் டான். ''இந்த ஒலி என் உள்ளத்தைக் கிளறி எனக்கு ஆத்திரத்தையும் சோகத்தையும் உண்டுபண்ணுகிறதே! ஒலியினால்தான் இவ் வாறு ஆத்திரத்தையும் சோகத்தையும் வெளியிட முடியும்'' என்று சொல்லிக் கொண்டு மைனாவின் அழுகையொலியைப் போல் ஒரு ராகத்தைத் தயாரித்து அதைத் தன் வாத்தியத்தில் வாசிக்கலானான். அதைக் கேட்டவர்களுக்கெல்லாம் ஆத்திரமும் சோக மும் ஏற்பட்டு ரத்தமும் கொதிக்கத் தொடங் கியது. உடனே அத்தனை பேரும் சேர்ந்து பாம்பைக் கொல்லப் புறப்பட்டுவிட்டார்கள்.

கலை என்பது நீதியை நிலைநாட்டுவதற்கே. அது அக்கிரமத்தை யெல்லாம் ஒழிக்கும் படி மனிதர்களைத் தூண்டிவிடக் கூடிய தாகும்.

## சேவலும் பூரானும்

ஓரே ஓர் அங்குல நீளமுள்ள சின்னஞ் சிறு பூரான் குஞ்சு ஒன்றை ஒரு சேவல் பார்த்தது. உடனே இறகுகளைச் சிலிர்த்துக் கொண்டு தன் முழு பலத்தையும் பிரயோகித்துப் பூரான் குஞ்சை நோக்கிப் பாய்ந்தது. அதை அப்படியே கொத்தி விழுங்கிவிட்டது.

பக்கத்திலிருந்த ஒரு வாத்து சேவலின் வீராவேசத்தையும் பாய்ச்சலையும் பார்த்து, ''இது என்ன பயங்கரமான ஒரு யுத்தமா? பூரான் குஞ்சைக் கொத்தி விழுங்க இவ் வளவு வீராவேசம் தேவையா? உன் ஆவேச மும் பலப் பிரயோகமும் மலைகளையே பெயர்த்துவிடும் போலிருக்கிறதே!'' என்று கேலியாகச் சொன்னது.

''வேறு என்ன செய்வது? விரோதி எவ் வளவு அற்பமானவனாக இருந்தாலும் அவனை விரோதியாகத்தானே பாவிக்க வேண்டும்?'' என்று கூறியது சேவல்.

## பாம்பும் முயலும்

முயலின் சுதந்திரத்தைக் கௌரவிக்க வேண்டும், அதன் வீட்டில் போய் யாரும் அத்து மீறிப் பிரவேசிக்கக் கூடாது என்று நினைத்த பாம்பு அதற்காக ஒரு சட்டமே இயற்றியது. பிறகு பாம்பு முயலிடம் சென்று தான் இயற்றிய சட்டத்தை அறி வித்து, ''இனிமேல் உன் வீட்டுக் கதவைத் தட்டாமலும் உன் அனுமதியைப் பெறாமலும் நானே வந்து உள்ளே நுழைந்தாலும் சரி, என்னை எதிர்த்துப் புகார் செய்ய உனக்கு உரிமை உண்டு'' என்று கூறியது.

முயல் சட்டத்தின் துணை கொண்டு புகார் செய்கிறதா என்று சோதித்து அறி வதற்காக மறுநாள் அதன் வீட்டுக்குள் பாம்பு அத்துமீறிப் பிரவேசித்தது. பிறகு வெளியே வந்து, முயல் புகார் செய்வதை எதிர்பார்த்துக் கொண்டு காத்து நின்றது. வெகு நேரம் காத்திருந்தும் முயல் புகார் செய்ய வெளியே வரவில்லை. உடனே பாம் புக்குக் கோபம் வந்து விட்டது. பழையபடி யும் உள்ளே போய், ''நீ ஏன் சட்டப்படி நடக்கவில்லை?'' என்று கேட்டது பாம்பு.



''நீயே குற்றவாளியாகவும் நீயே நீதி பதியாகவும் இருக்கும்போது, நான் எந்தக் குற்றவாளியைப் பற்றி எந்த நீதிபதியிடம் போய்ப் புகார் செய்வது?'' என்று கேட்டது முயல்.

பாம்பினால் கோபத்தை அடக்கவே முடியவில்லை. முயலை அப்படியே கவ்வி விழுங்கிவிட்டது. பிறகு பாம்பு பின்வரு மாறு ஓர் அறிவிப்பைப் பிரகடனம் செய்தது:

''இன்று இந்த முயலை நான் கொன்ற தற்கும், இதற்கு முன் மற்ற முயல்களைக் கொன்றதற்கும் வித்தியாசம் உண்டு. இப் பொழுது நான் சட்டப்படி நடவடிக்கை எடுத் திருக்கிறேன் — கைது செய்ததிலிருந்து மரண தண்டனை விதித்தது வரை.''

கோபாலன் தெருவோடு மனத்தில் அவசரமும், நடையில் வேகமுமாய்ப் போய்க் கொண்டிருந்தான். ஒரு கையில் இட்டிலிப் பொட்டலம்; மற்றொன்றில் காப்பிக் கூஜா. இரண்டுமே சூடாய்க் கட்டன. சூடு ஆறிப் போவதற்குள் போயாக வேண்டும்.

இன்னும் வேகமாய் நடந்தான் அவன்.

''ஏய், அசட்டுக் கோபாலா!''

சுப்புணி மாமா திண்ணையில் வாசனைப் புகையிலையை டப்பிக்குள் அடைத்துக் கொண்டே உட்கார்ந்திருந்தவர் அவனுடைய அவசர நடைக்குத் தடை போட்டார்.

''ஏன் மாமா?''

''என்ன காலை வேளையில் இத்தனை ஓட்டம்?''

''அவசரந்தான் மாமா! சாவடியில் இன்ஸ்பெக்டர் காத்துக் கொண்டிருப்பார். போகணும்!''

''அடி சக்கை! நடக்கட்டும். ஏண்டா, கோபாலா! எனக்கு எப்போடா சாப்பாடு போடப் போறே?''

''ஏன் மாமா, இப்படிக் கேட்கிறேள்? மாமி ஊரிலே இல்லையா?''

''போடா, அசடு! நான் கல்யாணச் சாப்பாட்டைக் கேட்கிறேன்.''

''அதுக்குத்தான் மாமா, ஏற்பாடெல்லாம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். கூடிய சீக்கிரம் பாருங்கோளேன்.''

''நீ கவலைப்படாதே அம்மா. அக்காவின் கல்யாணத்தை நான் நடத்தி வைக்கிறேன்'' என்று கோபாலன் அலட்சியமாகச் சொன்னான்.

பெற்றவளுக்கே அவன் பேச்சு வேடிக்கையாக இருந்தது. வெறும் கை அதோடு அவனுடைய சமர்த்தும் தெரிந்ததுதானே!

ஆனால் எதையும் அலட்சியமாகக் கேட்டுவிட்டு, கொஞ்ச நேரத்தில் மறதியில் நழுவ விட்டுவிடும் கோபாலனுக்குப் பத்மா கல்யாண விஷயம் மட்டும் நினைவில் தீவிரமாக விழுந்து விட்டது. அதற்கு ஏற்றாற்போல் இந்தப் புதிய ரெவின்யூ இன்ஸ்பெக்டர் பாஸ்கரன் வந்து சேர்ந்தான்.

அது ஓர் 'இரண்டும் கெட்டான்' ஊர். ஹோட்டல் வசதி கிடையாது. பாஸ்கரனை முதல் நாளே அறிமுகம் செய்து கொண்டான் கோபாலன். அவன் ஒரு பிரம்மச்சாரி என்பதையும் புரிந்து கொண்டான். வாரத்தில் நாலைந்து நாட்கள் வந்து தங்கிவிட்டுப் போய் விடும் பாஸ்கரனின் உணவுப் பிரச்னைக்கு அவன்தான் தீர்வு கண்டான். அம்மாவிடம் சொல்லி, பாஸ்கரனுக்குக் காப்பி, டிபன், சாப்பாடு எல்லாம் தயாரிக்கச் சொல்லித் தானே கொண்டு போய்க் கொடுத்தான். அவ்வப்போது பாஸ்கரன் எல்லாவற்றுக்கும் கணக்குப் போட்டுப் பணத்தைக் கொடுப்பான்.

# நான் வேண்டாம்

## கு. வெங்கடரமணி

''சார்! பணம் கொடுங்கோ, வாங்கிக்கறேன். ஆனால் பணத்துக்காக மாத்திரம் நான் இதெல்லாம் செய்யலே'' என்று ஒரு நாள் அஸ்தி வாரம் போட்டான்.

''அடேடே! எமப் பயலா இருக்கியே! பெண் யாருடா?''

''மாமா! என் கல்யாணத்தைக் கேட்கிறேளா? முதல்லே என் அக்காவோடே கல்யாணம். அப்புறந்தான் எனக்கு. அக்கா கல்யாணத்துக்குத்தான் ஏற்பாடு பண்ணிக் கொண்டிருக்கேன்.''

''சீக்கிரமா அதை முடிச்சுடு. உனக்கும் வயசு ஆகிறதே!''

''சரி, மாமா!''

கோபாலன் அவரிடமிருந்து நழுவிஓடுகிறான்.

இருபத்திரண்டு வயது முடிந்து விட்டது அவனுக்கு. அவன் அக்காள் பத்மாவுக்கு மூன்று வயது அதிகம். இருவருக்கும் வயதான அம்மாவைத் தவிர யாருமில்லை. வசதியும் இல்லை. அம்மா வயதான உடலோடு ஊருக்கு உழைத்து விட்டு அடுப்புப் புகைய வழி செய்து கொண்டிருந்தாள். கோபாலன் ஊரில் அசட்டுப் பட்டம் கட்டிக் கொண்டாலும் ஓடி ஆடித் தன் உடலால் முடிந்ததை எல்லோருக்கும் செய்து உதவிக் கொண்டிருந்தான். அவனுக்குப் படிப்பு வரவில்லையே என்று அவனோ அவன் அம்மாவோ கவலைப்படவில்லை. படிக்க வைக்க வசதி இல்லாதபோது அது அவசியமற்ற கவலைதானே?

பத்மாவுக்குக் கல்யாணம் ஆகவில்லையே என்றுதான் அவன் அம்மா கவலைப்பட்டாள்; புலம்பிக் கொண்டேயிருந்தாள்.

''பின்னே எதுக்காகவாம்?''

''சொல்ல மாட்டேனு? அவசரப்படக் கூடாது. அதுக்குச் சமயம் வரணும்.''

கோபாலன் மனத்துக்குள் பாஸ்கரன் பத்மாவுக்கு ஏற்ற வரன் என்று புள்ளி போட்டு விட்டான். அவசரப்படாமல், பாஸ்கரனின் சம்மதத்தைப் பெறுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தான். எப்பொழுது என்ன வேலை சொன்னாலும் அலுத்துக் கொள்ளாமல் செய்தான்.

தெருக்கோடிக்கு வந்துவிட்டான் கோபாலன். சந்தில் திரும்பிக் கொஞ்ச தூரம் போனால் சாவடிக் கட்டடம்தான். 'இன்றைக்கு இன்ஸ்பெக்டர் ஏழெட்டு மைல் தாண்டி ஒரு கிராமத்துக்குப் போகிறார். வில்வண்டி தயாராய் இருக்கும். அவரோடு நானும் போகப் போகிறேன். வரும்போது நிறையப் பேசலாம். மெள்ள மெள்ளப் பத்மாவைப் பற்றி அவரிடம் சொல்லி...', போகிற வேகத்தில் கோபாலனின் உள்ளத்தில் திட்டம் தயாராகிக் கொண்டிருந்தது.

கல்யாணம் என்பது அவ்வளவு சின்ன விஷயமா, அவ்வளவு சீக்கிரம் அதைப் பேசி முடித்துவிட முடியுமா என்று அவன் யோசிக்கவும் இல்லை; கவலைப்படவும் இல்லை.

'இன்ஸ்பெக்டர் நல்லவர். என்கிட்ட அன்பாய் இருக்கிறார். நான் சொன்னால்

எனக்காக நிச்சயம் சம்மதிப்பார்'' என்று தான் அவன் நம்பினான்.

தெருவைக் கடந்து சந்துக்குள் நுழைந்தான் கோபாலன். அங்கேராயர் தோட்டத்தில் கிணற்று ராட்டினம் வேகமாய் உருளும் ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. திரும்பிப் பார்க்க நேரமில்லை; நேராகப் போய்க் கொண்டிருந்தான் அவன்.

''கோபு, கோபு!''

வேலிக்கு அப்பாலிருந்து ஒரு குரல் அழைத்தது. உடனே கூப்பிடுவது யார் என்று புரிந்து விட்டது அவனுக்கு. எல்லாரும் அவனை 'டேய் கோபாலா!' அல்லது 'ஏய் அசட்டுக் கோபாலா!' என்றுதான் அழைப்பார்கள். கல்யாணி ஒருத்திதான் அவனைக் 'கோபு' என்று கூப்பிடுவாள். அவள் குரலில் தான் மதிப்பும் பரிவும் நிரம்பி வழியும்.

''ஏன் கல்யாணி?'' என்று கேட்டுக் கொண்டே வேலியைக் கடந்து தோட்டத்துக்குள் போனான் அவன்.

கல்யாணி சுற்றிலும் பார்வையை ஓட விட்டுக் கொண்டே, ''அவசரமாய்ப் போகிறாயா?'' என்று கேட்டாள்.

''எந்த விஷயமும் உனக்கு அப்புறம்தான். என்ன விஷயம் கல்யாணி?''

''நானும் ஓர் அவசரமான சேதி சொல்லத்தான் கூப்பிட்டேன். அம்மா என் கல்யாணத்தை நடத்திப்பிடணும் என்று அப்பாவை நச்சரிக்கிறாள். அப்பாவும் முயற்சி பண்ண ஆரம்பித்து விட்டார்.''

''ஓ அப்படியா?''

''இது என்ன கேள்வி?''

''பின்னே?''

''நான் உன்னை, உன்னைத்தான்—''

''என்னை, என்னையா?''

''உம்....''

கல்யாணியின் பெரிய பெரிய கண்கள் ஓர் அதிசயமான தீர்மானத்தைப் பளிச்சிடச் செய்து விட்டுத் தாழ்ந்தன.

கோபாலனுக்குப் பரவசமாக இருந்தது. இத்தனை நாட்கள் எத்தனை பேச்சுப் பேசியிருக்கிறாள்! இதைச் சொல்லவே யில்லையே?

''கல்யாணி, இன்னும் ஒரே மாசம். அதுக்குள்ளே எப்படியும் என் அக்கா கல்யாணம் நிச்சயமாயிடும். அப்புறம், அப்புறம்....''

அவனுக்கு மேலே என்ன சொல்வது என்றே தெரியவில்லை.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ அப்பாவிடம் பேசிக்கோ. நான் அம்மாவிடம் ஒரே பேச்சாய்ச் சொல்லி விடுகிறேன்.''

''சரி, கல்யாணி'' என்று சொல்லி விட்டு, இன்ஸ்பெக்டர் நினைவு வரவே சாவடிக்கு விரைந்தான் கோபாலன்.

**பா**ஸ்கரனிடம் எப்படியோ பத்மாவைப் பற்றிப் பேசி, அவனை அன்று பகல் சாப்பாட்டுக்குத் தன் வீட்டுக்கே அழைத்து வந்துவிட்டான் கோபாலன். பத்மாவையும் அப்படியே பார்த்து விடுவதாக ஏற்பாடு.

அன்றைக்குச் சாப்பிட வந்த பாஸ்கரன், பிறகு அடிக்கடி தானாகவே வந்தான். காப்பியும் டிபனும் தூக்கிக்கொண்டு போகிற வேலை கோபாலனுக்கு வரவரக் குறைந்துகொண்டே வந்தது. பாஸ்கரன் முன்னைவிட அதிக அக்கறையோடு அவனிடம் பேசிப் பழகினான்.

''என்ன சார், என்ன சொல்கிறேன்? பத்மாவைக் கல்யாணம் செய்துகொள்ளச் சம்மதம்தானே?'' என்று கேட்டான் கோபாலன்.

''உன் பேச்சைத் தட்ட முடியுமா? சம்மதம்தான்.''

ஒரு மாதத்துக்குள் கல்யாணமே நடந்து முடிந்து விட்டது. வீட்டை விலைக்கு விற்றதில் கல்யாணச் செலவு நடந்தது.

**கோ**பாலன் அசதியோடு திண்ணையில் சுருண்டு படுத்திருந்தான். உள்ளே முன் புறத்து அறையில் பேச்சுக் குரல் கேட்டது.



# மபத்லால் க்ரூப் ஸூட்டிங்குகள்

'டெரீன்'/காட்டன். 'டெரீன்'/அக்ரிலிக். 'டெரீன்'/விஸ்கோஸ்,
"டெபிலேஸ்டு" மற்றும் "ம:பிலேஸ்டு" ரகங்கள்.

**மபத்லால் க்ரூப்** நியூ ஷொராக், (ஷொராக்) அஹமதாபாத் . நியூ ஷொராக், நாடியாத் ஸ்டாண்டர்ட், பம்பாய் . ஸ்டாண்டர்ட், (நியூ சைனா) பம்பாய் . ஸ்டாண்டர்ட், தேவாஸ . ஸாஸுன், பம்பாய் . ஸாஸுன், (நியூ யூனியன்) பம்பாய் . ஸூரத் காட்டன், ஸூரத் . மபத்லால் பைன், நவ்ஸாரி . மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அஹமதாபாத்.




M. 194 TM

"பாவம்! உன் தம்பி! அவனுக்காகத் தான் கல்யாணத்துக்குச் சம்மதித்தேன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்."

"பின்னே எப்படிச் சம்மதித்தீர்களாம்?"

"அதை என் வாயால் சொல்லிக் கேட்க ணும் என்று உனக்கு ஆசை! நீ இப்படி — இத் தனை அழகாய் இருக்கியே, அதனால்தான்!"

"கோபாலன் கொஞ்சம் ஒரு மாதிரி— அசடுதான்!"

பாஸ்கரனும் பத்மாவும் கலகலவென்று சிரித்தார்கள்.

கோபாலன் எழுந்து உட்கார்ந்தான். 'நான் ஒரு மாதிரியா?'

சுப்புணி மாமா 'ஏ அசட்டுக் கோபாலா!' என்று அழைப்பது ஞாபகம் வந்தது. ஊரில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாய் அழைப் பதும் ஞாபகம் வந்தது. அத்தனைக்கும் அவன் கோபித்துக் கொள்ளவே யில்லை. சிரித்துக் கொண்டே அவர்கள் சொன்னதை யெல்லாம் செய்தான். 'நான் அசடுதானோ?'

கல்யாணி மட்டும் 'கோபு, கோபு' என்று பரிவோடு அழைத்துப் பேசுவதையும் எண் ணிப் பார்த்தான்.

"நீ மாத்திரம் ஏன் இப்படிக் கூப்பிடறே?" என்று ஒரு தடவை அவளையே கேட்டிருக் கிறான். அவள், "ஏனோ எனக்கே தெரி யாது" என்று சிரித்து மழுப்பி விட்டாள்.

அவள் எவ்வளவு நல்லவள்?

ஊரில் அவள் மட்டும்தான் நல்லவள் என்று இப்போது அவனுக்குத் தோன்றியது.

கோபாலன் எழுந்து நின்றான். அவன் உடல் முழுதும் ஒரு புதிய உணர்ச்சி பரவியது.

'நானும் சமர்த்தாய் ஒரு காரியம் செய்ய வேண்டும்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே தெருவில் இறங்கிக் கல்யாணி யின் வீட்டை நோக்கி வேகமாக நடந்தான்.

முற்றத்துக் கொடியில் துணி உலர்த்திக் கொண்டிருந்தாள் அவள். வீட்டில் வேறு யாரும் இல்லை. "கல்யாணி!"

அவள் திரும்பிப் பார்த்தாள்.

"நீ அன்னிக்குக் கிணற்றடியில் சொன் னியே?"

அவள் தலை கவிழ்ந்து கொண்டாள்.

"கல்யாணி! எனக்குத் தெரிஞ்சவரைக் கும் இந்த ஊரில் நீதான் நல்லவள். அதனாலே சொல்றேன். நீ வேறே யாராவது நல்ல சமர்த்துப் பையனைக் கல்யாணம் பண் ணிக்கோ. நான் வேண்டாம்!" இதைச் சொல்லிவிட்டு, பதிலுக்குக் காத்திராமல் திரும்பித் தெருவுக்கு வந்து, எங்கோ கால் போன வழியில் நடந்தான் கோபாலன்.

## 40, 140 ரன்கள் எடுத்தவர் இவரே!



உலகில் விரல்விட்டு எண்ணக் கூடிய தலை சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர்களில் யார்க்ஷயர் லென் ஹட்டன் ஒருவர். பாட்ஸ்மன் ஹட்டன், பலவிதமான கோணங்களில் கண்ணைப் பறிக்கும்படி ஆடி ரன்களைப் பெருக்கு வதைவிட, நின்று நிலைத்து ஆடி, எண்ணிக்கை எடுப்பதில் பயிற்சி பெற்றவர். அவர் முன் நோக்கிப் பாய்ந்து சென்று பந்தை அடிப்பதே சிறந்தது என்ற நம்பிக்கை கொண்டவர். ஆனால் பல தலைசிறந்த ஆட்டக் காரர்கள் பக்கவாட்டிலும் பின்னும் நகர்ந்தே பந்தை அடிப்பார்கள். ஹட்டன் ஆடும் முறை தலை சிறந்தது என்பதைக் கிரிக்கெட் சரித்திரப் புத்தகங்களே நிரூபிக் கின்றன. 6971 ரன்களை டெஸ்ட் பந்தயங்களில் குவித் துள்ளதும், ஒரே சீஸனில் 3429 எண்ணிக்கை எடுத்த தும், 1938ல் ஓவல் பந்தயத்தில் ஆஸ்திரேலிய ஆட்டக் காரர்களுக்கு எதிராக 364 ரன்கள் போட்டதும், பலரகக் கிரிக்கெட் ஆட்டங்களிலும் மொத்தமாக 40, 140 ரன்கள் எடுத்துள்ளதும் அவர் ஆட்டத்தின் சிறப்பினுக்குச் சான்றுகள்.

ஆனால் இந்த எண்ணிக்கை மட்டுமே ஹட்டனின் ஆட்டத் திறமையையும், நிபுணத்துவத்தையும் விளக்கி விடாது. எவ்வளவு தேர்ந்த பந்து வீச்சும், பீல்டிங் அமைப்பும் இருந்தபோதிலும், ஹட்டன் ஆள் இல்லாத பக்கத்தில் அநாயாசமாகப் பந்தைத் தட்டி எண்ணிக்கை யைப் பெருக்கும் திறன் படைத்திருந்தார்.

ஹட்டன் கிரிக்கெட் ஆட்டத்திலிருந்து ஓய்வு பெறப் போவதாக அறிவித்தபோது, கிரிக்கெட் மேதை பீட்டர் மே கூறினார்: "லென் ஹட்டன் உடல் நலக் குறைவால் ரிடையர் ஆகப் போகிறார். இந்நாள்வரை நான் ஹட்டனுடன் சேர்ந்து 'பாட்' செய்யும்போது எதிர்ப் பக்கம் நின்று அவர் ஆட்ட நுணுக்கங்களைக் கவனிப்பேன். அப்போதெல்லாம் நான் மாணவனாகி விடுவேன். அவர் தலைசிறந்த குரு. நன்றி மறவாத மாணவன் நான்!"




## ☐ தேசபக்தரின் நிலை

## ☐ இன்னல் தீருமா?

## ☐ புனித உணர்வு

**ப**ழம்பெரும் தேசபக்தர் பரலி சு. நெல்லையப்பர் இன்றைக்கு 60 ஆண்டுகளுக்கு முன் கப்பலோட்டிய தமிழருடன் சிறை சென்றவர். புதுச்சேரி சென்று மகாகவி பாரதியாருடன் அக்ஞாதவாசம் செய்ததுடன் அவருடைய வந்தேமாதரம் பாடல்களையும் இன்றைக்கு 50 ஆண்டுகளுக்கு முன், அதிகாரிகளின் அடக்குமுறையால் நாட்டில் அச்சமே உச்சமாயிருந்த காலத்தில் சென்னையில் அச்சிட்டு அவரைப் பற்றிப் பிரசாரம் செய்தவர். பிற்காலத்தில் மகாத்மா காந்தியின் நூல்களை அச்சிட்டு வெளியிட்டதுடன் அவரது கொள்கைகளையும் அதிகமாகப் பிரசாரம் செய்தவர். 1941ம் ஆண்டு சத்யாக்கிரகத்தில் ஈடுபட்டு ஆறு மாதங்கள் சிறை சென்றவர். லோகோபகாரி பத்திரிகை வாயிலாக அவர் நாட்டில் தேசபக்தியையும் தெய்வ பக்தியையும் பரப்பி வந்தார்.

தேசம் விடுதலை அடைந்தபின் அவருடைய வாழ்க்கை நிலை மிகவும் வருந்தத்தக்க நிலைமையில் இருந்ததால் அவருக்குக் கல்விமான்களுக்குரிய உபகாரச் சம்பளம், கிடைக்கும்படியாக மத்திய அரசாங்கத்தார் செய்தனர். எண்பது ஆண்டுகளை அவர் நெருங்கிக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் இந்த ஆண்டில் புதுப்பிக்கப்பட வேண்டிய பென்ஷன் மார்ச் மாதம் முதல் முற்றிலும் நின்றுவிட்டது. திரு நெல்லையப்பரின் பென்ஷனைப் பற்றி இந்திய அரசாங்கத்தாருக்குப் பல முறை கடிதம் எழுதியும் பயனில்லை. தனது தேர்தல் பிரசாரத்துக்கு இந்தப் பழைமையான தேசபக்தரின் பாடல்களைப் பயன்படுத்திக் கொண்ட தி. மு. க. அரசாங்கம் முதுமை காரணமாக உடல் நலம் குறைந்தும், கண் பார்வை குறைந்தும் வாழ்கிற இப்பெரியாருடைய நிலைமையை உடனே கவனித்து ஆதரவு அளிக்க வேண்டும்.

சென்னை-44.

(எதிரொலிகள்) க. விசுவநாதன்

**வி**வசாயத்துக்குத் தண்ணீர் வந்தவுடன் சாகுபடி செய்யவும், அவசியம் ஏற்பட்டால் முதலாண்டு இறந்த மாட்டுக்குப் பதில் மாடு வாங்கவும் கையில் பணம் இருக்காது. நிலத்தின் பேரில் கடன் கேட்டாலும் யாரும் கொடுக்க மாட்டார்கள். அதனால் தன் பெண் பிள்ளைகள் அணிந்திருக்கும் சிறு அணிகளை நகரங்களில் கொண்டு போய் அடகு வைத்து மாடு வாங்கிச் சாகுபடி செய்ய வேண்டியுள்ளது. பகலிலும் இரவிலும் பனியிலும் மழையிலும் நெற்றி வியர்வை நிலத்தில் விழ ஓயாமல் உழைக்கிறான். ஏராளமாய்ச் செலவு செய்த பின் அறுவடையாகிற தானியத்தை ஆட்சியிடத்தார் நிர்ணயித்த சொற்ப விலைக்கு அதிகாரிகள் வாங்கிக் கொண்டு போய் விடுகின்றனர். அவர்கள் கொடுத்த ரூபாயைக் கொண்டு விவசாயி நகரத்தில் அடகு வைத்த நகைகளைத் திருப்புவானா? உச்ச கட்டத்திலுள்ள நிலவரியைச் செலுத்துவானா? அதிக விலையில் விற்கும் மற்ற அத்தியாவசியப் பண்டங்களை வாங்கிக் குடும்பத்தை நடத்துவானா? தன் வீட்டிலும் மற்ற உற்றார் உறவினர் வீடுகளிலும் நடக்கும் விசேஷங்களுக்குச் செலவு செய்வானா? அரசினர் விடுத்துப் போன மீத நெல்லை அந்த ஆண்டு சாப்பாட்டுக்கென்று வைத்துக் கொள்வானா? இந்தத் தானியத்தைத் தவிர வேறு ஏதாவது வரும்படி தான் உண்டா? தீபாவளி போன்ற நன்னாளில்கூடப் புத்தாடை உடுத்த வகையில்லாது கந்தல் ஆடைகளையே கசக்கி உடுத்திக் காலம்கழிப்பானா? எப்படி ஜீவனம்செய்வான்?

ஆகையால் நம் தமிழ் நாட்டு முதல் அமைச்சர் அவர்களும் உணவு மந்திரி அவர்களும் கிராம மக்களைக் காப்பாற்றுவோம் எனக் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்து ஏழைகளின் இன்னல்களைத் தீர்க்க -

1. நிலவரியை ஆங்கிலேயர்கள் காலத்தில் இருந்தது போல் குறைக்க வேண்டும்; அல்லது நீக்க வேண்டும்.
2. மற்ற அத்தியாவசியப் பண்டங்களின் விலையைக் குறைக்க முயல வேண்டும்.
3. இல்லையேல் நெல்விலையைக் குவிண்டாலுக்கு இப்போது ஏற்பட்டுள்ள விலையைப் போல் இன்னும் அரை மடங்கு விலையாவது கூட்டி நிர்ணயித்து அவர்களுடைய குறைகளைத் தவிர்க்கவேண்டும்.

சித்தாலங்குடி நாகரத்தினம்பிள்ளை

"**வெ**ற்றியுள்ள மனிதனாக வாழ முயல்வதைக் காட்டிலும் நெறியுள்ள மனிதனாக வாழ முயல்வது சிறப்புடைத்து. தாம் வாழும் சமுதாயச் சூழலின் விருப்பு, வெறுப்புகளினின்றும் மாறுபட்ட கருத்துக்களைப் பற்றற்ற நிலையுடன் வெளியிடக்கூடியவர்கள் மிகச் சிலரே. பெரும்பாலோர் இவ்வகைக் கருத்துக்களைக் கொள்வதுகூட அரிது" என்றார் அமெரிக்க பௌதிக அறிஞர் ஆல்பர்ட் ஐன்ஸ்டின். அவ்வண்ணம் வெற்றியுள்ளவனாக மட்டுமின்றி நெறியுள்ள மனிதனாக வாழ்ந்து பற்றற்ற நிலையுடன் கருத்துக்கள் வெளியிடும் மிகச் சிலரில் முதன்மையாக விளங்கும் வேத வியாசர் ராஜாஜியின் பிறந்ததின மலரைக் கையில் எடுத்ததுமே மனத்தில் ஒரு புனித உணர்வு எழுந்தது.

சென்னை—43 இரா. பாலாஜி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

# கவர்ச்சியிலும்

மேன்மையை

நாடுங்கள் !



# செஞ்சுரியின்

மிகச் சன்னமான

# புடவை ரகங்கள்

தி செஞ்சுரி ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங்
கம்பெனி லிமிடெட்
பம்பாய் - 1

உற்பத்தித்திறனே வாழ்க்கையின் குறிக்கோள்

NPS/CM/121

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி

# லைப்பாய்

## இருக்குமிடம்: அதுவே...
## ஆரோக்கியம் இருக்குமிடம்




லைப்பாய் ஸ்நானம் . உற்சாகப் பெருக்கு . உல்லாச ஊற்று..
ஒவ்வொரு குளியலும் உணர்த்தும் : நல்ல சோப்புக்குரிய நன்மைகள்
யாவும் பெறலாம், அதற்கு மேலும் பெறலாம் ஆரோக்கியமுடன்.

**அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய்**

லின்டாஸ்.L. 52-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு